# இவர்கள்
# இன்னமும்
# இருக்கின்றார்கள்...



கவிஞர்

# வாலி

எழுதும் புதிய தொடர்...

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்...

அமர்க்களமான ஆரம்பம்...

சென்ற நூற்றாண்டில், தமிழ் மண் தரணிக்கு வழங்கிய
மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!
சின்னச் சின்ன வசன கவிதைகளாய்!

**இன்னும் பக்கத்துக்குப் பக்கம்**
**சுவையான விஷயங்கள்!**

கவிஞர்

# வாலி

எழுதும்

புதிய தொடர்...

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்...

சென்ற நூற்றாண்டில், தமிழ்மண்

தரணிக்கு வழங்கிய

மகத்தானவர்களின்

மகோன்னத வரலாறு!

சின்னச் சின்ன வசன கவிதைகளாய்!

ஜங்ஷன்

# தீபாவளி சிறப்பிதழிலிருந்து...

அமர்க்களமான
ஆரம்பம்...



சென்ற நூற்றாண்டில்,
தமிழ் மண் தரணிக்கு வழங்கிய
மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்...

## கவிஞர் வாலி

படம்: ஆர். சண்முகம்



### 1. பெரியவாள்

ஆயிரத்து இருநூறு -
ஆண்டுகள் முன்னம்...

ஆரியாம்பாள் ஈன்றனள் - ஓர்
அழகு மதலை; அவள் -
அவ்வாறு ஈன்றெடுத்தது - அவ்
ஆதிமுதலை; அதைத்தான்
ஆதிசங்கரர் ஆக்கியது - ஓர்
ஆற்று முதலை!

காலடி பிறந்தவன்
காலடி பதிந்திடாத
நாலடி - இந்த
நாட்டினில் இல்லை; திரு-
மாலடி போற்றி - அவன்

புதிய தொடர்

மொழிந்த பஜகோவிந்தம் போல் -
நாலடியொன்று - பிற
நாலோர் ஏட்டினில் இல்லை!

●●●

'அவன்தான் -
இவன்;
இவன்தான்.
அவன்!'

எனும்படி - இங்கு
எழுந்தருளினான்...

காஞ்சி -
காமகோடி - ஸ்ரீ
சந்திர சேகரேந்திர -
சரஸ்வதி; அந்த
இமயநதிக்கு இணையான - ஒரு
சமய நதி!

துவராடை தரித்த
திருவாசகத்தை; இரு
கால்கொண்டு - ஒற்றைக்
கோல்கொண்டு - இப்
படிமிசை உலவிய - அத்வைதப்
பெருவாசகத்தை;

கயிலைநீங்கி காஞ்சிவந்த - ஞான
வெயிலை; மன்பதையின் -
அவத்தைப் போக்க
பவத்தைப் போக்க -
தவத்தைப் புரிந்த
சிவத்தை;

அரிசிப்பொரி
அருந்தி -

அஞ்சு பொறி
அவித்த...

நுழைபுலம் மிக்க - ஒரு
நூற்றாண்டுக் கிழவனை; நம்
நெஞ்சை - ஒரு
நஞ்சை நிலமாக்க - விழி
நாஞ்சில் கொண்டு
நாளும் உழுத உழவனை;

அரசுமுதல் ஆண்டிவரை -
அறியும் 'பெரியவாள்' என்று;
அழுக்கு மனங்களில்
அப்பிக் கிடக்கும் -
அவலப் புதர்களை
அரியும் பெரிய வாள் என்று!

●●●

## 2. ரமணரிஷி.

விண்ணில் எழாது - ஒரு
பெண்ணில் எழுந்தது
ரமணன் என்னும் -
ரவி;
புன்மை இருள்
போயொழிந்து
புலர்ந்தது - இப்
புவி!

●●●



தன்னைத்
தானே விரும்பாதவன்;
வீடுபெற வேண்டி
வீடு விட்டு வந்தபின் -
வீடு திரும்பாதவன்!
அவன் -
ஆரையும் விழுத்தவல்ல -
நகைகள் மூன்றும்
நண்ணா மலை;



அமர்ந்த இடம்
அண்ணாமலை!

அவன்
அரிய குணங்களின் -
அற்புத
ஆவணம்;
கோவணம் கட்டிய - திருமுறைப்
பாவணம்!

குகை புகுந்த - வாலறிவின்
சிகை;
அதனுள் சுரந்த
ஆனந்தச் சுனையில் - ஞான
அரவிந்தமாய் - மடல்
அவிழ்ந்த முகை!

மான்;
மயில்;
ஆன்;
அஜம்;
அனைத்திடமும்
அன்பு பாராட்டினான் - ஒரே
அளவதாய்; அவன் ஓர் -
ஆண் தாய்!

'உன்னுள் இருக்கும்
உன்னை அறி;
நீயாகவே -
நிற்பான் அரி!'

உதவினான்
உபதேசம்;
உட்கார்ந்து கேட்டது
ஊர்; தேசம்!
'நான்' விட்டவன் - ஒருநாள்
வான் சென்றான்; செல்லுமுன்
'நான்' விட்டவன் - எவரும்
வான் செல்லலாம் என்றான்!

●●●

- இன்னமும் இருக்கின்றார்கள்-

தரணிக்கு வழங்கிய
மகத்தானவர்களின்
மகோன்னத வரலாறு!

கவிஞர் **வாலி**

## 3. பெரியார்

*தகவுமிக்க -*
*'தந்தை' என்றும்;*
*அறிவு மிக்க -*
*'அய்யா' என்றும்;*

*பெரியாரை - இப்*
*பூமி தொழும்; பெரியார் -*
*பேர் சொன்னால்*
*புந்தியில் - புத்தறிவு*
*வேர் விட்டு*
*விருட்சமாய் எழும்;*
*புராணம் என்னும்*
*புராதனமான -*
*பொய்ம்மைக் கட்டடம்*
*பொல பொலென விழும்; புதர்*
*மண்டிய -*
*மன்பதையின் -*
*மனவயல்களை - அவர் சொல்*
*மேழிபோல் உழும்!*

• • •

# இவர்கள் இன்னும் இருக்கின்றார்கள்



உடல் சிவப்பு;
உடை கறுப்பு;
உளம் வெளுப்பு; என -
உலாவந்த வாலறிவு நெருப்பு!

ஈரோட்டில் பூத்த - அந்த
ஈர நெருப்பு...

சமைத்துத் தந்தது -
சுய மரியாதையை;
சாம்பராக்கியது -
சுயமிழந்தோரின் மனவாதையை!

பெரியார் - எனும்
பெருந்தகையால்...

பெண்ணியம் - பெற்றது
கண்ணியம்; அது அதன் -
தண்ணியம் விடுத்து - ஏற்றது
திண்ணியம்!

பகுத்தறிவுக்கு ஒவ்வாததைப்
புரியார்;
தன்மான ஆடையல்லால் - வேறு
தரியார்;

கருத்தைக்
கருத்தால்...
எதிர் கொள்வாரேயன்றி
எதிர்க் கருத்தை -
எடுத்து வைப்பார் மாட்டு
எரியார்; தான் -
சொன்ன கருத்திநின்றும் -
சரியார்; அத்தகு
பெரியார்க்கு - இங்கு
சரி யார்?

## 4. அண்ணா

அறிவை -
ஆராதிக்கும் ஆருக்கும் -
'அண்ணா' எனில் - அண்ணிக்கும்
உண்ணா; அந்தப்

பேரின் சுவை - செவ்விள
நீரின் சுவை நல்க வொண்ணா!

மாசனம் கொண்ட
மனமெலாம் - அண்ணாவின்
ஆசனம்; அண்ணா சொல் -
சகல தமிழர்க்கும்
சாசனம்; அது -
பசித்துக் கிடந்த
பசுந்தமிழர் வயிற்றுக்குப்
போடப்பெற்ற - அறிவு
போசனம்!

தென்மதுரைத்
தமிழ்ச் சங்கம் -
காஞ்சிக்குக்
குடி பெயர்ந்தது...

இசைமிகு
இந்தப் -
பேரறிஞன்
பிறந்த பின்பு ;
இவனன்றோ
இருந் தமிழுக்குப் -
புகட்டினான்
புதிய தெம்பு!

● ● ●

இவன் பேசிவிட்டு -
இறங்கிய பின் ...

எல்லா மேடைகளிலும் -
ஈ மொய்க்கும்; ஈயினம் -
வார்த்தைக்கு வார்த்தை -
இவன்
வாய்வழி சிந்திய -
வண்ணத் தமிழ்த் தேனை -
உண்ண வாய்வைக்கும்!



'கால் முளைத்த
குறள்!' எனக் -
கூறும்படி - பேச்சில்
குவிப்பான் பொருள்;



சலவை
செய்தது போல்
வெளுக்கும் - கேட்க
வந்தவரின் அறியாமை இருள்!

அறிஞர் பெருந்தகை -
அண்ணா....

பகுத்தறிவுப்
பகலவனின் -
பிரகாசத்தை வாங்கிப்
பிரதிபலித்த நிலா;

தன்னுள் - தன்
தலைவனின் ....

கொள்கைச் சுளைகளைக்
கொண்டிருந்த போதும் -
மேலே - முட்கள்
மேவாத பலா!

அண்ணாவின் -
அன்பு நெஞ்சம் ....
மாற்றான் தோட்டத்து
மல்லிகை மீதும் -
பற்றுவைத்தது; அதில்
பாழும் காலம் புற்றுவைத்தது!

தமிழ்;
தமிழர்; என்று -

அன்புசால்
அண்ணாவின் -
இதயம் துடித்தது
இறுதி வரையில்; அதைக் -

கலைஞர் பெருமானுக்குக்
கொடுத்து விட்டு - ஒருநாள்
க்ண்ணுறங்கப் போனான்
கடற் கரையில்!

- இன்னமும் இருக்கின்றார்கள்...

ஜங்ஷன் 12.11.2002

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

## 5. வாரியார்.

அருள்மொழி
அரசு; சைவ -
சித்தாந்தத்தின்
சிரசு;
பாவப்பட்ட - நம்
பழ -
வினையெனும் - நச்சு
விருட்சத்தைப்
பிளக்க வந்த -
பரசு; வேண்டார் -
கல்லெறிந்தாலும் - வசைச்
சொல்லெறிந்தாலும் - சற்றும்
சலனமற் றிருந்த - செந்தமிழ்
சரசு!

●●●

கவிஞர் **வாலி**

சென்ற நூற்றாண்டில், தமிழ் மண்
தரணிக்கு வழங்கிய மகத்தானவர்களின்
மகோன்னத வரலாறு!



பஞ்சகச்சம் கட்டிநின்ற -
பஞ்சாட்சரம்; திருநீற்றுப்
பொடியினைப் பூசிநின்ற -
பெரிய புராணம்;

உருத்திராட்சம் அணிந்து நின்ற -
உபநிடதம்; எண்சாண்
உடம்பெடுத்து நடைபயின்ற-
ஓங்காரம்!

●●●

பாரியார்;
ஓரியார்;
காரியார்; எனக்
கடை வள்ளல் எழுவரெனினும்...

வாரியார் போல் - அருட்செல்வம்
வாரி யார் தந்தார்?
வார்சடையில் -
வானதியை -
வாரி யார் முடித்தாரோ - அவரே
வாரியாராய் வந்தார்!

●●●

வடமொழியும் தென்மொழியும்
விரல் நுனியில்; சமயக் -
குரவர்தம் தேவாரம்
குரல் நுனியில்;
தொல்லிசையும் மெல்லிசையும்
தொய்வின்றி-
ஆற்றொழுக்காய் ஓடிவரும்
அவர் தொனியில்!

●●●



ஞான ஊர்தியில்
ஞாலமெலாம் ஊர்ந்தார்; ஒருநாள் -
வான ஊர்தியில்
வான்போய்ச் சேர்ந்தார்!

●●●

## 6. எம்பார்.

அவர் நாக்கு
அறிவு நூல்களை
அடுக்கி வைத்த
அலமாரி;

அவர் வாக்கு
அக அழுக்குகளை
அலம்பிடும்
ஆனந்த வாரி;

கீர்த்தன -
குலசேகர -
எம்பார் விஜயராகவாச்சாரி -
எழுந்து நடந்த ஞானச் சேரி.

●●●

ஹரிகதையை -
ஹோமம்போல் செய்தார்;
ஆக்கை வியர்வையையே -
அவிசாகப் பெய்தார்;
கதா
காலட்சேபம் - என்னும்
துறட்டிகொண்டு - நம்
தொல்வினைகளைக் கொய்தார்;
வார்த்தைத் தறிகளில்
வாழ்க்கை நெறிகளை நெய்தார்!

ஜங்ஷன் 19.11.2002



அவரது ஞானம் -
ஆழங்காற் பட்டது;
அவரது புகழ்-
ஆகாசம் தொட்டது!

எம்பார் அளவு எவரும் இனி-
எம்பார்; அவர் -
இராமானுஜனின்
இளையோனான -
எம்பாரின் வம்சம்; அதே-
எம்பாரின் அம்சம்!

●●●

தில்லை விட்டுத்
திருவரங்கம் வந்த - தமிழ்க்
கொல்லை;
வந்தநாள் முதல்
வாழ்ந்த நாள் வரை - அதன்
வண்ணமும் வாசமும்
வாடவே இல்லை!

எம்பார் எனும் -
ஏழிசைப் பறவை ....

பூலோக வைகுந்தம் விடுத்து-
மேலோக வைகுந்தம் போனது;
இன்னொன்றை -
இட்டு நிரப்ப
இயலாதபடி - அது
இருந்த இடம் சூனியம் ஆனது!

-இன்னமும் இருக்கின்றார்கள்

ஜங்ஷன் 19.11.2002

செ‌ன்ற நூற்றாண்டில்,
தமிழ் மண் தரணிக்கு வழங்கிய
மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

## 7. பாரதியார்

அவன்
ஆனான் -
ஆண்
அவ்வையாக;
ஆக்கினான் - புதிய
ஆத்திசூடி செவ்வையாக!

● ● ●

பாரதியைப்
பார்த்த பின்புதான்...

அம்புவி
அறிந்து கொண்டது -
அறிவுத் தெய்வம் சரஸ்வதி
ஆண்பால் என்று;

மங்கையு மில்லை -
கொங்கையு மில்லை -
ஆயினும் -
அவனிடம் ...
சதா
சுரந்தது
சீம்பால் போலே - செந்தமிழ்த்
தீம்பால் அன்று !

● ● ●

'Q'வில் நின்றன -

கவிஞர் வாலி

குறில்களும் நெடில்களுமாய்...

தமிழ்ச் சொற்கள் -
தினம் தினம் -
திருவல்லிக்கேணியில் - அவன்
திருமாளிகை முனம்;

'அகராதியில்
அமராமல் - அய்யா! உன்
அந்தாதியில்
அமர்ந்தால் தான்...

எமக்கெலாம்
ஏற்படும் கனம்!' என -
ஒவ்வொரு சொல்லும் - அவனிடம்
ஓவாமல் சொல்லும்!

● ● ●



பூஞ்சாணம் பிடித்த
பாத்திரம் போலே...

இருந்தது
இத் தேயம்; எட்டய -
புரத்தான் தான் - அதற்குப்
பூசினான் ஈயம்!

தாகூர் -
தன்னையும் மிஞ்சும் - அவனது
நாகூர்; அந்த
நாவின் கூரால் - வருணம்
நான்கையும் வகிர்ந்தான்;

மேட்டுக் குடியையும் -
ஓட்டுக் குடியையும் -
பாட்டுத் தராசில் -
போட்டு நிறுத்து...

ஓர் எடை - என
ஓர்ந்து - எல்லாவற்றையும்
சகலருக்கும் -
சமமாகப் பகிர்ந்தான்!

● ● ●

'பெண் என்பவள் -
புடைவை கட்டிய ஆண்!
அவளுக்கு ஏன் -
அச்சம்; மடம்; நாண்?'

என -
எரிந்து -

மாதரார் முகங்களில் -
மீசை எழுதினான்; அதன்மேல் -

ஆண்; பெண்; நிகர் எனும் - தனது
ஆசை எழுதினான்!

தாழ்ந்து கிடந்தது -
தமிழச் சாதியின் கழுத்து;
தரையைப் பார்த்த -
தாடையைப் பிடித்து - 'நீள்
வரையைப் பார்!' என - நிமிர்த்தி
விட்டதவன் எழுத்து!

● ● ●

மோனைக் காலில் -
முத்தமிழை நிறுத்தி - ஒருநாள்
ஆனைக் காலில் -
அடிபட்டுப் போனான்;
போனதுபோல் போய்ப் -
போகாதவன் ஆனான்!

## 8. பாரதிதாசன்



முண்டாசு;
முறுக்கு மீசை;
மூலைக் கச்சம்; இந்த -
மூன்றும் இல்லையே தவிர ...

இவன் -
இன்னோர் அவன்தான்;
இருந்தமிழ் -
இயற்றிய தவம்தான்!

அகவை முப்பத்தொன்பதிலேயே -
அவன் முடிந்து போனதால்...

விட்டுப் போன -
விஷயங்களை ...

அவன் சொன்னான் -
இவன்மூலம்;
அவன் தானே -
இவன் மூலம்!

● ● ●

பணிகள்
பாக்கியிருந்ததனாலே...

பாரதிதான்
பாரதிதாசனாய் நீண்டான்;
[illegible] கொவ்வாத
பழம் -
பஞ்சாங்கங்களைப்
பாட்டு நகங்களால் கீண்டான்!

புரட்சிக் கவியாகப் -

பூத்து...

தொய்ந்து கிடந்த
தொன்மைத் தமிழ்க்குடிக்கு -
மைந்து கூட்டினான்; தன்
மானச்சோறு ஊட்டினான்!

சிந்து எனும்
சிலம்பம் சுழற்றினான்;
வந்து தமிழை
விழுங்கத் துணிந்த -
பகோதிகளின்
கபாலம் கழற்றினான்;

தமிழையும் -
தமிழரையும் -
பிறமொழி வெப்பம்
பிடித்து விடாமல்...

கவிதைக்
குடையை
நீள விரித்து -
நாளும் நிழற்றினான்!



● ● ●

விதவைக்குப் பொட்டுவைத்தான்; மத
வெறியர்க்குக் குட்டு வைத்தான்;
தமிழ்த்
துப்பாக்கியில் -
பாட்டுத் தோட்டாக்களைப்
போட்டு நிரப்பி -

பெண்ணடிமை பேணிநின்ற -
பேயரைச் சுட்டுவைத்தான்;
திருந்தாதார்
தம்மைக் - காலம்
திருத்தட்டும் என்று
தண்ணளியால் விட்டுவைத்தான்!

● ● ●

பாதம் முளைத்த
பசுந்தமிழாக - எங்கள்
பாரதி தாசனென்னும்
பாட்டரசு -
உலவிய -
ஊர் என்பதால்...

புதுவை மண்ணைப்
பூசிப்பேன்; விபூதியாய்ப்
புதுவை மண்ணைப்
பூசிப்பேன்!

- இன்னமும் இ..

26.11.2002

# "மணியார்டர் வந்தால் நாங்கள் குபேரப் பிரபுக்கள்தான்!"



"மணிக்கொடி பத்திரிகையை எப்படி நடத்தினார்கள் என்ற விஷயத்தை புதுமைப்பித்தன் என்னிடம் ஒருநாள் ரசமாகச் சொன்னார்.

'...பத்திரிகை எங்கள் ராஜ்ஜியத்துக்கு வந்தது. வரும்போது அச்சடிக்கிறவனுக்குக் கொடுக்கப்பட வேண்டிய பாக்கி பதினெட்டே முக்கால் ரூபாய். வரவேண்டிய பணமும் அதிகம் ஒன்றுமில்லை. ஒழுங்காக வருவதுமில்லை. பசி, பட்டினி என்பவை பிரச்னைகள் அல்ல, பழகிப்போன விவகாரம். இந்தச் சமயத்தில் கி.ரா.வும் எங்களோடு வந்து சேர்ந்து இலக்கியச் சேவைக்குத் துணிந்துவிட்டார். பிரஸ்காரனோ பணத்துக்கு நெருக்குவான். ஆபீஸ் நாற்காலி, மேசை அத்தனையும் வாடகைக்கு. வாடகை என்பது பெயரளவில்.

நடைமுறையில் அனுபோக பாத்தியதை கொண்டாடுவதுதான் எங்களால் முடிந்த காரியம்.

நாங்களோ பத்திரிகை அச்சாகிப் போனால்தான் பணம் புரளும் என்று பிரஸ்காரனை மிரட்டுவோம். அச்சடித்துக் கொடுப்பான். என்றைக்காவது எங்கிருந்தாவது ஒரு நாணயஸ்தனான ஏஜெண்டோ அல்லது அப்பாவிச் சந்தாதாரரோ மூன்று அல்லது நான்கு ரூபாய் மணியார்டர் அனுப்பிவிடுவான். மணியார்டர் வந்துவிட்டால் உடனே நாங்கள் எல்லாம் குபேரப் பிரபுக்கள்தான். நேரே ராமகிருஷ்ணா லஞ்ச் ஹோமுக்குப் போவோம்... திரும்பி வந்து இலக்கியச் சேவையில் ஈடுபடுவோம்.

மணியார்டர் பியூன் வராத நாட்களில் இன்னொரு நண்பரை எதிர்பார்ப்போம். மணிக்கொடியில் எழுதி வந்தவர்களில் சிதம்பர சுப்பிரமணியன் வேறு இடத்தில் வேலை பார்த்து மாதாமாதம் சம்பளம் வாங்கும் ஆசாமி. அவர் வந்தால் ஏதாவது காசு புரளும். காபி உண்டு, சாப்பாடு உண்டு. ஒருசமயம் இந்தத் தொழிலை விட்டுவிட்டு பெப்பர்மிண்ட் விற்கலாமா, பீடி விற்கலாமா என்று கூட யோசித்ததுண்டு..'

(ரகுநாதன் எழுதி மீனாட்சி புத்தக நிலையம் வெளியிட்ட புதுமைப்பித்தன் வரலாறு நூலிலிருந்து.)

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

காமராஜர்

பண்டித நேரு -
பறந்த பின்னும் ...

இலால் பகதூர் -
இறந்த பின்னும்...

'நாடார் ஆள்வது - என்பதை
நாடார் அறிவுறுத்துவார்!' என -
நாடார் உதவியை - அன்று
நாடார் உண்டோ?
நாடார் நினைத்திருந்தால் -
நாடார் வசம் நாற்காலி யன்றோ!
நாடார் அதை நாடார்; அத்தகு -
நாடார் தனக்கு நாட்டில் ஈடார்?

●●●

ஆம்!
அனேக சந்தர்ப்பங்களில்

சென்ற நூற்றாண்டில்,
தமிழ் மண் தரணிக்கு வழங்கிய
மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!

கவிஞர் வாலி

அடுத்த பிரதமர் -
ஆரென்று...

விருதுநகர்
விரல்சுட்டும்; அதற்கேற்ப -
புது தில்லி
பட்டம் கட்டும்!

சுட்டிய விரலுக்குச்
சொந்தக் காரன்...

சிவகாமி அம்மையாரின்
செல்வன்; அவன் -
முக்கால் கைச்
சொக்கா யோடும்; சிறு -
தோள் துண்டு;
தும்பைப்பூ வேட்டியோடும்;



சோவியத் யூனியனுக்கும்
செல்வன்!

●●●

இந்தியா -
இந்தியர் கைக்கு வர -
முன்னாளில் கொடிபிடித்தவன் -
பின்னாளில்...

சர்க்கார் அமைப்போம் என்றா -
சர்க்காவில் நூல் நூற்றான்?
முத்தமிழ் நாட்டு -
முதல்வருக்கான -
அறைவாசம் ஏற்போம் என்றா -
சிறைவாசம் ஏற்றான்?

'காமராஜர்' எனும்
காங்கிரஸ் தியாகி - பலன்
கருதாத - ஒரு
கரும யோகி!

●●●

ஆடு மேய்ப்பவனும் -
மாடு மேய்ப்பவனும் -
நாலெழுத்துப் படித்து - நாளை
நாடு மேய்க்க வேண்டும்...

என - அவன்
எண்ணினான்; அத்தகு -
சிறார்களை...
சோறு போட்டு -
பள்ளிக்கு - வரப்
பண்ணினான்!
'போடு சாப்பாடு; பின் -
போதி வாய்ப்பாடு!' எனச் -
செய்தான் ஒரு சட்டம்; அதுதான் -
சத்துணவுத் திட்டம்!



●●●

நேர்மையில் - ஒரு
நெருப்புத் தமிழன் - எனக்
காலம் கணித்த - இந்த
கறுப்புத் தமிழன்...

பெரியார் பார்வையில்
பச்சைத் தமிழன்; அவர் -
இதயம் பேணிய
இச்சைத் தமிழன்;
ஆனால்
அவன் - ஒரு
வெள்ளைத்தமிழன்; வெள்ளை

மனமுடை -
பிள்ளைத் தமிழன்!

●●●

ஒரு
பெண்ணை மணக்காமல் - இம்
மண்ணை மணந்தான்;
மன்னவன்
மறைவால் -
மண்மகளன்றோ
மஞ்சளிழந்தாள்!

## ராஜாஜி



முரண்கள் - இவனுக்கு
அரண்கள்; எதையும்
முனைந்து
முடிக்கும்
மூர்க்கங்கள் - இவனது
மார்க்கங்கள்;

எப்பவும்
எதிலும்
மாற்றங்கள் - இவனுக்குரிய
தேற்றங்கள்;

இன்றே
இயம்பும்
நாளைய தீர்வைகள் - இவனது
நெடிய பார்வைகள்!

●●●

இவன்
இன்னொருவனை -

சக்கரவர்த்தி யாக்கிய

சாணக்கியன் அல்ல;

இவனே
இருந்தான் -
சக்கரவர்த்தி யாகவும்;
சாணக்கிய னாகவும்!

அரண்மனையில் வசித்தான்;
ஆசிரமத்திலும் வசித்தான்;
எனினும் - இத்தகு
ஏற்றங்கள் இறக்கங்கள் -
கிஞ்சித்தும் இவனுக்குக்
கொடுத்ததில்லை கிறக்கங்கள்!

●●●



இந்தியை இவன்தான்
பந்தியில் வைத்தான்; பின்பு -
இந்தியை இவன்தான்
சந்தியில் வைத்தான்!

காங்கிரஸ் - ஒரு
காலத்தில் -
தழைக்க - இவன்தான்
தண்ணீர் வார்த்தான்;

பின்பு - அது
பட்டுப் போக -
தண்ணீர் வார்த்த கையால் -
வெந்நீர் வார்த்தான்!

ஒருவரும் - ஊகிக்க
ஒண்ணாதவாறு...

அரசியல் சதுரங்கத்தில்
அழகாய் நகர்த்துவான் காயை;
அன்னணம் நகர்த்தி

அடைப்பான் எதிராளியின் வாயை!

●●●

மக்களை - எது
மேம்படுத்துமோ -
அதைச் செய்வான்;
அதற்கென வியர்வை பெய்வான்;

மக்களை - எது
மகிழ்விக்குமோ -
அதைச் செய்யான்;
அதைச் செய்து பதவி கொய்யான்!

●●●



வான்மீகியையும் -
வியாசனையும் -
பசுந்தமிழில் -
பேச வைத்தவன்;

அதன்மூலம் -
அறக் காற்று...

வினைக் காங்கையில்
வாடிக் கிடந்த -
வீடுகள் தோறும்
வீச வைத்தவன்!

●●●

பெட்பு மிக்கது
பெரியார் ராஜாஜி -
நட்பு;
அதற்குக் காரணம்
அந்த -
நட்பு காத்து நின்ற
கற்பு!

- இன்னமும் இருக்கின்றார்கள்...

''கட்சியிலே இப்ப எனக்கு ராஜமரியாதை...''

"இது டிசம்பர் சீஸன் இல்லையா... அதான் ஜால்ராவுக்கு மதிப்பு கொடுக்கறாங்க...''

- ஜெ. மாணிக்கவாசகம்.





''சுரேஷ்... நாம ஓடிப்போகப் போற விஷயம் என் அப்பாவுக்குத் தெரிஞ்சுடுச்சி...''

''அப்புறம்?''

'''ஓடி ஏன் எனர்ஜியை வேஸ்ட் பண்றீங்க, ஸ்கூட்டரை எடுத்துக்கிட்டுப் போங்க'ன்னு சொல்றார்...''

- எம். அருள்மூர்த்தி

''மேடைல அவருக்கு 'வாய்ப்பாட்டு' நல்லா வரும்...''

''வீட்ல?''

''வாய்ப்பூட்டு...''

- வசந்தி வள்ளுவன்





''ஸ்வீட் கடைக்காரர் பொண்ணு ஜாதகம் உங்க பையனுக்கு பொருத்தமா இருக்கு, பார்க்கலாமா?''

''பொண்ணு எப்படி இருப்பா?''

''லட்டு மாதிரி...''

- என்.வி. கணபதி

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

## கவிஞர் வாலி

சென்ற நூற்றாண்டில், தமிழ் மண் தரணிக்கு வழங்கிய மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!

ஜூனியர் விகடன் 10.12.2002

## 11. எஸ்.எஸ். வாசன்

மதராஸ் -
மின்சாரத் துறையில்...

ஓர்
ஊழியராகப்
பணி புரியப்போன -

இளைஞர் ஒருவரை -
இடைமறித்தது விதி;
வாய்த்தது தமிழர்க்கு -
விகடன் என்னும் நிதி!

வாசன் - எனும்
வாலிபர் - தனது
வாழ்வைத் தொடங்கியது - ஒரு
விளம்பர முகவராக; இன்று
விளங்குகிறார்
வண்ணத்தமிழும் தமிழரும் -
வாழ்த்தி வழிபடும் பகவராக!

●●●

'எல்லோரையும்
இன்புற்றிருக்க வை;
அதற்கு - உன்னால்
ஆனதைச் செய்!' என்று -

அற்றை நாளில் -
அனுப்பியதோ...

வாசன் எனும்
ஒருத்தரைத் தூண்டி -
தருமமிகு சென்னைக்குத்
திருத்துறைப் பூண்டி?

●●●

வாரா வாரம் -
விகடன் என்னும் -

இதழ் கடைக்கு வரவேண்டும்;
இளஞ்சிரிப்பு அதனால் -
தமிழர்
இதழ்க் கடைக்கு வர
வேண்டும்!'
இன்னணம்...

திட்டமொன்று - வாசன்
தீட்டினார்; தனது
ஏடு மூலம்



எல்லோரும் -
கலுக்கெனச் சிரிக்கும்படி
கிச்சுக்கிச்சு மூட்டினார்;
நம் உதடுகளுக்கு -
நகை என்னும் நகை மாட்டினார்!

●●●

வாசன் -
வழங்கிய பேசும் படங்கள்;
அனைத்தும்
அவர்புகழ் பேசும் படங்கள்!

முதன்முதல் - அவர்தான்
மூதாட்டியைக் கதாநாயகியாக்கி -
முழுநீளப் படம்
முனைந்து எடுத்தவர்;
முத்தமிழ் இசைக்கு
முகவரி கொடுத்தவர்!

'திருநாளைப் போவார்!' எனும் - தலித்
பெருமகனாரின் கதையை -
வடித்தார் திரையில்; ஓடியது -
வெள்ளிவிழா வரையில்!

டெக்கிலும் கேட்டது -
வாசன் குரல்;
மும்பை வைத்தது -
மூக்கின்மேல் விரல்!

●●●

காலம் -
கொண்டு போனது வாசனை;
என்றும் -
இவ் - வையம்
வாழுமட்டும் -
வாழும் வாசனின் வாசனை!

## 12. ஏவி.எம்.

ஏவி. எம்.
எழுப்பிய -
ஏவி. எம்...

தேவகோட்டையில்
தோன்றியது; காலம் -
அதை அப்படியே
பெயர்த்து வந்து - வட
பழநியில் ஊன்றியது!

ஜூனியர் விகடன் 10.12.2002

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

## 13. தமிழ்த் தாத்தா

கடல் கொண்டதோ?
கறையான் உண்டதோ?
கனல் தின்றதோ?
காலம்தான் மென்றதோ?

என
எண்ணும்படி-
எத்துணையோ
ஏடுகள்; அவ்
ஏடுகள்
எல்லாம்
ஏந்தி நின்றன
ஏரார்ந்த தமிழின் பீடுகள்!

அனைத்தும்
அற்றை நாள் அரும் புலவர்
அன்னைத் தமிழுக்கு
அணிவித்த ஆபரணங்கள்;
அவை - திரும்ப
அகப்படாதது தான்

## கவிஞர் வாலி

சென்ற நூற்றாண்டில்,
தமிழ் மண் தரணிக்கு
வழங்கிய மகத்தானவர்களின்
மகோன்னத வரலாறு!

அம்மவோ! தமிழர் நெஞ்சில்
ஆறாதிருந்த சாபரணங்கள்!

அந்த ரணங்களை
ஆற்றப் பிறந்தான் ஒருவன்;
தான்
தழைக்கத்
தமிழ்-
தன்னைக் கேட்டாலும் தருவன்!



அத்தகு
அறிவன்...

நஞ்சை;
புஞ்சை;
நெஞ்சை அள்ளும்
தஞ்சைத் தரணியில் -
உத்தமதான புரத்தில் - ஓர்
உத்தமியிடம் உதித்தவன்;
இரண்டாம் தாயாய் -
இருந்தமிழைத் துதித்தவன்;
வாங்கும் மூச்சையும் - வாய்
வளர்க்கும் பேச்சையும் - தனைத்
தாங்கும் - தண்
தமிழுக்கென்றே விதித்தவன்!

மயிலாடுதுறை
மகாவித்துவான் -
மீனாட்சி சுந்தரம்பிள்ளையின்
மாணாக்கன்;
மாசு
மறுவற்ற
மணித் தமிழ் கொலுவமர்ந்த
மாநாக்கன்!

சாமிநாதன் எனும் - அச்
சான்றோன்...

தலைப்பா கட்டிய
தமிழ்ப்பா; ஒரு -
மெய்யுள் நுழைந்து
மேதினியில் நடந்த - தமிழ்ச்

செய்யுள்;
கோட்டும் -
கஞ்சுகமும்
போட்டு உலவிய - புறநானூற்றுப்
பாட்டு; ஜி.யூ.
போப்பும் கை கூப்பும் -
யாப்புத் தோப்பு!

●●●



களவு போன நகைகளைக்
கண்டு பிடிக்க - ஊர் ஊராய்
உளவு போனவன்; ஏடுதேடலில்
உன்மத்தம் ஆனவன்!

அவன் மட்டும் -
அவதரிக்காவிடில்...
சிந்தாமணி - எனும்
நந்தாமணி - எவரும்
சீந்தாமணியாகி - கண்ணீர்
சிந்தும் மணியாகிக் கிடக்கும்;
சிலம்பும்
புலம்பும்;
அழுதழுது தன்னைத்தானே -
அலம்பும்;

மணிமேகலை - இடையில்
அணிமேகலையாய் இல்லாமல் -
பழுப்பேறிப் போய்ப்
பிணிமேகலையாய் இருக்கும்!

தமிழ்த் தாயின் -
தொலைந்து போன-
முந்நகையை
மீட்டெடுத்து - அவள் முகத்தில்
புன்னகையைப்
பொருத்தியவன்;
அதன் பொருட்டு
அல்லும் பகலும்.
தன்
திருமேனியை வருத்தியவன்!

●●●

'கும்பமுனி எனத் தோன்றும் -

குடந்தைநகர் சாமிநாதா!'
என...

பாரதி
பாடிப் பரவிய
தமிழ்த்
தாத்தா...

ஒருநாள்
வானம் போனான் -
வீடுதேடி அல்ல; தமிழ் -
ஏடு தேடி!



## 14. தமிழ்த் தென்றல்

பொதிகை எனும் -
புகழ்சால்...

கருவரையிலிருந்து
கிளம்பாமல் - ஒரு
கருவறையிலிருந்து
கிளம்பிய -
தமிழ்த் தென்றல் -
திரு.வி.க., அவன் -
தழுவியதால்
தழைத்தது
தமிழர் இனப் பூங்கா;
தமிழர் மனப் பூங்கா!

காரல் மார்க்சையும் -
காந்தி மகானையும் -
சம விகிதத்தில்
சிநேகித்தவன்;

பெரியார் பேச்சையும் -
பெரிய புராணத்தையும் -
சிரமேற் கொண்டு -
சிலாகித்தவன்;

திலகரை -
திலகமுனி என்று -
உளத்தில் வைத்து -
உபாசித்தவன்;



சமரச -
சன்மார்க்கத்தையே -
சாகும் வரை -
சுவாசித்தவன்!

ஏசுவை
ஏத்துவான்;
புத்தரைப்
போற்றுவான்;
நபிகளை
நயப்பான்;
நம்மாழ்வாரை -
நத்துவான்!

பிறசமயக் குரவர்களின்
பெயர்களைக் குறிப்பது கூட...

சைவ சித்தாந்த - மகா
சமாஜத்திற்கு -
கசியும்
கழிவுநீர்போல்
ஒவ்வாது; சைவம்
ஒன்றுதான் அதற்கு சவ்வாது;
திரு.வி.க. எனும்
திருமகனுக்கு -
ஒருநாளும்
ஒப்பிதமாக இல்லை இவ்வாது!

●●●

அவன் -
'அன்பே சிவம்' எனும் -
அறநெறியில் -
அமைந்தவன்;
'சாது அச்சுக்கூட'த்தின் -
சொந்தக்காரனான அவன் -
சாதுவாகவே -
சமைந்தவன்;
சற்றும் -
சமயப் பொறையில்லாக் -
குதர்க்கவாதிகளைக் கண்டு -
குமைந்தவன்!

●●●

அவன் -
தொழிற்சங்கம் கண்ட
தமிழ்ச்சங்கம்; தான் -
சாகும்வரை ஊதினான் -
சமதருமச் சங்கம்!

பெரியாரைப் -
பாராட்டி -
'வைக்கம் வீரர்'
விருது தந்தவன்;



'தமிழ்நாட்டில் -
தற்போது நடப்பது -
பாரதி சகாப்தம்!' எனப்
பேசி வந்தவன்!

மகாத்மாவை
மொழிபெயர்த்தவன்; உழைக்கும் -
வர்க்கம்
வாடும் போதெலாம் - உளம்
வெந்து
விழி வியர்த்தவன்!

●●●

தெய்வத் தொண்டும்;
சைவத் தொண்டும்;

இறுதிவரை ஆற்றிய - அந்த
இனிய தென்றல் - சிதையில்
இடப்பெற்ற போது - சைவர்கள்
இருந்தனர் தள்ளி;

தந்தை பெரியார்
தலைமையில் -
அ.ச.ஞா.;
மு.வ.; இவ் -
இருவர்
இட்டனர் கொள்ளி!

●●●

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

## 15. கல்கி

மயிலாடுதுறையிலிருந்து - சில
மைல்கள் தூரத்தில் இருந்த . . .
புத்தமங்கலம் - கல்கியைப்
பெத்த மங்கலம்;
ஆதலால் - அது
அரும்புகழ் -
பூத்தமங்கலம்; கைவணங்க
ஏத்த மங்கலம்!

புத்தமங்கலத்துப்
புத்திரன்தான் - பூந்தமிழுக்குப்
புத்தக மங்கலம் தந்தவன்;
பூமிக்கு அதற்காகவே வந்தவன்!

பிள்ளைப்
பிராயத்திலிருந்தே . . .

தையல் நாயகி
தனயனுக்கு - தமிழ்தான்
மையல் நாயகி!

●●●

அந்த நாளைய
ஆங்கில மோகத்தால் -

# கவிஞர் வாலி

சென்ற நூற்றாண்டில், தமிழ் மண் தரணிக்கு
வழங்கிய மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!

ஜங்ஷன் 24.12.2002



தமிழர்க்குத்
தமிழே கைத்தது;
தமிழர் கைகளே
தமிழைத் தள்ளி வைத்தது!

கல்கியின் கை - தமிழின்
கண்ணீரைத் துடைத்தது;
ஆங்கிலப் பாறையை - அது
அக்குவேறு ஆணிவேறாக
உடைத்தது!

'கல்கியின்
கைப்பேனா - எனைக்
கையாள்வதால் - இனிநான்
கைப்பேனா?'
என -
எக்காளமிட்டது - கவடுகள்
மூன்றான மொழி; நம் -
மூன்றாம் விழி!

●●●

வெள்ளைக் குதிரை;
வாள்;
இவை
இன்றி - நம்
உள்ளக் குதிரை
உட்கார்ந்த கல்கி இவன்; தன் -
பத்தாம் அவதாரமாய் - இவனைத்தான்
படைத்தானோ அவன்?

செந்தமிழ் என்னும் -
சஞ்சீவினியைக் கொண்டு...

சிதையில் எரிந்த
சரித்திர புருஷர்களை - தன்
கதையில் எழுப்பிக்
காட்டியவன்;

சபதம் செய்த
சிவகாமிக்கு -
உயிர்
ஊட்டியவன்;
கனவு
கண்ட
பார்த்திபனை - அறிமுகப்
படுத்தியவன்;
பொன்னியின் செல்வனுக்குப்
புகழாடை உடுத்தியவன்!

ஜூனியர் விகடன் 24.12.2002



●●●

நாட்டை
நேசித்தான்; அதன்
விடுதலைப் பத்திரத்தை
வாசித்தான்;

காந்தியடிகளார் -
கற்பித்தபடி . . .
செய்தான்
சத்தியாகிரகம்; மும்முறை -
கண்டான்
காராகிருகம்!

'ராஜாஜியோடு பழகி - இன்னொரு
ராஜாஜியாகவே பிறங்கி -
ராஜாஜி கீர்த்தி - வளர்த்தான்
ரா. கிருஷ்ண மூர்த்தி!' என...

எண்ணியது நாடு;
எழுதியது ஏடு!

ஆம்!
அவன்தான் . . .
மூதறிஞர் -
மானம்காத்த வஸ்திரம்;
மூதறிஞர் -
மூளைவிடுத்த அஸ்திரம்!

●●●

பேனா;
பேசும் நா;
இரண்டையும் - தமிழின்
இருக்கைகள் ஆக்கினான்;
உரையாலும்; தன்
உரை நடையாலும்;
தமிழின் மாண்பை - தன்
தலைக்குமேல் தூக்கினான்!

அவன் -
ஆகாயம் போனபோது...

அரற்றி
அழுதன -
தமிழர்
தம் . . .

விழி;
மொழி!

ஜங்ஷன் 24.12.2002

## 16. ரசிகமணி



தென்காசி
தென்றல் வீசி - பரப்பும்
டி.கே.சி. புகழ்
தினம் பேசி!

குற்றாலத்து முனிவன்; கவியில் -
குற்றங்குறை கண்டால் முனிவன்!

தோலுரித்துக் காட்டுதல்போல்
தொன்மைக் கவிஞரின்
நூலுரித்துக் காட்டி - நிஜம்பொய்
நுவல்வோன்;

பருகுகவிகளில் - தன்
பார்வைக்குப் படுகின்ற
செருகுகவிகளை - நமக்குச்
சுட்டி . . .

கவிச் சோற்றில்
கல்லும் மண்ணும் - கலந்து
கிடக்கிறதே - எனக்
கவல்வான்!

●●●

கல்வியில் பெரிய -
கம்பனின் பாட்டுக்களையும்...

முழுக்க அள்ளி - தனது
முறத்தில் போட்டுப் புடைத்து -
அதில் -
ஆங்காங்கு கிடந்த -
கல் பொறுக்கியவன்; பிறர் -
சொல் பொறுக்கியவன்;

பத்தாயிரத்தில்
பாதிக்குமேல் புறக்கணித்து -
தடித்த சேலையைத்
தாவணியாய்ச் சுருக்கியவன்;
செம்பொன்னை
செம்பு போக உருக்கியவன்!

ஆண்டாள் பாட்டையும் -
அடித்துத் திருத்தியவன்;
நந்திக் கலம்பகத்தையும் -
நேரியதாய் இருத்தியவன்!

ஜங்ஷன் 24.12.2002



சிந்தை அள்ளும் -
சிலம்பில் கூட . . .

'கானல்வரிதான் - இளங்கோவின்
கைச்சரக்கு; முன்பின் உள்ள
பகுதியெல்லாம் - பிறபுலவர்
பொய்ச்சரக்கு!' என . . .
ஓர்ந்து - அவற்றை
ஒதுக்கியவன்; சில -
பழம்
பாடல்களைக் கூடப் -
பழுதுபார்த்துப்
புதுக்கியவன்!

அவன் செயல்
அனேகர் சிந்தையைச் சுட்டது;
ஆயினும் என்ன? அது
அவன் ரசனையின்பாற் பட்டது!

பாரதிதாசன் கூடப் -
புழுங்கினான்;
'கேட்க ஆளில்லையா?' என்று -
கவிதையில் முழங்கினான்!

●●●

'செய்யுள் செய்வது
சுலபம்;
கவிதை செய்வது
கடினம்!'
என்று -
எடுத்து ஓதியவன்;
யாப்பு முக்கியமல்ல -
யாவரையும் உருக்கும் - உணர்வின்
பூப்பு முக்கியம் - என்று
புலவர்களோடு மோதியவன்!

கைக்கு வந்தது - நல்ல
கவிதை யெனில் . . .

ராகம் போட்டு -
ரசிப்பான்; அதன்
ரசங்களை -
ருசிப்பான்;
பாட்டு மொத்தமும் -
புசிப்பான்; அன்னணம்
புசித்த பிறகும் -
பசிப்பான்!

தமிழ்க் கவியை;
தமிழ்க் கலையை;
தமிழ்க் கதையை;
தமிழ்க் கட்டுரையை;

ரசிப்பதில் -
ரசிகமணி ஒரு ராஜா;

அதை ரசி -
இதை ரசி - என்று
அவனை -
ஆரும் பண்ண முடியாது தாஜா!

'எங்கள் தமிழால்
எல்லாம் ஆகும்!' என்று -
எட்டுருக்குச் சொன்னவன்;
எங்கள் மன்னவன்!

●●●

தமிழ்
தேசத்தில் . . .

பாட்டுக்கு - இன்று
பஞ்சமில்லை - இங்குள்ள
தெருவெலாம் -
தலைநிமிர்ந்து நடைபோட;
ஆனால் -
அந்தோ!
டி.கே.சி. எனும் -
தராசுதான் இல்லை எடைபோட!

- இன்னமும் இருக்கின்றார்கள்....

# குரு சிஷ்யன்

■ ஜி. கௌதம்

அண்ணன் தம்பி இருவருக்கும் சதா சண்டை, சச்சரவுதான். அடிதடியும் அடிக்கடி நடப்பதுண்டு.

எப்போது என்ன நடக்குமோ என்ற பதைபதைப் போடுதான் நரக வாழ்க்கை நடத்தி வந்தாள், அவர்களது தாய். பெற்றவளுக்கு இருவருமே பிள்ளைகள்தானே; பெரிதாக ஏதும் அசம்பாவிதம் ஏற்படுவதற்கு முன்னர், பிள்ளைகள் இருவரையும் எப்படியாவது திருத்தியாக வேண்டும் என, துடியாய்த் துடித் தாள் அந்தத் தாய்.



கெஞ்சிக் கூத்தாடி, தன் மகன்கள் இருவரையும் குருவிடம் அழைத்துச் சென்றாள். புத்திமதி கூறும்படி கேட்டுக் கொண்டாள்.

அவர்கள் இருவரையும் தம் அருகே அழைத்து உட்கார வைத்தார் குரு. தீர்க்கமான குரல். ஒருசில விநாடிகள் மட்டுமே பேசினார்.

கலங்கிய கண்களுடன் குருவுக்கு நன்றி தெரிவித்துவிட்டு, அங்கிருந்து வெளியேறினார்கள் சகோதரர்கள் இருவரும். அதன்பிறகு அவர்கள் சண்டை போட்டுக்கொள்ளவே யில்லை. நடந்ததையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த சிஷ்யனுக்கு ஆச்சர்யம் மேலிட்டது. அப்படி என்ன சொல்லியிருப்பார் குரு, என்பதைத் தெரிந்து கொள்ள ஆவல் அதிகமானது அவனுக்கு. குருவிடம் கேட்டு விட்டான். அவனைத் தட்டிக்கொடுத்துவிட்டு, தான் சொன்ன அந்த மந்திர வார்த்தைகளை மறுபடியும் சொன்னார் குரு... "நாளை என்பது நம் கையில் இல்லை; ஒவ்வொரு முறையும் 'நீங்கள் சந்திக்கும் போது, இதுவே நமது கடைசிச் சந்திப்பாக இருக்கக்கூடும்' என்று மனதில் நினைத்துக்கொள்ளுங்கள்!"

சென்ற நூற்றாண்டில், தமிழ் மண் தரணிக்கு
வழங்கிய மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!

# கவிஞர் வாலி

## 17. வ.ரா.

ஞாயிறு உதவியில்தான்;
திங்கள் ஊர்கிறது!

விண்கணக்கு - இவ்
ஊரறிந்தது; ஆனால்
மண்கணக்கு - அதற்கு
மாறாக இருந்தது!

திங்களூரிலிருந்து ஒரு
ஞாயிறு உதித்தது;
அதை
அண்ணாவின் உள்ளம் -
அக்கிரகாரத்தின்
அதிசயப் பிறவி என்று மதித்தது!

தமிழ்த்
தேசமெங்கும்

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்



ஞானவெளிச்சம் உமிழ்ந்த-அந்த
ஞாயிறின் திருநாமம் . . .

வ.ரா. - அவன்
வலிமை வேறார்க்கும் வாரா!

● ● ●

போனான்
புதுச்சேரி;
பார்த்தான் பாரதியென்னும்
பாட்டுச் சேரி;

இருந்தான் -
இரண்டரை ஆண்டுகள் அங்கு;
பின் -
'பெருங்கவி ஒருவன்
பிறந்துளான் இங்கு!' என -
ஊர் ஊராய்ச் சென்று
ஊதினான் சங்கு!

'பாட்டுக்கு
பாரதி;
வசனத்துக்கு
வரா.!'
என்று - அவனை
ஏத்தியது ஊர்;
ஆம்;
அவன் - தன்
வசன நடையால் - சமூக
வாழ்க்கைக் கிணற்றிலிருந்து
வண்டி வண்டியாய் -
வாரியெடுத்தான் தூர்!

● ● ●

வாராது வந்த மாமணியாம் -
வ.ரா. . . .

அதிர்ஷ்டம்; ஆருடம்;
ஆகிய சொற்களை -
அகராதியிலிருந்து -
அகற்றியவன்;

குலம்; கோத்திரம் - எனும்
குறுகிய கண்ணோட்டம் -
கூடாது என்று
கூறிக் கூறிக் கூறி...

அனேக விழிகளை
அகட்டியவன்!

முடை நாற்றமெடுத்த
மூடப் பழக்கங்களைக்
கூடையில் அள்ளி - வங்கக்
கடலில் கொட்டியவன்;

விதவைகளின்
வெள்ளைச் சேலையை உரிந்து -
கூறைப் புடவையைக்
கொணர்ந்து கட்டியவன்!

மழித்த - மாதரார்
மொட்டைத் தலைகளில் . . .
முடிவளர்க்க முனைந்தான்;

'சுந்தரி -
சகுன்த் தடையா?' என வினவி -
புதினமொன்று

புனைந்தான்!

வாதைத் தீவில் வாடிய
வஞ்சியரை மீட்க -
'கோதைத் தீவு' ஒன்றைக்
கண்டு பிடித்தான்;
தனாதனிகளை - எழுத்துச்
சவுக்கால் அடித்தான்!

● ● ●

பாரதிதாசன்
பாட்டெழுத -
எதிராஜர் கதையை
எடுத்தான் சினிமா;

மதச்சிக்கல் - எனும்
மலச்சிக்கலில் -
மாட்டிக் கிடந்த
மாந்தர்க்குக் . . .

குடல் விளக்கம் செய்யக் -
கொடுத்தான் இனிமா!

● ● ●

வேர்விட்ட எழுத்தாளர்க்கு
நீர்விட்டவன்;
'மணிக்கொடி'யை - தமிழ்
மன்றத்தில் நட்டவன்!

வேதாரண்யத்தில் உப்பெடுத்து -
வெஞ்சிறை புகுந்தவன்;
எவ்லாப் பெருமைக்கும் -
எஞ்ஞான்றும் தகுந்தவன்!

● ● ●

வரா.
உயிர்விட்டபோது . . .



வரைந்தார் அண்ணா -
'வானம்பாடி மறைந்தது!' என்று;
அவர் சொன்னது-
ஆயிரத்தில் ஒன்று!

● ● ●

## 18. ஜீவா

ஜீவா
ஜீவா எனப்படும் -
ஜீவானந்தம் பேர் சொன்னால்
நாவானந்தம் பெறும்!

இன்னணம்
இசைத்தான் -
புதுவை வாழ்ந்த
புரட்சிக் கவி; அதை
ஆமென
ஆமோதித்தது புவி!

தன் வீடு; தன் வாழ்வு;
தன் வரவு; எனும் . . .

மூவானந்தம்
முற்றும் விட்ட ஜீவானந்தம் -
பூமியை விட்டுப்
போகும் வரை -
பார்த்த தெல்லாம்

பாரதி; கம்பன் பாவானந்தம்!

● ● ●

பிறந்த ஊர்
பூதப்பாண்டி;
படிக்கவில்லை - நான்காம்
படிவம் தாண்டி!

படிப்பைப் -
பாதியில் விட்டுவிட்டு . . .

வைதிகக் கோட்டையை
வெலவெலக்கச் செய்த -
வைக்கம் போராட்டத்தில்
வைத்தான் காலை; மெல்லப் -
பூக்கத் தொடங்கியது - அவனுள்
பொதுவுடைமைச் சோலை!

தன்னுள் - அவனைத்
தங்க வைத்துக் கொண்டதால்...
கருப்பக் கிரகம்
கண்டது -
பத்துமாதப்
பெருமை;
காராகிரகம்
கண்டது -
பலமாதப்
பெருமை!

● ● ●

தேயிலைத்
தோட்டத்துத் -
தொழிலாளர்
துயரத்தை . . .

ஜீவனுள்ள பாட்டில் -



ஜீவா வடிக்க;

பலரும் மெச்சிய
'பதி பக்தி' என்னும் -
டிராமாவில் - அதை
டி.கே. சண்முகம் பாடி நடிக்க;

அற்றை நாளில்
'அய்யகோ!' என்று
அழும் அவை; அந்தப் பாட்டில் -
அத்துணை அவலச் சுவை!

ஜனசக்தியைத் திரட்டிய -
ஜீவா . . .

ஆலைத் தொழிலாளர்
ஆகாயம் புலர -
காலைச் சேவலாய்க்
கூவியவன்; உழைத்து -
நுரைதள்ளிப் போனோர்
நுரையீரல்களில் -
மூச்சுக் காற்றாய்
மேவியவன்;

முதலாளித்துவம் - எனும்
முட்புதரை -
அரிவாள் எடுக்காமல் -
அறிவால் சீவியவன்;
சமதருமம் - எனும்



சமூக விருட்சம் வளர -
சிவப்பு விதைகளை -
செந்தமிழ் மண்ணில்
தூவியவன்!

● ● ●

பாரதி
பக்தன்;
பாரதி
பித்தன்;
பாரதி போலவே -
பரிசுத்தன்!

பாரதி
பாட்டுக்களை -
குடிசைகளுக்குக்
கூட்டிப் போனான்;

பாரதியின்
பாட்டுச் சோறை -
உழைக்கும் வர்க்கத்திற்கு
ஊட்டிப் போனான்;

பாரதி
புகழை -
நாளுக்கு நாள்
நீட்டிப் போனான்;
மகாகவியின் -
மந்திரச் சொற்களை . . .

போகுமிடமெல்லாம்
பழமறைபோல் - தன்
மனவீணையில்
மீட்டிப் போனான்!

● ● ●

காரைக்குடி அருகே
கிராமம் 'சிராவய'லில் -
'காந்தி ஆசிரமம்'
கண்டான்;
வ.உ.சி.யை வரவழைத்து - தன்
வேட்கையை விண்டான்;
கப்பலோட்டிய தமிழன் - அவனைக்
கட்டிக் கொண்டான்;
வீரன் ஜீவாவை - தனது
விழிகளால் உண்டான்!

● ● ●

'இவன்தான் -
இந்தியாவின் சொத்து!'
என்று ஜீவாவை
ஏத்தினான் . . .

பொக்கை வாயில்
புன்னகை ஏந்தி -
மக்களை வசீகரித்த
மகாத்மா காந்தி!

-இன்னமும் இருக்கின்றார்கள்...



# எது நடிப்பு?

ஒரு படத்தின் ஷூட்டிங்கில் உணர்ச்சி பூர்வமாக நடித்தார் சிவாஜி கணேசன். அதை நகைச் சுவை நடிகர் ஒருவர் பார்த்துக் கொண்டிருந்தார். ஹீரோ நடித்து முடித்து வந்தவுடன், நகைச்சுவை நடிகர் 'ஏன் ஓவர் ஆக்ட் செய்கிறீர்கள்?' என்று கேட்டார். சிவாஜி கணேசன் கோபப்படாமல் அதே காட்சியை மிக இயல்பாக நடித்துக் காண்பித்தவுடன், நகைச்சுவை நடிகருக்கு ஆச்சர்யம். "இவ்வளவு அழகாக யதார்த்தமாக நடிக்கத் தெரிந்தும், ஏன் ஓவர் ஆக்ட் செய்தீர்கள்?" என்று கேட்டார். "யதார்த்தழான நடிப்பு என்பது வேறு. வெகு ஜனம் ரசிப்பதற்கான நடிப்பு என்பது வேறு. ஓவர் ஆக்ட் செய்தால்தான் வெகுஜன மக்கள் ரசிப்பார்கள். இது ஒருவகையான திட்டமிடல்" என்று புன்னகையுடன் கூறினார் சிவாஜி!

- ஆனந்த்

OLD சினிமா சிறப்பிதழ்

**சென்ற நூற்றாண்டில், தமிழ் மண் தரணிக்கு வழங்கிய மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!**

# கவிஞர் வாலி

## 19. சங்கரதாஸ் சுவாமிகள்

மூன்று தமிழ்களில்
மூன்றாம் தமிழ் செய்த தவம்...

முத்து ஒன்று
முளைத்தது -
முத்து நகர் எனும்
மூதூராம் -

தூத்துக்குடியில்; ஒரு
தேவர் குடியில்!

அந்த-
அரிய முத்து...

கடல் தந்ததல்ல; ஒருத்தி -
குடல் தந்தது!

ஆம்;
அது -

புலவர் தாமோதரத் தேவரின்
பத்தினியாள் பயந்தது;

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்



'நாடகச் செம்மல்' என்று
நாடு அதை நயந்தது!

●●●

சங்கரதாஸ்
சுவாமிகள்...
நமக்கு
நல்கிய
நாற்பதுக்கும் மேற்பட்ட
நாடகங்கள் -
ஒவ்வொன்றும்
ஒண்டமிழ்த் தாயின்
பாதங்கள் அணிந்த
பாடகங்கள்!
ஆடல் பாடல் -
அமைந்திருப்பினும்...
அந்த
அரிய நாடகங்கள்-
உலக நீதிகளை - ஊரவர்க்கு
உணர்த்திய பூடகங்கள்;
அற்றை நாளில்
அறிவு கொளுத்த
நாடகங்களை விட்டால்
நாட்டில் வேறேது ஊடகங்கள்?

ஆதலால்
அட்டியின்றி -
அறிவார்ந்த
அந்தப் பெருமகன்தான்...

தமிழ்நாடகங்களின்
தந்தை;
ஒரு நாடகத்தை
ஒரே இரவில் -
வரைந்து முடித்த
விந்தை;

அவனால்தான்
அகன்றது...

'நல்ல தமிழில் - இசை
நாடகங்கள் இல்லையே!' என -
நெடுநாள்களாய்
நமக்குற்ற நிந்தை;
மொத்தத்தில் - அவன்
மூன்று தமிழ்கள் - ஒருசேர
சங்கமித்த
சந்தை!

●●●

எண்ணிச் சொல்ல
ஏலாது - அவன்
ஏட்டில்
எழுதிக் குவித்த சிந்தை;
கேட்டுக் கேட்டுக்
கிறங்கிப் போனது, நல்ல
பாட்டை அவாவிநின்ற
பசுந்தமிழர் சிந்தை!

ஆம்!
அவன் வசம் இருந்தது -
கிறுகிறுக்க வைக்கும்
கள் மொந்தை -
நிகர்த்த ஒரு
நற்றமிழ்ச் சொல்மொந்தை!

வகை வகையாய்
வண்ண வண்ணமாய்
வழிந்தன சிந்துகள் - அவன்
விரல் வழி; அவை
கரும்பு நதியாய் - நாடகக்
கொட்டகைக்குள் பாய்ந்தன
கிட்டப்பாவின்
குரல் வழி!

'ஞானப்பழத்தைப் பிழிந்து'
ஞாலம் பருகக் கொடுத்தது...

சங்கரதாஸ்
சுவாமி; அதைக்
கொடுமுடி கோகிலம்
கே.பி. சுந்தராம்பாள் -
பாடக் கேட்டுப்

பவித்திரமானது பூமி!

●●●

தனது
தந்தை - புலவர்
தாமோதரத் தேவரிடமும்; பழனி -
தண்டாயுதபாணி சுவாமிகளிடமும்...

முத்தமிழை
முறையாகப் பயின்ற -
சங்கரதாஸ்
சுவாமிகள்...

சனித்ததும் கடலோரம்;
சயனித்ததும் கடலோரம்!

ஆம்! ஓர்-
ஆக்கை கொண்டு...

மண்ணில் உலவிய
மணித் தமிழ் மதுச்சேரி -
மீளாத் துயிலை
மேற்கொண்ட இடம் புதுச்சேரி!

## 20. விஸ்வநாத தாஸ்



பூவிதழ் மேலமரும்
பாமகள் - ஒரு நாவிதன்
நாவிதழ் மேலமர்ந்து
நற்றமிழ் பேசினாள்;
குலம்;
கோத்திரம்; எனும்
கூளங்களை அள்ளிக் - குப்பைக்
கூடையில் வீசினாள்!

ஆம்!
அற்றை நாளில் -
மருத்துவ குலத்தில்
மலர்ந்தவன்...

முடிதிருத்தும் பணியில்
முனையாமல் - இந்தப்
படிதிருத்தும் பணியில்
பிரவேசித்தான்; இந்திய
நாட்டை - வெளி
நாட்டவர் கையிலிருந்து மீட்க-
பாட்டை - ஆயுதமாய்ப்
பிரயோகித்தான்!

●●●

தமிழ் மண்ணின்;
தமிழ் மாந்தரின்;

போற்றுதலுக்குரிய
பெருமகன்; அன்னை
ஞானாம்பாள் ஈன்றெடுத்த
ஞானத் திருமகன்;

தேசம் கேட்டால்
தேசத்திற்காகத்
தன்னையே
தருமகன்;

அறம் தவறி-
ஆரும் தொழில் செய்தால்-
அச்சமின்றி -
அத்தகு...

தப்பும் தவறும்
தகாதெனத் தமிழால் கடிவதில்-
ஒப்பும் உவமையும் இல்லா
ஒரு மகன்;

தேசுமிகு
தேசியக் கலைஞன்-
விஸ்வநாத தாஸ் - நா
வீறு கொண்டவன்;
ஊரவர்
உள்ளங்களை - தன்
நடிப்பால் நல்லிசையால்
நாளும் உண்டவன்!

●●●

சிவகாசியில்
சனித்ததாலோ என்னவோ...

பாட்டில்
பட்டாசாய் வெடித்தான்;

'கொக்குப் பறக்குதடி
பாப்பா! வெள்ளைக்
கொக்குப் பறக்குதடி
பாப்பா!' என்று...

பாடிப் பாடிப்
பறங்கியர் கோட்டையை -
இடித்தான்; தன்னால்
இயன்ற மட்டும் பொடித்தான்!

வேட்டுச் சத்தம் போல்
விஸ்வநாத தாஸின்
பாட்டுச் சத்தம் - டில்லிப்
பட்டணம் வரை கேட்டது;
வெள்ளைக் காரனைத் தூக்கி-அது
வெகுளியில் போட்டது!

கலைஞன் விஸ்வநாத தாஸ்
காண நேர்ந்தது...

ஒருமுறை
இருமுறையல்ல;
பலமுறை -
பறங்கியர் சிறை!

●●●

சிறை அடுத்தாலும்; பின்-
சிறை விடுத்தாலும்; தன்-
சிறை விரித்து - மேடையில்
சுதந்திர விருத்தம் பாட ...

அஞ்சியதில்லை
அந்தப் புள்; நாட்டின் -
விடுதலை வேட்கை
வெங்கனலாய்க் -
கனன்று
கொண்டிருந்தது அதன் உள்!

●●●



விஸ்வநாத தாஸ்-எனும்
வித்தகன்...

காந்தி கொள்கையைக்
கண்ணெனக் காத்தான்;

காங்கிரஸ் கட்சியே
கதியெனக் கிடந்து-
கதர் ஆடைகள்
கட்டியே நடந்து-

திருமுருகன் வேடம்
தாங்கிய படியே-
நாடக மேடையில்-தன்
நல்லுயிர் நீத்தான்!

●●●

மயில்மேல் அமர்ந்து - மக்கள்
மனம் மேல் அமரும்-
'வள்ளி திருமண'த்தையே - தன்
விசேஷ நாடகமாய்த் தேர்ந்தான்;

வேலனாய்-
வேடனாய்-
விருத்தனாய் வந்து -
விருத்தம் பாடுபவன்...

தருமமிகு சென்னையில் - ராயல்
தியேட்டரில் -
முருகன் வேடத்திலேயே
முருகனிடம் போய்ச் சேர்ந்தான்!

அதே கோலத்திலேயே
அவனைக்-
காடு சேர்த்தது
நாடு!

-இன்னமும் இருக்கின்றார்கள்

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

**செ**ன்ற நூற்றாண்டில், தமிழ் மண் தரணிக்கு வழங்கிய மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!

## 21. கம்பன் அடிப்பொடி

சருப்பம் - தன்
சருமத்திலிருந்து - பழஞ்
சட்டையை உரிக்கும்; புதுச்
சட்டையை தரிக்கும்!

ஆனால் -
அவன்...

ஒருமுறை
உரித்தான் சட்டை; அதன்பின் -

சட்டையை
செய்யவேயில்லை சட்டை!

ஆயினும் -
அவனை - பட்டுச்
சட்டை அணிந்தோரெலாம்
செய்தனர் சட்டை;

காரணம் -
கம்ப நாடனுக்கு - அவன்
பொழுதும் நெய்தான்
புகழ்ச் சட்டை!

●●●

சட்டையின்றி - அவன்
சட்டசபைக்கும் சென்றான்;

'ஆ! சட்டையில்லாதவன்!' என
அசட்டை செய்ய முடியாதபடி
அளப்பரும்
ஆற்றலொடு நின்றான்!

'சா. கணேசன்' எனப்படும் - அச்
சான்றோன்...
வாழுநாள் மட்டும்
வாழ்ந்தான் - தன்
எளிவந்த தன்மையால்
எல்லோரையும் வென்று; அவனது
புறத் தோற்றம்
புலப்படுத்தும் ஓர்
அறத் தோற்றம்
அவன் என்று!

●●●

சீரும்
சிறப்புமாய் -

**கவிஞர் வாலி**



செல்வச்
செழிப்போடு -

நகரத்தார் குடிப்பிறந்த
நன்மகன்...

காந்தியிட்ட
கட்டளைக் கேற்ப - போர்க்
களத்தில் இறங்கினான்;
கரும வீரனாய்ப் பிறங்கினான்!

'வெள்ளையனே!
வெளியேறு!' என
வெடித்ததே
விடுதலை வேள்வி

அற்றை நாள்
அரசின் நெஞ்சில்...
எரிச்சலுடன்
எழுந்தது
'எங்கே சா.கணேசன்?'
எனும் கேள்வி!

தலைமறைவானான் - அந்தத்
திருமகன்;
தேச பக்தியும்
தெய்வ பக்தியும் -
ஒருசேரப் பெற்ற
ஒருமகன்!

ஆங்கில அரசு
அவனது...
வீட்டுப் பொருள்களை
விட்டது ஏலம்;

கேவலத்திலும்
கேவலமாய்க்
கெட்டுக் கிடந்தது - அன்றைய
காவல் துறையின் சீலம்!

சா. கணேசனின்
சம்சாரம் அணிந்திருந்த...
பத்தாயிரம் ரூபாய்கள்
பெறுமானமுள்ள
வண்ணமிகு -
வைரத் தோடுகள் - வெறும்
பத்து ரூபாய் ஏலத்தில்
போயின;
முப்பதுக்கும் மேற்பட்ட
மின் விசிறிகள்
முக்கால் ரூபாய்
மதிப்புள்ளவைகளாய் ஆயின!

ஏலம் விடுத்ததும் -
ஏலம் எடுத்ததும் -
காவல் துறை; அன்றைய
காவல் துறைக்கு அதுவொரு கறை!

●●●

எல்லாவற்றையும் இழந்தவன் -
எஞ்சிய வாழ்நாள்களை...
கவிச்சக்கரவர்த்தி -
கம்பனுக்காகவே செலவிட்டான்;
கண்ணையும் கருத்தையும் -
கம்பன் கவிவழி செலவிட்டான்!

கம்பனையே உண்டான்;
கம்பனோடு உறங்கினான்;
கம்பனோடு உலவினான்;
கம்பனையே உடுத்தினான்!

பௌராணிகர் கைக்குள் -
பொத்திவைத்திருந்த கம்பனை...
விடுவித்து -
ஊர்ச் சொத்தாய் ஆக்கினான்;
கம்பனுக்குக் -
கழகம் கண்டு -



சகல மதத்தாரையும் - அவன்
சீர்த்தி பாட ஊக்கினான்!

●●●

நாட்டரசன் கோட்டையில்- துயிலும்
பாட்டரசன் ஆசைப்படி - ஒருநாள்
அவன்
அருகில் -
கண்ணுறங்கப் போனான்
கம்பன் அடிப்பொடி!

## 22. வாகீச கலாநிதி

கி.வா.ஜ. என்பது
'கிருஷ்ணராஜபுரம் -
வாசுதேவ ஜகன்னாதன்' என்று -
விரியும்; அவன் -
'வாகீச கலாநிதி' என்பதும் -
வையத்திற்குப் புரியும்!

கட்டுக்குடுமி;
கண்ணாடி;
கதர் வேட்டி;
கதர் ஜிப்பா;
ஆகியவற்றோடு
அம்புவி மீது -
கால்கொண்டு நடந்த
கலிவெண்பா!

நெற்றியில்
நீறு;
சிந்தையில்
செந்தமிழ் ஆறு;
என -
எழுந்தருளினான் ...

எண்பத்திரண்டு அகவை
எட்டும் வரை - நாம்
எல்லோரும் - கைகள்
எடுத்துக் கும்பிடு மாறு!

●●●

அவன்
அருச்சித்திருக்க வேண்டும் -
காலம் காலமாக

கலைமகள் அருந்தாள்;
ஆதலால் தான்
அவனது -
கைகளுக்குள்
'கலைமகள்' இருந்தாள்!

அது மட்டுமல்ல;
அவன்...

பாலகனாயிருந்து
'பார்வதி' யிடம் -
முலைப்பா லுண்ட
மற்றொரு ஞானசம்பந்தன்;

அவனது
அகத்துள்
அனவரதமும்
அமர்ந்திருந்தான்...

அஞ்செழுத்து
அண்ணலாகிய
சோமாஸ்கந்தன்!

●●●

கீர்த்திமிகு
கி.வா.ஜ. எனும் பெருந்தகை...
அறிவில் -
அசாதாரண மானவன்;
அந்தத் தமிழ்த் தாத்தாவின் -
அசாதாரண மாணவன்!

சுருக்கமாகச் -
சொல்லப் போனால்...

தண்டமிழே



தனக்குப் புகல் - என
வாழ்ந்திருந்த
உ.வே.சா.வின் நகல்!

அரைகுறையாய் நின்ற - தன்
ஆசிரியப் பிரானின் -
சுய
சரித்திரத்தை...

அவன்தான்
அழகுறப் பூர்த்தி செய்தான்;
அன்னணம்
அரும்பணி ஆற்றி -
அறிவு கொளுத்திய
ஆசானுக்கு...

குருதட்சிணை போல்
குன்றனைய கீர்த்தி செய்தான்!

●●●

அருங் குணவதி
அலமேலுவின் ஆளன்; கதர்த் -
துண்டு
துவளுகின்ற தோளன்;
மேதாவிலாசத்தால்
மேவிய புகழில் - அந்த
மேற்குத் தொடர்ச்சி
மலையை விட நீளன்!

புதினங்கள் -
புனைந்தவன்;
விருத்தங்கள் -
வெண்பாக்கள் -
வரையிலாது -
வனைந்தவன்;

நாட்டுப் பாடல்களில்
நனைந்தவன்; அவற்றை -
முழுக்கவும் வெளிக்கொணர
முனைந்தவன்!

அம்மாவோ!
அவனது...

நாக்கு
நிலத்தில் -
சிற்றோடை எனப் பெருகும்
சிலேடை; அவன்
சேமித்துத் தந்தான் - ஆயிரம்
சொலவடை!

எத்துணையோ -
எழுத்தாளர்களுக்கு -
ஏணியா யிருந்து - தன்
ஏடுமூலம் ஏற்றினான் மேலே;

புதியவர்கள் மீது, -
புகழ் வெளிச்சத்தைப் -
பாய்ச்சினான் - அவனுக்குப்
பரந்தமனம் இருந்ததனாலே!

காலம் மாறிய போதும் - தன்
கோலம் மாறாதவன்; புகழ்ச் -
செல்வம் ஏறியபோதும் - தன்
சீலம் மாறாதவன்!

●●●

ஆயிரம் பிறைகள் கண்டு -
அடங்கினான் மண்ணில்;
ஆயினும் வாழ்கிறான் -
அருந்தமிழ்ப் பண்ணில்!

- இன்னமும்
இருக்கின்றார்கள்...

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

## கவிஞர் வாலி

### 23. அல்லயன்ஸ் வி. குப்புசாமி அய்யர்

அற்றை நாளில்
ஆங்கிலம் என்பது...

தமிழ்த்தாய்
திருமுகத்தில்
தென்பட்ட - ஒரு
தேமல்; அந்தக்
களங்கத்தைப் போக்கும்
களிம்போடு வந்தார் ஒருவர்-
கிராமத்திலிருந்து; அந்த
கிராமத்தின் பேர் கோமல்!

●●●

ஒருநூறு -
வருடங்களுக்கு முன்...

கோமல்
குப்புசாமி அய்யர் -
ஆரம்பித்ததுதான்
அல்லயன்ஸ் பதிப்பகம்; அது -
தேன்தமிழ் நூல்களை
தேசத்துக்குத் தந்த திதிப்பகம்!

பண்டை நாளில் -
பதிப்பகத் துறையில்...

நஷ்டப்பட்டு -
கஷ்டப்பட்டு -
இருப்பினும்
இஷ்டப்பட்டு -

சிந்தைக்கு இனிய நூல்களை -
சந்தைக்குக் கொணர்ந்ததில்...

நாம் -
கும்பிடத் தகுந்தவர் - அய்யர்
குப்புசாமி; அந்தக்
குப்புசாமிக்கு இல்லை - ஓர்
ஒப்புசாமி!

●●●

**சென்ற நூற்றாண்டில்,
தமிழ் மண் தரணிக்கு வழங்கிய
மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!**

ஜூனியர் விகடன் 21.1.2003



அய்யரின்
அயராத முயற்சியால்தான்...

பங்கிம் சந்திரரும்;
பிரேம் சந்தும்;
கவி தாகூரும்;
காண்டேகரும்;

தமிழரோடு
தமிழில் பேசினார்கள்;
தமிழரோடு
தமிழராகவே ஆகி -
தமிழர் இல்லங்களில்
தகத்தகாயமாய் ஒளி வீசினார்கள்!

அண்ணல் காந்தி -
அய்யரை மெச்சினார்;
முப்பதுகளில் -
மூதறிஞர் ராஜாஜி - தான்
ஆக்கிய நூல்களை
அச்சிட்டு வெளியிட -
அல்லயன்ஸ் உறவையே
அதிகம் நச்சினார்;
முத்தமிழை
முன்னிறுத்தும் முயற்சியில்...

அய்யர்
ஆரம்பித்தார் -
'விவேக போதினி' எனும்
வண்ணமிகு மாத ஏட்டை;
அது
ஆண்டுகள் இருபது -
ஆட்சி புரிந்தது
அருந்தமிழ் நாட்டை!

●●●

ஒரு மலை; அதன்
உச்சியில் ஓர் அகல்விளக்கு!

இதுதான் - அல்லயன்ஸ்
ஏற்றிருக்கும் சின்னம்;
நிற்கின்றது - எங்கணும்
நல்லொளி பரப்பி இன்னும்!

'அகல்' என்றால்
அகலுமா காரிருள்?
அகல் ஏற்றினால்தான்
அது அகலும்;
அல்லயன்ஸ் எம்பளமும் -
அதைத்தான் புகலும்!

இன்று
இசையொடு -
பிறங்குகிறது
பசுந்தமிழ் மொழி; அதைப்
பலரும்
பன்னூல் வழி பயில -
போட்டார் அய்யர்தான்
பிள்ளையார் சுழி!

●●●

சொல்லிப் போனான் பாரதி -
மெல்லத் தமிழினிச் சாகும் என்று;
பாரதி சொல்லைப்
பொய்யாக்கியது -
குப்புசாமி அய்யர்
கொட்டிய வேர்வை அன்று!

நாடாத் தறிகளில்
நெய்யும் நூல்கள் -
மானுடத்தின்
மானம் காக்கும்;

ஆன்றோரும் சான்றோரும் -
அவர்தம்...

நாக்குத் தறிகளில்
நெய்யும் நூல்கள் -



மானுடத்தின்
ஞானம் காக்கும்!

●●●

குப்புசாமி அய்யரின்
குழந்தையான...

அல்லயன்சுக்கு - இன்று
அகவை நூறு;
அதற்குக் காரணம்
அய்யர் போட்டார் - அது
உண்டு வளர
ஒண்டமிழ்ச் சோறு!

## 24. பி.ஸ்ரீ.

'பிதாமகன்!
பீஷ்மாசாரியா!'
என்றெல்லாம்
எல்லா -
எழுத்தாளர்களாலும்
ஏத்தப் பெற்றவர்...
பி.ஸ்ரீ. எனப்படும் -
பி.ஸ்ரீ. ஆசார்யா!

தமிழ் வரலாற்றில்
தனது திருப்பேரை -
பதித்துச் சென்ற பி.ஸ்ரீ.
பிறந்த ஊர் தென் திருப்பேரை!

●●●

நம்மாழ்வாரைத் தவிர -
நானிலத்தின் கண் -
மற்றொரு தேவை

மனத்தாலும் நினைத்தறியாத...

மதுரகவி ஆழ்வாரின்
மரபில் வந்தவர்;

ஆதலால்தானோ என்னவோ?
அருந்தமிழில் - பி.ஸ்ரீ.
ஆழ்வார்கள் வரலாற்றை
ஆக்கி நமக்கெலாம் தந்தவர்!

தாத்தா சிலேடைக்கவி;
தந்தை சித்திரக்கவி;
இத்தகு -
இசை மிகு...

கவிராயர்
குடும்பத்தில் -
கண்மலர்ந்த
காரணத்தால் -

ஆசாரியாவின்
அரிய படைப்புகளை -
'அமுதம்! அமுதம்!' என -
அருந்த நேர்ந்தது செந்தமிழர் செவி!

●●●

அவருக்கு
ஆங்கிலமும் தமிழும் -
அத்துப்படி
ஆயின;

கம்பனிடமும்; ஆங்கிலக்
கவிஞன் ஷேக்ஸ்பியரிடமும்;
காதலாகி, அவர்
கசிந்து கண்ணீர் மல்கியதால்...

அனேக நாள்கள்
ஆசாரியாவின் -
விழி மலர்கள்
உறக்கமற்றுப் போயின!

ஒன்றா? இரண்டா? அவர்
உருவாக்கிய நூல்கள்;
இன்றளவும் - அவை
இருந்தமிழ் மாளிகையைத் -
தளர்ந்து போகாது -

தாங்கி நிற்கும் கால்கள்!

●●●

தேசப்பற்றும்; தமிழ்த் -
தாயின் பற்றும்;

பி.ஸ்ரீ.யைப்
பித்தாக்கி வைத்தன;

மண்ணும் -
மொழியும் -

தறிகெட்டுத்
தாழ்வுற்றுக்
கிடந்தது - பெருங்
கவலைகள் ஆகி...
ஊசிகள் போல் - அவரது
உள்ளத்தைத் தைத்தன;

அவர்
ஆக்கிய -
பாரதக் கதைகள்
பல்லுயிரை உய்த்தன;
விகடனில்
வெளிவந்த - அவரது
சித்திர ராமாயணத்தை -
செந்தமிழ் உள்ளங்கள் துய்த்தன!

●●●

ஆசாரியா
அருளிய -
'இராமானுஜர்' - அவருக்கு
இறவாப் புகழைத் தந்தது;
அந்த நூலுக்காக - சாஹித்ய
அகாதெமி விருது -
ஆர் சிபாரிசுமின்றி -
அவரைத் தேடி வந்தது!

ஏராளமான -
எழுத்தோவியங்கள் -
எழில் மிகுந்தவையாய்;
ஏத்தத் தகுந்தவையாய்;

தொண்ணூற்றாறு வயதுத்
தொண்டு கிழமாகும்வரை -



பி.ஸ்ரீ.யால்
படைக்கப்பட்டன;
பல்வேறு அமைப்புகள் - அந்தப்
பெருமகனாரின் திருத்தோளுக்குப்
பூவாரங்கள் தொடுத்து - நன்றிப்
பெருக்கோடு இட்டன!

●●●

ஆதி நாள்களில் -
அவர்...

போலீஸ் துறையிலும்
பணியாற்றினார்;
வெள்ளைக்காரன்
வழங்கிய உத்தியோகத்தை
வேண்டா -
வெறுப்பாகப் போற்றினார்!

மகான் அரவிந்தரையும்;
மகாகவி பாரதியையும்;
வேவு பார்க்கும் வேலை
வழங்கப்பட்டது;
அது - அவரது
அகச்சான்றைச் சுட்டது;

சுட்டதும் - கை
விட்டது;
அதன் பலனாக - தமிழ்
ஆனந்தத்தைத் தொட்டது!

- இன்னமும் இருக்கின்றார்கள்...



# குரு சிஷ்யன்



**ஜி. கௌதம்**

குழப்பம் வடியும் முகத்துடன் ஆசிரமத்துக்குள் நுழைந்தான் சிஷ்யன், கூடவே இரண்டுபேர் வந்திருந்தனர். குருவின் முன்னால் அவர்களை அழைத்துப் போனான் சிஷ்யன். அவனது முகத்தில் குழப்ப ரேகையைப் படித்துவிட்ட குரு, "என்ன காரணம்?" எனக் கேட்டார்.

"இவர்கள் இருவருமே இரட்டைப் பிறவிகள்தான். அழகும் அறிவும் சம அளவில்தான் இருவருக்கும் இருக்கின்றன. நானே பலமுறை பரிசோதித்துவிட்டேன். இருந்தாலும், ஒரு நிறுவனத்தில் பணிபுரியும் இந்த மூத்தவன் பலவருடங்களாக சாதாரண நிலையிலேயே இருக்கிறான். சொந்தமாக தொழில் நடத்தும் இளையவனோ வீடு, வாசல், கார் என சொத்து சுகங்களோடு பெரும் செல்வந்தனாகி விட்டான். இருவருமே ஒரே மாதிரியான நபர்கள்தான். எப்படி வெற்றி வாய்ப்பில் வேறுபட்டிருக்கிறார்கள்? அதுதான் எனக்குப் புரியவில்லை!" என்றான் சிஷ்யன்.

குருவின் பதிலைக் கேட்பதற்காக அந்தச் சகோதரர்களும் ஆர்வ மானார்கள். குரு பேசினார்:

"ஒரு மனிதனால் தினமும் பத்து மைல் தூரம் நடக்க முடியும் எனில், நூறு மைல் தூரத்தில் உள்ள ஒரு ஊருக்கு ஒருவன் எத்தனை நாட்களில் போய்ச் சேர முடியும்?" என்றார்.

"பத்து நாட்களில்" என்றான் சிஷ்யன். புன்னகைத்துக் கொண்டார் குரு. சகோதரர்கள் இருவரையும் ஏற இறங்கப் பார்த்தபடியே பேச ஆரம்பித்தார்...

"இல்லை. நேரம் காலம் பார்க்காமல் வெற்றியை மட்டும் குறிக் கோளாகக் கொண்டு நடக்கும் இந்த இளையவனால் மட்டுமே பத்து நாட்களில் அந்த ஊர் போய்ச் சேர முடியும். அலுவலக நேரம் எப்போது முடியும், எப்போது வீட்டுக்குப் புறப்படலாம் என தினமும் காத்திருக்கும் மூத்தவனுக்கு வாரத்தில் இரண்டு நாட்கள் விடுமுறை வேறு! அதனால் தாமதமாகத்தான் அவனால் இலக்கை அடைய முடியும்" என்றார்.

**உழைப்பின் பலன் புரிந்தது அனைவருக்கும்.**

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

## 25. கே.பி. சுந்தராம்பாள்

'கொடுமுடி'யில் தோன்றி -
புகழின்
கொடுமுடியைத் தொட்டவர்;
கானத்தைக்
கற்கண்டுக் கரைசலாக்கி -
காற்றுவழி - நம்
காதுகளில் விட்டவர்;
நம் -
நெஞ்சங்களை
நாற்றங்கால்களாக்கி -
நற்றமிழ் இசையெனும்
நாற்றை நட்டவர்;
மேடையில் பாடுகையில்
மேல் ஸ்தாயியை -
மிகவும்
மெனக்கெடாமலே தொட்டவர்!

●●●

வெண்டாமரையும்;
வீணையும் இல்லாமல் -
வெள்ளைச் சேலையோடு மட்டும்
வையம் உலவிய வாணி;
சுந்தராம்பாளின்
சாரீரத்தைக் கேட்டு -
சொக்கி சுருண்டு நிற்கும்
சோலைக் குயில்கள் நாணி;

சேந்தச் சேந்த
சங்கீத தீர்த்தம் -
சிறிதும் குறைவுபடாது
சுரந்து கொண்டிருந்த கேணி;
இறுதிவரை -
இசையுலகில் -
உறுதி கெடாது - செங்கோல்
ஓச்சி நின்ற ராணி!

●●●

வெண்கலக் கடையில் -
வேழம் புகுந்தாற் போல்...
ஒலிபெருக்கியின்
உதவியில்லாமலேயே - தன்

## கவிஞர் வாலி

**சென்ற நூற்றாண்டில்,
தமிழ் மண் தரணிக்கு வழங்கிய
மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!**



ஒலி பெருக்கிக் காட்டிய
ஒரே பெண்மணி...
மேலை நாள் - நாடக
மேடைகளில்; அதை -
மாந்தி மாந்தி
மன்பதை மிதந்தது -
உற்சாக
ஓடைகளில்!

நாடக மேடையில் - தன்னுடன்
நாயகனாக முழங்கிய...
கான கந்தர்வனான
கிட்டப்பாவையே -
கணவனாக வரித்துக்
கைத்தலம் பற்றினார்;
இலங்கை முதலிய -
இடங்களுக்கு...
நாடகங்கள்
நடத்த -
நாயகன் கூட - அவனது
நிழலாகவே சுற்றினார்!

கிட்டப்பா;
கே.பி.எஸ்;
இந்த ஜோடி
இணைந்து சோபித்த -
இசை நாடகங்கள்
இவையென்று...

'பவளக்கொடி'யையும்;
'வள்ளி திருமண'த்தையும்;
பார்த்துப் பார்த்துப்
பரவசப்பட்டது...

தினம் தினம் -
தமிழ்ச் சனம்!

●●●

குடியை - வயிற்றில்
குடிவைத்த கிட்டப்பாவை
குடியே - ஒருநாள் குடித்தது;
கைப்பிடித்தவன் -
கைவிட்டதால் -
கைம்மை - கே.பி.எஸ்.ஸின்
கையைப் பிடித்தது!

அம்மையார்
அன்று உடுத்தினார் -
வெள்ளை;
வெள்ளையை விடவேயில்லை-
கடைசிவரை
கொழுகொம்பிழந்த
அந்த முல்லை!

●●●

தியாகி சத்தியமூர்த்தி
தேற்றினார்;
கே.பி.எஸ்.ஸைக்
காங்கிரஸ் மேடையில் ஏற்றினார்!

சுந்தராம்பாள் -
சுதேசி கீதங்களைப் பாடி...
எல்லா மக்களுக்கும்
எழுச்சி ஊட்டினார்;
ஊரவர்
உள்ளங்களில் -
விடுதலைக் கனலை
வெப்பம்துப்ப மூட்டினார்!

●●●



பதின்மூன்று ரூபாயாய் -
பவுன் விலை இருந்த நாளில்...

ஒரு படத்தில் நடிக்க
ஒரு லட்சம் -
ஊதியம் வாங்கியவர்;
நாடு வியக்க - ஒரு
நாரீமணியாயிருந்தும்
நந்தனார் வேடம் தாங்கியவர்!

அதன்பின்-
அவர்...
மணிமேகலையாக;
அவ்வையாராக;
கவுந்தி அடிகளாக;
காட்சி தந்து...

திரையுலகில்
தமிழ்ப் பெண்டிர்க்கு - ஒரு
தகவு பெற்றுத் தந்தவர்;

'தனித்திருந்து' வாழ்ந்து -
'ஞானப்பழத்'தையே உண்டு -
தண்டபாணியின் திருப்புகழ்
பாடத்
தரணிக்கு வந்தவர்!

வேலை வணங்குவதே -
வேலை என வாழ்ந்தார்;

வேலை முடிந்ததும் -
வேலைப் பிடித்தவனை...

மனத்தில் இருத்தி -
மீளாத்துயிலில் ஆழ்ந்தார்!

## 26. 'அவ்வை'
## டி.கே.சண்முகம்

ஒரு -
சிற்றூர்;
சுசீந்திரம் பக்கம்; அங்கு -
சனித்த - டி.கே.
சண்முகத்தால்தான்...

எழுதப்பெற்று
ஏற்றம் பெற்றது -
நமது நாட்டின்
நாடக வரலாற்றுப் பக்கம்!

கண்ணுசாமிப் பிள்ளை-பெற்ற
கண்ணனைய பிள்ளை -

தனது
தலைசிறந்த கலைத்திறனால் -
தமிழ் மாந்தர்க்குத்
தந்த இன்பம் கொள்ளை;

கொள்ளை இன்பம்
கொடுத்த பிள்ளை -
கதரில்
கட்டிய...

உடையும் வெள்ளை;
உள்ளமும் வெள்ளை!

தேசப் பற்று;

தெய்வப் பற்று;
தமிழ்ப் பற்று;
கலைப் பற்று;
கவிதைப் பற்று;
கழியைப் பற்று;

என -
ஏரார்ந்த -
சண்முகம் கொண்ட பிள்ளை -
சண்முகம்!

●●●

'தாமரைத் திரு'
டி.கே.சண்முகம்...

'அண்ணாச்சி' என
அனைவராலும்
அன்பொழுக -
அழைக்கப்பட்டவர்;

மூன்றாம் தமிழ் - நன்கு
முளைத்து...
கப்பும் கிளையும்
கால்பரப்பி நிற்கும் - நெடிய
தருவாக வளர - அதன்
வேருக்குத்
தண்ணீர் விட்டவர்;

செவிமடுப்பார் -
சிந்தை; அணுவைச் -
சிலிர்க்க வைக்கும் - தனது
செந்தமிழ்ப் பாட்டாலும்;

ஒன்பான் சுவைகளையும்
ஒருசேரக் காட்டி -
காண்போர் நெஞ்சைக்
களவு கொள்ளும் நடிப்பாலும்;



புகழின் சிகரத்தை-இளம்
பிராயத்திலேயே தொட்டவர்;

'முத்தமிழ்க் கலா -
வித்துவ ரத்தின' என -
வழங்கப் பெற்ற
விருதுக் கேற்ப...

மேடை தோறும் - கலை
மேவும் கோலம் இட்டவர்!

●●●

திரைத் துறையில்
தன்னுடைய -
தனி முத்திரையைத்
தகத்தகாயமாய்ப் பதித்து...
இன்றளவும்
இயக்குநர் ஸ்ரீதர் -
பயணிக்கும்
புகழ்வழி...

அன்று -
அண்ணாச்சி -
போட்ட -
பிள்ளையார் சுழி!

சண்முகம் எனும்
சொல்லுக்கு -
அருந்தமிழ் அருளும் பொருள்
ஆறுமுகம்;

-தொடர்ச்சி 87-ம் பக்கம்

21-ம் பக்கத் தொடர்ச்சி



இந்த ஆறுமுகம் -
இட்ட அனுக்கிரகம்தான்...

கலைஞானி
கமலஹாசன் -
கலைத்துறையில்
கண்ட ஏறுமுகம்!

டி.கே.சண்முகம் - எனும்
திருவிளக்கு...

ஏற்றி வைத்த விளக்குகள்
ஏராளம்;
அதற்குக் காரணம்
அண்ணாச்சி என்னும் -
திருவிளக்கின்
தாராளம்!

●●●

'அவ்வை' வேடம் தாங்கி -
'அவ்வை சண்முகம்' ஆனார்;

அந்த வேடத்தை ஏற்று -
அருந்தமிழில் - அந்த
மூதாட்டி வழங்கிய
முதுரைகளை...

கோடானுகோடி மக்களின் -
காதுகளுக்குக் கொண்டு போனார்!

'ராஜராஜ சோழ'னில் - நவ
ரசங்களையும் பிழிந்து...

தொல்குடியாம்
தமிழ்க்குடியின் -

மாண்புகளை
மரபுகளை - இந்த
மண்ணுக்கு
மீண்டும் நினைவு படுத்தினார்;

இன்னணம் -
இயற்றமிழிலும் இசைத்
தமிழிலும்...

நாளும் - புது
நாடக ஆடை நெய்து
கலைத்தாய் -
கவினுற உடுத்தினார்!

●●●

'விடுதலை' கீதம் பாடிய
வரகவியாம் பாரதி...

தனியார் சிறையில்
தவித்தபோது - அவன்
பூந்தமிழை மீட்டுப்
பொதுவுடமை ஆக்கினார்;
மகாகவிக்கு உற்ற -
மாசு நீக்கினார்.

●●●

தலையாய தமிழ்க் கலையை
தலைமேல் தாங்கினார்; அம்
வளரும் கலைஞர்களுக்கு
வைப்பு நிதியாய் வழங்கிவிட்டு
வானம் அழைக்க
வையம் நீங்கினார்!

- இன்னமும் இருக்கின்றார்கள்...

# சென்ற நூற்றாண்டில், தமிழ் மண் தரணிக்கு வழங்கிய மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!

# கவிஞர் வாலி

## 25. பாபநாசம் சிவன்

'சிவன் பாட்டுக்கு முன் -
எவன் பாட்டு எடுபடும்?'
உரைத்தது நானல்ல;
உடுமலை நாராயண கவி;
உடுமலையார் கூற்றை -
வழிமொழிந்தது புவி!

தொல்லிசை;
மெல்லிசை;
இவை
இரண்டிலும்...

சமத்காரமாக -
சாகித்தியம் புனையவல்ல
கவி;
இன்னமும் - அவர்
இயற்றிய கிருதிகளை
ஏந்தி நிற்கின்றது -
எத்தனையோ செவி!

சாகித்திய ஞானமும் -
சங்கீத ஞானமும் -
ஒருசேரப் பெற்ற
வாக்கேயகாரர்;

'தமிழ்த்
தியாகையர்'
என -
ஏத்துவர் ஊரர்!

●●●

'போலகம்' எனும் ஊரில் -
பூத்தவர்;
'இராமையா' எனும் -
இயற்பெயரை நீத்தவர்;
'பாபநாசம் சிவன்' எனும்
பெயரில் -
பன்னூறு பாடல்களை
பாவமொடு யாத்தவர்;
இசைமணம் பிலிற்றும்
இருந்தமிழ்ச் சொற்களை -
பூச்சரம் போல் - ஒரு
பாச்சரமாய்க் கோத்தவர்!
வடமொழி;

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்



தென்மொழி;
இவை
இரண்டும் -
ஏற்றம் பெற்றன - இவரது
எழுத்துகள் வழி!

●●●

பாகவதர் குரல்;
பாபநாசம் சிவனின் விரல்;
இவை
இணைந்தால் போதும் - படக்
கொட்டகைகளில்
கூட்டம் அலை மோதும்!

'சிந்தாமணி'
'சிவகவி'
'அம்பிகாபதி'
'அசோக்குமார்'
என -
எழுதப் புகுந்தால்...
பாகவதர் படங்களின்
பட்டியல் நீளும்;
பாபநாசம் சிவனின்
பாட்டுகள் தாம் -
பிரக்கியாதி பெற்ற - அந்தப்
படங்களை ஆளும்!

●●●

சிவன் - தமிழ்
சினிமாவில்...
கால் நூற்றாண்டு காலம் -
கோலோச்சினார் -
ஏக சக்கிராதிபதியாக;
எழுந்து நடந்த சங்கீத நதியாக!

வார்த்தைகளை - சிவனே
வர்ணமெட்டோடு வார்ப்பார்;
இசையமைப்பாளர் - என
இருப்போர் எவரும் -
பாபநாசம் சிவன் பாட்டுக்குப்-
பின்னணி இசைமட்டும் சேர்ப்பார்!

நாவில் - சரஸ்வதி
நர்த்தனம் ஆடினாள்;
வார்த்தை வாய்க்காலாய் - அவர்
வாய்க்குள் ஓடினாள்;
அவ்வளவு ஏன்?
அவளே -
ஆண் வேடம் தரித்து
அவராக வந்து பாடினாள்!

●●●

சினிமாவிற்கான -
சிந்துகளைப் புனைந்தவர்;
கர்நாடக இசையைக்
கற்றறிந்த வித்துவான்களின் -
வணக்கத்திற்கும்
வாழ்த்துதலுக்கும் உரியவராகி -



மும்மூர்த்திகளுக்கு நிகரான -
முழுக்கீர்த்தியில் நனைந்தவர்!

பாபநாசம் சிவனைத் தவிர -
பிறிதொருவர்...
இன்னணம்
இரு துறையிலும்....
கவுரவிக்கப்பட்ட
கவி இல்லை;
பாபநாசம் சிவனின்
பாடலைக் கேட்காத
செவி -
செவி இல்லை!

●●●

மார்கழி
மாதத்தில்,
மயிலை
மாட வீதியில்...
பக்திப்
பனுவல்களைப்
பாடி வருவார்
பாபநாசம் சிவன்;
அவரைத் - தன்
அருகிலேயே
வைத்துக் கொள்ள
விரும்பி...
ஆகாயம் -
அழைத்துப்போனான் சிவன்!

## 26. உடுமலை நாராயணகவி.

உலகின் கண் -
உடு; மலை;

உள்ளவரை - ஊரவர்
உள்ளங்களில்
உட்கார்ந்திருப்பார் -
உடுமலை!

வாழ்ந்த
வாழ்வில் -
மடு; மலை; பார்த்தவர்
உடுமலை!

பருத்தித் தொழில் - அவரை
வருத்தியது;
பாட்டுத் தொழில் - அவரைப்
புகழ்த் தவிசில் இருத்தியது!

ஆக -
அவரை...
உதறியது ஒரு நூல்; அவருக்கு -
உதவியது ஒரு நூல்!

●●●

பகுத்தறிவால் -
பாமரர் மேம்பட....
'ஆகும் நெறியெது?
ஆகா நெறியெது?'



என

எழுதி -

அவர்களுக்கு

அறிவு கொளுத்தினார்;

ஆயும்

அறிவுக்கு -

ஒவ்வாத

ஒவ்வொன்றையும்...

அவர் - தன்

அறிவால் கொளுத்தினார்!

எவர்தான் -

எண்ணா திருப்பர்...

அவர்

ஆக்கிய -

'எல்லாம் இன்பமயம்' எனும்

ஏரார்ந்த பாட்டின் நயம்?

ஆர்தான் -

அறிய மாட்டார்...

'ஆடல் காணீரோ!' - எனும்

அற்புதமான பாடல்? அந்தப் -

பாடல் வரிகளில் - நாம்

பார்க்கக் கூடுமே -

அருள்மிகு

அங்கயற்கண்ணி -

கொலுவமர்ந்து

கோலோச்சும் கூடல்!

ஒன்றா? இரண்டா?

ஒண்டமிழில் -

நாராயண கவி

நல்கிய சிந்துகள்? யாவும் -

புகழ்

பல்கிய சிந்துகள்!

* * *

உடுமலைப்பேட்டையை

ஒட்டி...

ஓர் -

ஊர்;

'பூளவாடி' - அதன்

பேர்;

நாராயண கவியை

நாட்டுக்குத் தந்ததால்...

பூளவாடி

பெற்றது -

பெரும்

பேர்!

நாவில் -

நற்றமிழின் -

பண்சுமந்த

பிள்ளையை - மடியிலொரு

பெண் சுமந்து

பாருக்குத் தந்தாள்; நாம் -

போற்றுதற் குரியது - அந்தப்



புண்ணியவதியின் செந்தாள்!

அன்னணம் - ஓர்
அரிய கவியைப் -
பெத்தம்மாள் பேர் -
முத்தம்மாள்!

'கால் முளைத்த
கீர்த்தி பூமி' - எனப்படும்
கவிராயர் தந்தை பேர்
கிருஷ்ணசாமி!

●●●

முதுபெருங் கவிஞர் - உடுமலை
முத்துசாமியிடமும்;
சங்கரதாஸ்
சாமியிடமும்;
நாராயண கவி
நல்ல தமிழைக் கற்றார்;
கவிபாடும் திறன்
கைவரப் பெற்றார்!

வாழ்ந்த நாள்
வரை - ஓர்
வரையாய் நின்று -
வரையாது நற்கவி -
வரைந்து வழங்கியவர்;
முத்தமிழில் - தன்
முத்திரை பதித்து -
மூலை முடுக்கெல்லாம்
முழங்கியவர்;
பொழுதும் பூந்தமிழோடு -
புழங்கியவர்!

கலைமகள் இருந்தாள் -
கவிராயர் நாவில்;
கவிராயர் இருந்தார் -
கலைவாணர் நாவில்;
இன்னமும்
இருவரும் -
இருக்கின்றனர்
இம்பர் வாழ் தமிழர் நாவில்!

●●●

கடைசி வரை - நாராயணக்
கவிராயர் -
கவுரமும் கீர்த்தியும்
கவிழா ராயர்!

அவரை -
அழைப்பதுண்டு -
'வாத்தியார்' என -
வெண்திரை உலகில்;
அவரது -
அருமை பெருமை
அடங்குமோ - ஓர்
அலகில்?

- இன்னமும் இருக்கிறார்கள்...

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

## 27. டாக்டர் மு.வ.

முத்தமிழ்-என்றும்
முவா-
என-தன்
எழுத்தால்-
முதரித்தவர்
மு.வ.

அன்னைத்தமிழின்
அடியிணைக்கு-
அவர்
அணிவிக்காத பூவா?

கதை;
கட்டுரை;
கடிதம்;
காவியம்;
என்றெல்லாம்
ஏற்றம் பெறவேண்டி-
நற்றமிழ் அமர்ந்த
நாற்காலிதான் அவர் நாவா?

●●●

மு.வ. எனப்படும்-
மு.வரதராசனார்...

வடஆர்க்காடு-மா
வட்டத்தைச் சேர்ந்த-
'வேலம்' எனும்-ஊர் விளைந்த
சீலம்;
வண்ணத் தமிழுக்கு-
வந்து வாய்த்த நல்ல காலம்;
தமிழுக்கும்;
தமிழர்க்கும்-
இடையே
இருந்த-
இடைவெளியைப் போக்க
இறையவன் எழுப்பிய
பாலம்;

முன்செய்த தவத்தால்-
முனிசாமி; அம்மாக்கண்ணு;
எனும்-
தகவுமிக்க
தம்பதி-ஆண்
மகவு எனும் பேரால்-வரைந்த
மணித்தமிழ்க் கோலம்!
'திருவேங்கடம்' எனும்-
திருநாமத்தை...
பிள்ளைக்கு இட்டனர்

## கவிஞர் வாலி

சென்ற நூற்றாண்டில்,
தமிழ் மண் தரணிக்கு வழங்கிய
மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!

ஜூனியர் விகடன் 11.2.2003



பெற்றோர் அன்று;
ஆயினும்-
அந்தப் பிள்ளை...
பாட்டனார்
பெயரால்-
விளிக்கப் பெற்றது
'வரதராசன்' என்று!

●●●

பள்ளி;
பச்சையப்பன் கல்லூரி;
பிறகு -
பல்கலைக்கழகம்;

ஆம்; தமிழ்
ஆசிரியராக-
வாழ்வைத் தொடங்கி
வேந்த ரானவர்;

ஆய்ந்து-
ஆய்ந்து-
தோய்ந்து-
தோய்ந்து-
மாய்ந்து-
மாய்ந்து-
தூய தமிழில்
துறை போனவர்!
வாசிக்கும் மாணவர்களால்
நேசிக்கப் பட்டவர்;
நேசிக்கும் மாணவர்களால்
வாசிக்கப் பட்டவர்;
தமிழ்கனம் ஏற்று-
தலைகனம் விட்டவர்;
தமிழறிலா தாரையும்-
தமிழால் தொட்டவர்!
ஆறுமொழி
அறிந்திருந்தும்-
ஆரிடமும்
அன்புமொழியால் பேசியவர்;
வள்ளலார் போல் - கைகள்
வீசி நடக்கவும் கூசியவர்
அகவை
அறுபத்திரண்டில் -
அடங்கும்வரை
அறிவு வெளிச்சம் வீசியவர்!
உலக
உலாவந்த...
முதல் தமிழ்ப் பேராசிரியர்
மு.வ. எனலாம்; அவர்
பல்வேறு நாடுகளில்
பாய்ந்து - நெஞ்சங்களைப்
பதப்படுத்திய
பசுந்தமிழ்ப் புனலாம்!

●●●

'கள்ளோ? காவியமோ'
'கரித்துண்டு'
'அல்லி'
'அகல்விளக்கு'
இவையலால்-அவர்
இயற்றிய...
தமிழ் மறை-
திருக்குறள் உரை;
காருள்ளளவும்; கடல்
நீருள்ளளவும்: தமிழ்ச்
சீருள்ளளவும்; தமிழர்
சிந்தையில் நிற்கும்; நாளை-



முளைவிடும்
தலைமுறைகளும்-
மு.வ.வைக் கற்கும்!
முனைவர்-
மு.வ.வின்...
எழுத்துகள்-
எக்காலத்துக்கும் ஏற்றது;
மரணம்-
மு.வ.விடம் தோற்றது!

## 28. பண்டிதமணி மு.கதிரேசன் செட்டியார்

'யாதும் ஊரே;
யாவரும் கேளிர்!' என...
ஓர்-உலக
ஒருமைப்பாட்டை-
பாடிய
புலவர் பெருந்தகை - கணியன்
பூங்குன்றனார் ஊர்
பூங்குன்றம்; அந்தப்
பூங்குன்றத்தின்
புதுப்பெயர்தான் - ஓர்
மகிமைமிகு பாலனைப் பெற்ற
மகிபாலன்பட்டி;
ஆம்;
அவ்வூரில்தான்...
கண்மலர்ந்தது
'கதிரேசனார்' எனும்-
கன்னித் தமிழ்க்
கற்கண்டுக் கட்டி!

●●●

நகரத்தார் இல்லையென்றால்-
நற்றமிழும் சிவமதமும்-
நகரத்தான் சாத்தியமா?
நமக்கெல்லாம் சோறூட்டும்-
அகரத்தில் தொடங்குகின்ற-
அருந்தமிழை அவர்கள்தாம்-
சிகரத்தில் ஏற்றுவித்துச்
செகமறியச் செய்தாரென்பேன்!
அதற்கு-
அத்தாட்சியாகக்
காட்டலாம்-பண்டிதமணி
கதிரேசன் செட்டியாரை;
பாதம் முளைத்து-இப்
படிமிசை ஊர்ந்த பண்டிதத் தேரை!
இளம்பிள்ளை வாதத்தால்
இருந்தது-அந்த...
ஒண்டமிழ்ப் புலவர்க்கு
ஒருகால் ஊனம்; இல்லை-
ஒண்டமிழ்ப் புலமையில்
ஒருகாலும் ஊனம்!
வடமொழியும்
வண்ணத் தமிழும்-
வீற்றிருந்தன
விரல் நுனியில்;
நற்கருத்தும்
நகைச்சுவையும்-
குமிழியிட்டடித்தன
குரல் நுனியில்!

●●●

முத்துக் கறுப்பரும்; கற்பின்-
முனைமுறியாச் சிவப்பி ஆச்சியும்-
பெத்துப் போட்ட-பிள்ளைப்
பெருஞ்செல்வம்; நம்



அனைவர்க்கும் கிட்டிய-
அருஞ் செல்வம்; நமக்கெலாம்
தமிழுணர்வை-இன்றளவும்
தருஞ்செல்வம்; அளந்து-
இவ்வளவு என இயம்பவொணா-
இருஞ்செல்வம்;
கதிரேசனார்-எனும்
கவின்மிகு பண்டிதமணி;
எழுத்தி லடங்காது - அவரது
எழுத்துப் பணி!

●●●

'அரசஞ் சண்முகனார்;'
'கந்தசாமிக் கவிராயர்;'
'பண்டித சுந்தரேசுவர அய்யர்;'
ஆகிய-இவ்
அறிஞர் பெருமக்களிடம்....
வழுவற-
வண்ணத் தமிழைக் கற்றார்;
தருவை-
நாராயண சாஸ்திரி-எனும்
குருவை-
நாடிப் பயின்று - வடமொழி
ஞானம் வரப் பெற்றார்!

காளிதாசனும்;
கவுடிலினியனும்;
கதிரேசர்-
கைவண்ணத்தால்தான்...
தமிழருக்குத்
தெரிய வந்தனர்;

'மிருச்சகடிகா'வையும்-
'மாலதி மாதவ'த்தையும்-
'அர்த்த சாஸ்திர'த்தையும்-
ஆர்...
பண்டிதமணியலால்-
பசுந்தமிழர்க்குத் தந்தனர்?

●●●

மகாமகோபாத்யாய-
உ.வே.சா. போன்றோர்-
பாராட்ட - கதிரேசர்
'பண்டிதமணி' விருது பெற்றார்;

'முதுபெரும் புலவர்' என-
முழங்கினர் கற்றார்!
பின்னாளில்-
பண்டிதமணிக்கு-
'மகாமகோபாத்யாய' எனும்
மகத்தான விருதை...
அரசு-
அளித்தது; தமிழ்
கூறும் நல்லுலகு-
களித்தது!

●●●

வாழுநாள்
வரை...
தமிழுக்காக வாழ்ந்தவர்-இன்று
தமிழாக வாழ்கிறார்; வைகலும்-
தமிழ்க் காற்றாகத்-
தமிழரைச் சூழ்கிறார்!

-இன்னமும் இருக்கின்றார்கள்

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

## 29. ருக்மணி தேவி

மண்மிசை -
மாபெரும் மாண்பொடு பிறங்கும்...

ஜனநாயக நாட்டின்
ஜனாதிபதி பதவி -
வாசல் தேடி
வந்தது;
நுண்கலைகளை
நொடிக்கு நொடி -
ருசித்துக் கிடந்த
ருக்மணி தேவியின் உள்ளம்...

வந்த பத்வியை
வேண்டா மென்று
பணிவொடு மறுத்து - கலைப்
பணிக்கே பிரதானம் தந்தது!

அம்மையார்
அன்று -
அப் பதவியை
அங்கீகரித்திருந்தால்...

பாரதத்தின் - முதல்
பெண் ஜனாதிபதி எனும் பேரோடு-
வீற்றிருந்திருப்பார்; புகழ்
ஏற்றிருந்திருப்பார்; ஆனால் -
பரதம் முதலிய
பழங் கலைகளைத் -
தூக்கி நிறுத்தும் பணியில் -
தோற்றிருந்திருப்பார்!

● ● ●

அவரது பிறந்தநாள் - நான்கு
ஆண்டுக்கு ஒருமுறைதான் வரும்;
பிப்ரவரி இருபத்தொன்பது - அந்தப்
பெருமையை அவருக்குத் தரும்!

ஆனால் -
அவர் பிறந்தநாள் - ஆடற்
கலை -
கண்ணைத் திறந்த நாள்;
பரதம்;
பாகவத மேளம்;

சென்ற நூற்றாண்டில்,
தமிழ் மண் தரணிக்கு வழங்கிய
மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!

**கவிஞர் வாலி**



சங்கீதம்;
சாகித்தியம்;
அனைத்திற்கும்
அது சிறந்த நாள்;
அர்த்தமற்ற
ஆசாரங்கள் -
அவற்றின்
ஆளுமை நீங்கிப் பறந்தநாள்!

● ● ●

வடமொழியிலும் -
வண்ணத் தமிழிலும் -
நீண்ட பயிற்சியுடைய -
நீலகண்ட சாஸ்திரிக்கும்;

இசைப் புலமையும் -
இனிய பண்புகளும் - ஒன்றாய்
சேரப் பெற்றிருந்த -
சேஷம்மாளுக்கும்;

ஆறாம் மகவாய்
அவதரித்தவர் ருக்மணி தேவி;
பார்ப்போரைப்
பரவசப்படுத்தும்படி -
பருவத்தே
பேரழகாய்ப் பிறங்கினார்...

ஒரு
ராஜகுமாரிக்கு உரிய -
ரஞ்சிதம் ரம்மியம் மேவி!

தனது -
தந்தைக்கு நெருக்கமான-
அன்னிபெசன்ட்
அம்மையார் நிழலில்...
ஒரு மாணவியாகவும்;
ஓர் உதவியாளராகவும்;
இருந்து - ருக்மணி
இசை; கல்வி; ஓவியம்;
என -
எல்லாம் கற்றார்;
எல்லாவற்றிலும்
ஏற்றம் பெற்றார்!

● ● ●

கோயில்களில் - தேவ
கணிகையர் தம் -
கால்களில் மட்டுமே
கட்டப்பட்டிருந்த சலங்கையை...

குடும்பப் பெண்கள்
கால்களிலும் -
கட்டிவிட்டார் ருக்மணி தேவி;
கட்டுப்பெட்டிகள் அலறினர் கூவி!

பொருட்படுத்தவில்லை - அந்தப்
பெண்ணரசி;
சண்டித்தனம் செய்த
சனாதனம் - இறுதியில்
தோற்றது - அவரது
தோளோடு உரசி!

அய்யர்குலத்து
அரிவையாயிருந்தும் -
அயல்நாட்டவரான
அருண்டேலை மணந்தார்;
அருண்டேல்



அவரைவிட -
அகவை இருபத்து நான்கு
அதிகம் ஆயினும்...

பரஸ்பரம் அரும்பிய
பிரேமையின் திறத்தைப் -
பெரிதென - அப்
பெண்ணரசி உணர்ந்தார்!

● ● ●

நாட்டிய நாடகங்கள் -
நடத்தினார்; பிறப்பால் -
கீழ்மேல் என்னும் கீழ்மையைக் -
கிடங்கில் கிடத்தினார்;

பெசன்ட் அம்மையாருக்குப் பின்-
பிரம்ம ஞான சபையின்...

தலைவியா யிருந்து
தரணியெங்கும் சுற்றி வந்து -
உலக மாந்தரின்
உள்ளங்களைக் கடத்தினார்!

விருதுகள்- அவரை
விருதாகப் பெற்றன;
அப்படிப் பெறுவதில் -
அவை பெருமை உற்றன!

● ● ●

அனைவருக்கும்-
அவர் 'அத்தை';
அதற்குக் காரணம்
அவர் -
அவர்களுக் கெல்லாம் -
அன்புகொண்டு கற்பித்த வித்தை!

ஒருநாள் தொடங்கியது-
'ஓ'வென ஊரவர் அரற்ற..

இசைமிகுந்த ருக்மணி தேவியின் -
இறுதி 'யாத்ரா';
ஆயினும் -
அவர் இருப்பைக் -
காட்டிக்கொண் டிருக்கிறது -
'கலா க்ஷேத்ரா!'

## 30. வை.மு. கோதைநாயகி

வீடு நடத்தும்
வனிதையரால் -
ஏடு நடத்தவும்
ஏலும் எனக் காட்டியவர்;

'ஜகன்மோகினி' எனும்
ஜனரஞ்சகமான இதழை -
முப்பத்தைந்து ஆண்டுகள்
முனைந்து நடத்தி...

பேனா முனையால் -
பெரும்புகழ் ஈட்டியவர்;

மண்பார்த்து நடந்த
மாதரார் தமக்கு -
விண்பார்த்து நடக்க
வலிவும் பொலிவும் ஊட்டியவர்;

எண்ணற்ற
எழுத்தோவியங்களைக்
கண்ணற்ற பெண்மையின்
கண்திறக்கத் தீட்டியவர்!

● ● ●



வை.மு. கோதைநாயகியை
வாசிக்காத வீடு இல்லை;
இருபதாம் நூற்றாண்டின் -
இருபது முப்பதுகளில்...

இலக்கியம்;
இன்னிசை;
நவீனம்;
நாடகம்;
என
எல்லாத் துறைகளிலும் -
ஆழங்காற் பட்டதில்
அவருக்கு ஈடு இல்லை!

பாரதியின்
புதுமைப் பெண்ணுக்கு -
அவர்தான்
அருத்தம்;
அவரல்லால்
ஆரே அதற்குப் பொருத்தம்?

சயன அறைக்கும் -
சமையல் அறைக்கும் -
சடுகுடு ஆடிக்கொண்டு
சலித்துக் கிடந்த -

வஞ்சியர் நடுவே -

வை.மு.கோ.
ஒரு
வீராங்கனையாய்
வெடித்துக் கிளம்பினார்;
வித்தை கற்பதிலும் -
வீறுற நிற்பதிலும் -
விலங்கை உடைப்பதிலும் -
வெற்றி படைப்பதிலும் -

வேட்டிக்கும் சேலைக்கும் - இல்லை
வேறுபாடு என விளம்பினார்!

● ● ●

வை.மு.கோ.
விசிஷ்டாத்வைதத்தைப் பேணும் -
வைணவ குடும்பத்தில்
வந்துதித்த மகவு;

வைதிகச் சூழலில் -
வாழ்ந்து கொண்டே...

வையம் தழுவிய
விசால நோக்கோடு -
அவர்
ஆற்றிய -
பேதா பேதமற்ற
பணிகளைப் பார்க்கையில்...

வெறும் - ஒருசில
வார்த்தைகளில் -
அடக்க வொண்ணாதது
அவரது தகவு!

சத்தியமூர்த்தி ராஜாஜியோடு-
சேர்ந்து...

விடுதலை
வேள்வியில் -

வைத்தார் காலை; புகுந்தார்-
வேலூர் சிறைச் சாலை!

கிராமணித் தெருவில்
கள்ளுக்கடை மறியல்-
காந்தியின்
சட்டளைக் கேற்பப் பண்ணினார்;
தன்னுயிரைத்-
துச்சமாக எண்ணினார்!

வை.மு.கோ.
வாய்திறந்து-
பாரதி பனுவல்களைப்
பாடிய பிறகுதான்...

காங்கிரஸ் கட்சியின்
கூட்டம் தொடங்கும்;
அவரது இசை கேட்டு - மன்பதை
ஆர்ப்பரித்து அடங்கும்!

எழுத்தும்
பாட்டும் - அவர்
இழுத்த
இழுப்புக்கெல்லாம் வந்தன;
அவருக்கு -
அடிமைச் சீட்டெழுதித் தந்தன!

● ● ●

பட்டம்மாள்; வெங்கடாச்சாரி;
பண்ணிய புண்ணியம் -
அவர்களது
அன்பு மகளாய் -
வந்து பிறந்தது



வை.மு.கோ. எனும் பெண்ணியம்!

அகவை -
அஞ்சரையில்...

கோதைக்குப் பெற்றோர்
கல்யாணம் முடித்தார்; அவர்-
'பார்த்தசாரதி' எனும்
பத்து வயதை எட்டாத -
ஒரு சிறுவனின்
வலக்கரம் பிடித்தார்!

கோதையின்
கற்பனைத் திறனை -
வளர்த்தார் மணாளன்; வந்து-
வாய்த்த குணாளன்!

● ● ●

வெள்ளித் திரையில் - பெரும்
வெற்றி பெற்ற படம் 'சித்தி';
அந்த -
அற்புதக் கற்பனை -
விளைந்த நிலம் -
வை.மு.கோ.வின் புத்தி!

- இன்னமும் இருக்கிறார்கள்...

ஆசிரியர் : ராவ். அச்சிட்டவர் : எஸ். பிச்சை. பதிப்பாளர் : பி. வரதராசன். குமுதம் பப்ளிகேஷன்ஸ் (பி) லிமிடெட், 151, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, சென்னை-10ல் அச்சிடப்பட்டு வெளியிடப்படுகிறது.

"ஆனாலும் இந்த கல்யாணத்தை நடத்தறவர் மகா அல்டாம்..."

"ஏன் அப்படிச் சொல்றீங்க?"

"பாருங்களேன்... அப்பளத்துல 'மொய் எழுதி விட்டீர்களா'ன்னு பிரிண்ட் பண்ணியிருக்கார்!"

- கிரிஜா மணாளன்.





"ஏண்டாப்பா டி.விகாரா, மெகா சீரியல் பார்க்கறோம்னு ஆத்துல பெண்டு பிள்ளைகள் 'வெள்ளிக் கிழமை'கள்ல கூட நடுஹால்ல உக்காந்து அழறது அபசகுணமா யில்லே...? அதை சனிக்கிழமைக்கு மாத்தினா நீ கொறஞ்சா போயிடுவே?"

- கிரிஜா மணாளன்.

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

## 31. கே. சுப்பிரமணியம்

குடத்துறை விளக்குகள் பல-
குன்றிலிட்ட விளக்குகளாயின
படத்துறை புகுந்து; இப்-
பாரறியப் பிரகாசம் மிகுந்து!

எம்.எஸ்;
எம்.கே.டி. பாகவதர்;

இந்த -
இரு உதாரணம் போதாதா? அந்த -
இருவர் பிலிற்றிய-
இசை வெளிச்சம்...

கே. சுப்பிரமணியம் பெயரைக்-
காலாகாலம் ஓதாதா?

சுப்பிரமணியத்தின் -
சுட்டுவிரல் சுட்டி...
நிலத்தில் முளைத்த
நட்சத்திரங்கள் -
எண்ணிக்கையில் நிற்கும்
ஏறத்தாழ ஏழு எட்டை எட்டி!

•••

வக்கீலின்
வாரிசாகப் பிறந்து-
வக்கீலுக்கு

சென்ற நூற்றாண்டில்,
தமிழ் மண் தரணிக்கு வழங்கிய
மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!

**கவிஞர் வாலி**

தினமணி 25.2.2003



வாசித்து -
வக்கீலாய்
வேலைபார்க்க வேண்டி...

கோர்ட்டுக்குப் போகாது - படக்
கொட்டகைக்குப் போனவர்;
படவுலகின்-
பிதாமகன் என்று ஆனவர்!

இசைமிகு -
இயக்குநர் கே. சுப்பிரமணியம்...

தொடக்க காலத்தில்
தயாரித்து இயக்கிய -
பேசாப் படங்கள் கூட-மக்கள்
பேசும் படங்களாய் நின்றன;

அவரது -
அளப்பரிய -
ஆர்வமும்
ஆற்றலும்...

வீண் போகாது -
வென்றன;
நாட்பட -
நாட்பட-
நல்ல -
நாடகங்களை நோக்கி -

சுப்பிரமணியத்தின் -
சிந்தையும் செயலும் சென்றன!

•••

எம்.கே. தியாகராஜ பாகவதர்;
எஸ்.டி. சுப்புலட்சுமி;

இருவரும்
இணைந்து நடித்த -
'பவளக்கொடி' நாடகம் -
பெருங்கூட்டத்தை ஈர்த்தது;

அய்யர் -
அவர்களைக் கொண்டே -
அதைப் படமாக்க -
அறுபது பாடல்களோடு...

தமிழர் செவியில் - அது
தேனை வார்த்தது!

ஊமைப் படங்களின்
உதடுகளில் -
வார்த்தைகள் உட்கார்ந்து
வலம்வரத் தொடங்கிய காலம்;

தியேட்டர்கள் எங்கும் -
திருவிழாக் கோலம்!

•••

ராஜா சாண்டோவிடம்
ராப்பகலாகப் பழகி -
திரைப்படத் தொழிலைத்
திருத்தமறக் கற்றவர்;

கதையறிவு;
காட்சியறிவு;
காமிராக் கோணங்களைக்
கணிக்கும் அறிவு;

என-
எல்லா அறிவும் உற்றவர்;

வெற்றிமீது
வெற்றிவந்து -
மாலை சூட்டிய போதும்
மண்டைக் கனம் அற்றவர்;

கே. சுப்பிரமணியம் - எனும்
கனவானை கண்ணியவானை -
உலகுக் களித்தோர்
உண்மையில் நற்றவர்!

•••

இரு -
குழந்தைகள்
குழலூதி நின்ற -



ஜெமினி
ஸ்டுடியோ...

அய்யர் இருந்த இடத்தில்தான்-
ஆரம்பம் ஆனது; அதை-
விற்றார் அய்யர்; அது
வாசன் வசம் போனது!

•••

பெண் விடுதலை;
மண் விடுதலை;
சாதி
சமயச்
சழக்குகளிலிருந்து
சமூக விடுதலை;

அனைத்தையும்
அறவழிகளிலேயே -
சமர் செய்து பெறும்
சுமுக விடுதலை;

என -
ஏகப்பட்ட -

புரட்சிக் கருத்துகளை - ஒரு
புதின வடிவில் -
தாங்கி வந்தது - கல்கியின்
'தியாக பூமி';

விகடனில் -
வெளிவந்ததை -
வெண்திரையில் - அய்யர்
வரைந்து காட்ட...

தலைநிமிர்ந்து ஆர்த்தது -
தமிழர் பூமி!

அன்றைய -
ஆங்கில -
அரசாங்கம் -
அதற்கு விதித்தது தடை;

விதித்த தடை
விலக்கப் பெற்று -
பல வருடங்களுக்குப் பின் - அது
போட்டது வெற்றி நடை!

•••

நடிகர் சங்கம்;
நாதஸ்வர வித்வான்கள் சங்கம்;
என -அய்யர்
ஏற்படுத்திய அமைப்புகள்...

அகத்தளவில்
அய்யரை - ஒரு
பொதுவுடைமைக்காரர் என
பூமிக்குக் காட்டியது;
கலையுலகம் - அவர்
கழுத்துக்கு மாலை சூட்டியது!

•••

கே. சுப்பிரமணியம்
காலமானார் - நல்ல
இசையோடு
இலங்கையில்...
ஆயினும் - இன்றும்
அவர் வாழ்கிறார் -

புகழ் வாய்ந்த
புத்திரியாம் -
பத்மா சுப்பிரமணியத்தின்
பாதச் சலங்கையில்!

## 32. கலைவாணர்

தமிழகத்தில்
தோன்றிய -
பெரியார்கள் வரிசையில் - வைத்துப்
பேசுகிறார் வரா. -

கலைவாணரை; இன்னொரு -
கர்ணன்போல் வாழ்ந்தவரை!

என்.எஸ்.கிருஷ்ணன்-

எனும் -
இயற்பெயர்
இருப்பினும்...

கிருஷ்ணனை-
கலைவாணர் என்றே -
வையம்
விளித்தது;

கவலையிலும்
கண்ணீரிலும் -
அல்லாடிய உள்ளமெல்லாம்
அவரால்தான் களித்தது!

•••

நாகர்கோவிலுக்கு -
நெருக்கமாக...

ஓர் ஊர்; ஊர் பேர் -
ஒழுகினசேரி; அந்த -
ஊர்தான்
உதவியது -
ஊராருக்கு
உதவ வேண்டி -

இளகிய இதயம் படைத்த -
இன்னொரு பாரி!

பாரி போல் -
மாரி போல் -
வறியவர்க்குத் தந்தார் -
வாரி வாரி...

கலைவாணர் -
கடைசிவரை ;
அவர்
அனுப்பியதில்லை -
வெறுங்கையோடு - தன்
வீடுதேடி வந்தவரை!

நலிந்து போன - பல
நடிகர்கள் குடும்பம்...

அனேக
சமயங்களில் -
அவரை நம்பி உலை வைத்தது;
ஆதலால் ஊர் சிலை வைத்தது!

•••



சிரிக்க வைத்து
சிந்திக்க வைப்பதில் - அவர்
சார்லி சாப்ளினைச்
சாப்பிட்டவர்;

சிரித்தபடியே -
சமூகத்தை
சுத்தம் செய்யலாம் - என
சகலரையும் கூப்பிட்டவர்!

அரிய
அறிவுரைகளை...

நடிப்பின்
நடுநடுவே -
இயல்பாக
இழையோட விட்டவர்;

உம்மணாமூஞ்சிகளின்
உதடுகளில் கூட -
சிரிப்பு விதையை
சரளமாக நட்டவர்;

நையாண்டி எனும்
நாட்டுத் துப்பாக்கியால் -
பொய்மையும் புரட்டும்
பொசுங்கச் சுட்டவர்;

பெரியாராலேயே -
'பெரியார் இவர்தான்!' எனப் -
பெரிதும் -
பாராட்டப் பட்டவர்!

•••

பொதுவாக -
புவிமிசை -



பொருளும்
புகழும் -

தனக்குத் தரும் -
தன் தொழிலில்...

இன்னொருவருக்கு -
இடம் தந்து -
ஊக்குவிக்க - ஒருவரும்
உடன்படார்;

தன் தலையில் -
தானே -
மண்ணள்ளிப் போட்டுக்கொள்ள-
மனமொப்பி முனைந்திடார்!

கலைவாணர் - அந்தக்
காரியத்தைச் செய்தார்;

நிறைய-
நகைச்சுவை நடிகர்களை-
உண்டாக்கி -அவர்கள்
உயர ஊக்கி -

அவர் பெற்ற புகழ் வெளிச்சத்தை-
அவர்கள் மீதும் பெய்தார்!

ஒருவிளக்கு -
ஒன்பது விளக்குகளுக்கு -
ஒளி தந்தும் - தன்
ஒளி தாழாது நிற்கும்;

கலைவாணர் ஆற்றிய
காரியம் - அந்த
ஒரு விளக்கை
ஒக்கும்!

•••

நந்தனாரைக் -
சிந்தனார் ஆக்கினார்;
அதன் மூலம்
அனைவரையும் -
கல்வி
கற்றிட ஊக்கினார்;

புராணக் கதைக்குப்
புதிய பொருள் தந்து -
சாதி நந்தியை
சந்நதியிலிருந்து நீக்கினார்;

வைதிகத்தை -
வலிக்காமல் தாக்கினார்!

காந்தி
கதையை -
வில்லில்
வைத்தார்;
பாட்டு ஊசியால்
பல உள்ளங்களை -
மத
மாச்சர்யங்களால் -

கிழிந்து போகாதபடி -
கெட்டியாய்த் தைத்தார்!

கடைசிவரை -
கட்சி சாராது நின்றார்;
சகல கட்சிகளையும் -
சிநேகித்து -
வற்றாத - தன்
வாஞ்சையால் வென்றார்!

•••

அகவை
ஐம்பதில்...

கலைவாணர் - ஒருநாள்
கண்விழிக்க மறந்தார்;
ஆனால் - தன்
ஆயுள் காலத்தில்-
கலைவாணர் - பலர்
கண்களைத் திறந்தார்!

- இன்னமும் இருக்கின்றார்கள்...

## சென்ற நூற்றாண்டில், தமிழ் மண் தரணிக்கு வழங்கிய மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!

# கவிஞர் வாலி

### 33. நவாப் டி.எஸ்.ராஜமாணிக்கம்

தெய்வம்தான்- ஒரு மனிதனை
தேசமறியச் செய்வதுண்டு;
தெய்வத்தை-ஒரு மனிதன்
தேசமறியச் செய்வதுண்டோ?

உண்டு- என நான்
உரைத்தால்...

ஊர்-அதை
ஒப்பும்; ஆம்!
வாஸ்தவம்- என
வழிமொழிந்து செப்பும்!

அய்யப்பனை;
அரிஅர சுதனை;
அம்புலிமேல் அமர்ந்துவரும்-
அம்புலியை;
சபரிமலை - தர்ம
சாஸ்தாவை;
சகமறியச் செய்த
சரித்திர புருஷன்...

ஆர்? - என
ஆரேனும் வினவினால்...

அட்டியின்றி-
அந்த வினாவிற்கான-
ஜவாப் - நம்
நவாப்!

●●●

அய்யப்பனின்-
அருமை பெருமையை...
நாடறியச் செய்தார் - தன்
நாடகத்தின் மூலம் -
நவாப் ராஜமாணிக்கம் - எனும்
நல்லவர்; மேடையில் -
விந்தைகள் நிகழ்த்துவதில்
வல்லவர்!

வளர்ச்சியடைந்த
விஞ்ஞான அறிவை -
வைத்துக்கொண்டு
வெள்ளித் திரையில்...

இயற்றலாம் விந்தைகளை -
இன்று;
ஆனால் -
அன்று?

நவாப் நடத்திய
நாடகங்களில்...

குழந்தையைக்
கூடையில் சுமந்து நடக்கும் -
வசுதேவருக்கு - யமுனை
வெள்ளம் வழிவிடும்;

பிரகலாதனை மிதிக்கப்-
பிளிறிக் கொண்டு -
மதயானை -

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்



மேடையில் முழக்கமிடும்;

புலிகள் நூறு
பின் தொடர-

ஒற்றைப் புலிமேல்
உட்கார்ந்து கொண்டு-
அய்யப்பன்
அரண்மனைக்குள் வருவான்;
தாயின்
தலைவலி போக்கப்-
புலிப்பாலை - அந்த
பாலகன் கறந்து தருவான்!

இவைபோல்-
இன்னும்
எத்துணையோ?
எத்துணையோ?

●●●

ஒன்றல்ல; இரண்டல்ல;
ஓராயிரம் நாடக உத்தி-
கற்றுத் தெளிந்த
கலைஞர்-
நவாப் ராஜமாணிக்கம் - எனும்
நாடகச் சக்கரவர்த்தி!

மேடையில்-
மகாத்மா காந்தி-
ஓர்
ஓரமாய் உட்கார்ந்துகொண்டு...
நந்தனார்
நாடகத்தைப்
பார்த்து மகிழ்ந்தார்; நவாபைப்-
பாராட்டி நெஞ்சு நெகிழ்ந்தார்!

'பக்த ராமதாஸ்' நாடகத்தில்-
புகழ் வாய்ந்த-

நவாப் வேடம் தாங்கி
நடித்தார் ராஜமாணிக்கம்;
நடித்து- ஆனார்
நவாப் ராஜமாணிக்கம்!

'கிருஷ்ணலீலா'வில்-
கம்சனாக வருவார்;
வசன
உச்சரிப்பால் -
அதிரவைக்கும்
அட்டகாச சிரிப்பால்-

நாடகம் பார்ப்போருக்கு-
நடுக்கம் தருவார்!

●●●

நாடு மெச்சும்-திரைப்பட
நட்சத்திரங்கள் பலர்...

'நவாப்' என்னும்
நாற்றங்காலில் வளர்ந்து-
முழுமை பெற்றார்; ஒரு-
முகவரி உற்றார்!

எம்.என். நம்பியார்;
கே.எஸ். கோபாலகிருஷ்ணன்;
என-
எவ்வளவோ பேர்;

விருட்சமாக
விளங்க-
அவர்தான்
ஆணி வேர்!

●●●

நவாப்
நாளும் பொழுதும்-

'தேவி! தேவி!' என்பார்;
தேவி நாமத்தையே தின்பார்;
தேவி உபாசகர் பிள்ளை;
தேவிதோளில் தொத்திய கிள்ளை!

தெய்வ பக்தியும்-
தேச பக்தியும்-
ராப்பகலாய்க் கொண்டிருந்த-
ராஜமாணிக்கம் பிள்ளை...



தோன்றியது-
தஞ்சை மண்ணில்;
அவர்
ஆவி நீத்தபோது- நீர்த்
திவலைகள் கசிந்தன
தமிழ்த்தாயின் கண்ணில்!

## 34. நாதஸ்வர சக்கரவர்த்தி

குப்புசாமிப் பிள்ளையும்-
கோவிந்தம்மாளும்-
சுப்புசாமி பெயரைச்-
சூட்டினார்கள்...

பாலசுப்பிரமணியன் என்று-
பெற்றெடுத்த மகனுக்கு அன்று!

தாய்மாமன்
தத்தெடுத்தார்; தத்தெடுத்துப்-
புதுப்
பேர்கொடுத்தார்...

'ராஜ
ரத்தினம்' என்று;
பின்னாளில்-அந்தப்
பிள்ளை பிறங்கியது-
ராஜாவாகவும்-
ரத்தினமாகவும் நின்று!

●●●

ராகங்களால் - ஒரு
ராஜாங்கம் அமைத்து-
ரசிக நெஞ்சங்களை ஆண்ட-
ராஜரத்தினம் பிள்ளை...

நாடறிந்த-
நாதஸ்வர சக்கரவர்த்தி;
இன்றளவும்-
இசைக் கோயிலில்-
நின்று
நிலைத்து-
நறுமணம்
நல்கிடும் சந்தனவர்த்தி!

●●●

ஆச்சாமரம்;
அதுதான்...

நமக்கு
நாதஸ்வரத்தைத் தந்தது;

அந்த-
ஆச்சாமரத்திற்கு-
அவரால்தான்-ஓர்
அந்தஸ்து வந்தது!

ராஜ ரத்தினத்தின்-
ராக ஆலாபனையைக் கேட்டு-

ஊரவரை விட
உபரியாகச் சிலிர்த்தது- அவர்
ஊதிக் கனல் வளர்த்த
வாத்தியம்;

அவரால்தான்-
ஆனது...

வகை
வகையான-
வர்ணம்; கீர்த்தனம்- அந்த
வாத்தியத்திற்கு பாத்தியம்!

●●●

நீண்ட
நாதஸ்வரத்தின்...

துளைகள் வழி
தோண்டித் தோண்டிப்- பலாச்
சுளைகள் எடுத்துச்
சுவைக்கத் தந்தன நமக்கு-

அவர் விரல்கள்; ஆம்!
அவர் விரல் கள் வார்த்தன;
அவையோர்
அகங்கள்-
அதை

அள்ளிப் பருகி ஆர்த்தன!

ஸ்வரங்கள் ஏழும்- எந்த
ஸ்தாயியையும் எட்டும்;
சங்கதி மேல்-
சங்கதியாய்க் கொட்டும்;

கச்சேரி ஒவ்வொன்றும்-
களை கட்டும்;
நாளும் பொழுதும்-
நாதஸ்வரம்-
அப்படி வசமாகியிருந்தது-
அவருக்கு மட்டும்!

●●●

கதிரேசன் பிள்ளை தொடங்கி-
கண்ணுச்சாமி பிள்ளை வரையில்-

அனேகர் உண்டு-
அவருக்குக்-
கற்பித்த
குருக்கள்;

அவர்கள்
அனைவருமே...

ராஜரத்தினம் - என்னும்
ராகப் பறவையைத்-
தம் மடியேந்தி வளர்த்த - ஞானத்
தருக்கள்!

செம்மங்குடி
சீனிவாச அய்யரின்-
தாய் மாமன்
திருக்கோடிக்காவல் கிருஷ்ணய்யர்;
கோனேரி ராஜபுரம்-இசைக்
கோளரி வைத்தியநாதய்யர்;

இவர்களிடமும்- பிள்ளை
இசை பயின்றார்;
ஒரு நாளைக்கு
ஒருசில நாழிகளே துயின்றார்!

●●●

தஞ்சை ஜில்லாவில் உள்ள-
திருமருகலில் பிறந்த திருமகனை...

திருவருளும்
குருவருளும்-



விறுவிறுவென்று

விரைவாக ஏற்றியது புகழேணியில்;
ஊழ்- அவர்
உள்ளத்தை
மெல்ல மெல்ல
மிதக்கச் செய்தது மதுக்கேணியில்!

ஆயினும்
அதுபற்றியெல்லாம்-

ஊர் பேசாமல்- அவர்
ஊதி ஊன் உயிர் உருக்கும்-
சீர் பேசியது; அவருக்கு-
சாமரம் வீசியது!

'கவி காளமேகம்'
'மிஸ். கமலா'
பிள்ளை நடித்த -இரு
படங்கள்;
அவற்றிலும்
அவர் பதித்தார்-
தன் பாட்டுத்
தடங்கள்!

●●●

அகவை-
அம்பத்தெட்டில்-
அந்தப் பண்ணரசர்-
ஆனார் விண்ணரசர்!

அழுதது ஊர் கூடி;
அநாதையானது தோடி!

-இன்னமும் இருக்கின்றார்கள்

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

## 35. மாரியப்ப சாமிகள்

மண்கொண்டு பாண்டம் புனையும்
மரபில் பிறந்தார்; பசுந்தமிழ்ப்-
பண்கொண்டு பனுவல் புனைந்து
படிமிசை சிறந்தார்!

●●●

முகவை
மாவட்டத்தில்
முளைத்த ஊர்- 'பல்லி
முட்டை';
அங்கு - ஓர்
அற்புதக் குழந்தை -
அவதரிக்கக் காரணம்-
அவ் வூர்...
நெடுங்காலம் நிகழ்த்திய-
நிட்டை;

அந்த
அற்புதக் குழந்தைக்கு...

தமிழும்
தொல்லிசையும்-
தைத்து மாட்டின
தகத்தகாயமான புகழ்ச் சட்டை!

●●●

முட்டறியாத
மூன்று தமிழிலும்...

பூரணஞானம் பொலிந்துநின்ற-
பூச்சன் செட்டியார்க்கும்;
அருந்ததி அனைய-பெண்ணரசி
அலர்மேல் மங்கைக்கும்;
தகவு சேர்க்கத்-
தரைமிசை சனித்த
மகவு தான் -
மதுரை மாரியப்ப சாமிகள்;

இவரை-
இனங்கண்டு...

தான்-
தோற்றுவித்த-
'சமரச சன்மார்க்க நாடக-
சபை'க்கு-
சட்டாம்பிள்ளை ஆக்கினார்-
சங்கரதாஸ் சாமிகள்!

●●●

'கபாய் மாரியப்பன்' எனக்
குறிப்பிடும்படி...

இந்துஸ்தானி
இசையில்-

சென்ற நூற்றாண்டில்,
தமிழ் மண் தரணிக்கு வழங்கிய
மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!

கவிஞர் வாலி



மாரியப்ப சாமிகள்
மன்னனாய்ப் பிறங்கினார்;
'ராஜபார்ட்' வேடந்தாங்கி-
ராகங்களைத் - தனது
ரவைஜாதி சாரீரத்தில் - ஜன
ரஞ்சகமாகக் குழைத்து....

சாமிகள்-
சபையில் பரிமாற - அதைத்தம்
செவிவழி சாப்பிட்டு-அற்றைநாள்
சனங்கள் கிறங்கினார்!

●●●

நற்றமிழ்
நாடக மேடைகளில் -
எட்டாப் புகழையெலாம்
எட்டிய எஸ்.ஜி. கிட்டப்பா....

மாரியப்ப சாமிகளின்
மாணவர் ஆனார்;

இந்துஸ்தானி
இசையின்-
இறக்க ஏற்றங்களை
இவரிடம் கற்று...

கிட்டப்பா-
கீர்த்தியின் உச்சி போனார்!

●●●

தவம்செய்து -
தான் பெற்ற மகனுக்கு....
புகழ்சால்
பூந்தமிழ்க் கலைகளை-
பூச்சி செட்டியாரே
போதித்தார்;

புகைவண்டி நிலையத்தில்
பணிபுரிந்த...

மகம்மதியப் பெரியார் ஒருவர்-
மாரியப்ப சாமிகளுக்கு-
ஆதிநாள்களில்-
அருந்தமிழ் இலக்கணங்களை...

சாங்கோபாங்கமாகச் -
சாதித்தார்!

●●●

மனத்தின்கண் - எட்டுணையும்
மாசிலா மாரியப்பர்...
நாடக மேடையில்-தன்புகழ்
நீண்டு வருதலால் - சக
நடிகர்களுக்குற்ற - பொறாமை
நோவை அறிந்தார்;

தக்கணமே-
திருச்செந்தூர் சென்று-
திருமுருகன்-
திருமுன் நின்று...
உற்ற புகழுக்கெலாம் - நாளும்
உறுதுணையா யிருந்து
நற்றமிழைப் பாடிய - தனது
நாவை அரிந்தார்!

சிலாக்கியமான - தன்
சீடன் - தானே
செந்நா அரிந்துகொண்ட
சேதி கேட்டு...

சங்கரதாஸ் சாமிகள்
செந்தூர் சென்றார்;
முருகப் பெருமானிடம் - தன்
மூத்த மாணவனுக்கு - மீட்டும்
நா வளர-தோடிராகத்தில்
பா வளர்த்து நின்றார்!

மகான்-
மாரியப்ப சாமிகளுக்கு-
வந்தது நாக்கு; மீண்டும்
வளர்ந்தது செல்வாக்கு!

கணக்கற்ற
கீர்த்தனங்கள் பாடினார்;
செந்தில் ஆண்டவன்
சேவடிகளே-

சதம் என்று - அவற்றையே
சிந்தையில் பதித்து...
நாதோபாசனையே-
நலம் பயக்கும் என நாடினார்!

படங்களில் நடித்தார்;
பாடல்கள் வடித்தார்;
ஆயினும் - வழிக்கு
அருந்துணை - என்று
வேலவன் திருவடிகளையே
விடாமல் பிடித்தார்!

பிறகு - தனக்குவந்த
பட வாய்ப்புகளை...
தேர்ந்த குரல்வளமுள்ள - ஒரு
தேவாரப் பாடசாலை ஆசிரியருக்கு -
விருப்பமொடு
வாங்கித் தந்தார்;
அந்த
ஆசிரியர்தான்...

இசையரசு -
எம்.எம்.
தண்டபாணி தேசிகராய் -
திரையுலகில் வலம் வந்தார்!

●●●

மதுரை
மாரியப்ப சாமிகள்...

படங்களுக்கு - இசைப்
பணியை ஆற்றியபோது -
உதவியாளராய்
ஒருவர் இருந்தார் அன்று;
பின்னாளில் - அவர்
பிரக்கியாதி
பெரிதும் பெற்றார் -
பாபநாசம் சிவன் என்று!

●●●

மாரியப்ப சாமிகளை
மற்றொரு 'குமர குருபரர்' என-
வாரியார் சாமிகள்
வாயாரப் போற்றினார்; அரிய



ஆன்மிகக் கருத்துக்களில் -
தான்
ஆழங்கால் பட -
உதவிய குருவென - இவ்
உலகறியச் சாற்றினார்!

●●●

மாரியப்ப சாமிகளின்
மாசறு மனத்தை;
தாமரை இலைத்
தண்ணீர் போல் -
உலகியலோடு - அவர்
ஒட்டிக்கொண்டிருக்கும் குணத்தை;
கந்தன் கண்டான்; ஒருநாள்-
கூட்டிக் கொண்டான்!

## 36. பாவலர் வரதராஜன்

ஏதிலார்க் குதவும் -
ஏழைப் பங்காளர்;
சிவப்புச் -
சிந்தனை யாளர்;

செங்கொடி
சித்தாந்தத்தால் - உழைப்போர்
தங்குடி
தழைக்கும் என்று...

பிரசாரம் செய்யும் -
பிரசித்தி பெற்ற பேச்சாளர்;

நம்பியார்;
நம்பூதிரிபாடு;
ஜீவானந்தம்;
ராமமூர்த்தி;

யாரா யிருப்பினும் -
யாண்டும்...



வரதராஜன்-
வண்ணத் தமிழ் உமிழும்-

தன் வாயைத்
திறந்த பின்புதான் - அவர்கள்
தம் வாயைத்
திறக்க வேண்டும்;
அவர்களில் -
ஆரேனும்...

வரதராஜனுக்கு முன் - தன்
வாயைத் திறந்தால்-
வந்திருக்கும் கூட்டம் - தன்
வாயைத் திறக்கும்;

பிறகு என்னணம் - அவர்கள்
பேச்சுகள் சிறக்கும்?

•••

தனது
தம்பிமார்...

உடுக்கள் என
உடனிருக்க -
ஒளிபிலிற்றும்
ஒற்றை நிலவாய்...

வரதராஜன் - மேடையில்
வீற்றிருப்பார்;
எத்துணையோ -
எழுச்சி மிகு கருத்துகளை-
எண்ணங்களில்
ஏற்றிருப்பார்!

ஆர்ப்பரிக்கும் -
ஆர்மோனியப் பெட்டியின்-
கறுப்பு வெள்ளைக்
கட்டைகளின் மேல்...

வரதராஜனின்
விரல்கள்-
பாலசரசுவதி போல்
பரதம் ஆடும்;

சதங்கைச்
சத்தமாய்ப்
பாட்டுநதி - விரல்வழி
பிரவகித்து ஓடும்;
பொதுவுடைமைக் கட்சியின்-
பொதுக் கூட்டம் நடக்கும்...

வளாகத்தில்
விறுவிறு என்று-
ஊர்ச்சனம் வந்து
ஒரு நொடியில் கூடும்; அவ்வாறு -
கூடும்படி - வரதராஜனின்
குரல் கணீரென்று பாடும்!

பிறகே - தலைவர்
பேசுவர்;
செங்கொடிச்
சித்தாந்தத்தை -
நாச்சிவக்க
நாலாபுறமும் வீசுவர்!

ஆக-
அற்றை நாளில்...
வரதராஜன்
வேர்வையால்தான்-
கண்டது உச்சி
கம்யூனிஸ்டுக் கட்சி!

•••

குடத்து நீரோடு - பெண்டிர்
குழாயடியில் -
அமர்ந்து -
அரட்டையடிப்பது போல்...

உட்கார்ந்து - கொண்டல்கள்



ஊர்வம் பளக்க - தனது
உச்சியை - எஞ்ஞான்றும்
உதவுகின்ற...
மலையாள தேசத்தின்
மலைத் தொடர்ச்சியின்-
பாதத்தில் உள்ள ஊர்
பண்ணைப்புரம்; அந்தப்
பண்ணைப் புரத்திலிருந்து
புறப்பட்டது தான் -
பாவலர் வரதராஜன் எனும்
பசுந்தமிழ்ப் பாட்டுப்புரம்!

ஏலக்காய் -
எஸ்டேட்டுகளில்...
கனவான் ஒருவர் இருந்தார்-
கங்காணியாக; அவரது-
வாரிசாக-
வந்தவர்தான் வரதராஜன்-
செந்தமிழ்க் கவிதை விளையும்-
செங் காணியாக!

'கங்காணி ராமசாமி' என-
கரைவமாக...
ஊர் விளித்த - அந்த
உத்தமருக்கு-
வாழ்க்கைப் பட்ட
உத்தமி -
சின்னத் தாயம்மாள் - எனும்
சீர்த்திமிகு பத்தினி!

மாதரசி தாயம்மாள் - அவருக்கு
மூன்றாம் தாரம்; அல்ல முதல்தாரம்;
ஆனால்
அந்த அம்மையார்-
பெற்றெடுத்த
பிள்ளைகளெலாம் முதல்தரம்!

●●●

பிள்ளைப்
பிராயத்திலிருந்தே-
பாவலர் வரதராஜன்
பாட்டுக் கட்டினார்;
நாட்டு நடப்பைத் - தன்
பாட்டு நடப்பாக்கி-
'கிராமத்துக் கம்பன்' எனும்-
கீர்த்தியை எட்டினார்;

மோழைக்கும்
முட்டக் கொம்பு வர -
கோழைக்கும் - பகையைக்
குட்டத் தெம்பு வர -

அடித்தட்டு மக்கள் நெஞ்சில்
அனல் அள்ளிக் கொட்டினார்;
எல்லாமும்
எல்லார்க்கும் - எனும்
எழுச்சி முழவை
ஏற்றமுறத் தட்டினார்!

●●●

செய்யாத பிழைக்குச்
சிறைப் பட்டார்;
அரசியல்வாதிகள்
ஆரும் வந்து - தன்னை
கவனிக்கவில்லையே - என்று
குறைப்பட்டார்!

கட்சி வளரக் - கவிபாடிய
பட்சி - தான்
இருந்த நாள் வரை
இசைத்தது-
ஏரார்ந்த தமிழ்கானம்; பின்-
ஏறியது வானம்!

●●●

வரதராஜன் -
வாழ்கிறார்...
அவரது
அடியொற்றி நடந்த - அவரது
இனிய
இளவல்களான-

இசைஞானி-
இளையராஜாவின் குரலிலும்,
கவிஞானி-
கங்கை அமரனின் விரலிலும்!

- இன்னமும் இருக்கின்றார்கள்....

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

## 37. அகிலன்

கலைமகள்
கடாட்சமும்;

'கலைமகள்'
கடாட்சமும்;

ஒருசேரப் பெற்ற -
ஒருவர் உண்டெனில்...

அவர்தான்-
அகிலன்; எழுத்தால்-
அடைந்த புகழில்- அந்த
ஆகாயம் அனைய அகலன்!

ஞாலம் மெச்சும்
'ஞானபீடப் பரிசை
தமிழுக்கு - வாங்கித்
தந்தவர்;

வாசகர் பலரால்
வாசிக்கப்படுவதற்காகவே-
வையம்
வந்தவர்!

●●●

ஆம்!
அவரை...
ஊர்
வாசித்தது;
வாசித்தது பற்றி
யோசித்தது;
வாசித்தபின்-
யோசித்தபின்- அவரை
நெஞ்சார
நேசித்தது; அவர்யாத்த
புதினங்களைப்
புத்திலக்கியம் - எனப்
புந்தியில் வைத்துப்
பூசித்தது!

அவரது படைப்புகள்
அனைத்திலும் பார்க்கலாம் -

சகலருக்கும் புரியும்படியான
சரளம்;

சரளம் எனினும் - அவரது
சிருட்டி ஒவ்வொன்றும்...

முக்குளித்து-
மூச்சடக்கி-
முத்தமிழ்க் கடலில் - அவர்
முனைந்து எடுத்த தரளம்!

●●●

சதா -
சிரித்தமுகம்;
தமிழ் வெளிச்சத்தை-
தரித்த முகம்;
விழிகள்
வழியே - ஞான
விலாசத்தை

சென்ற நூற்றாண்டில்,
தமிழ் மண் தரணிக்கு வழங்கிய
மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!

**கவிஞர் வாலி**



சமூகத்தில் நிலவிய
சிறுமைகளை;
மனித
மனங்களில்-
ஒளிந்திருந்த
ஒழுக்கக் கேடுகளை;

வெளியே காட்ட
வெட்கப் பட்டு-
பொத்திப் பொத்திப்
புரையோடிப் போய்ப்-
புழுத்துக் கிடந்த
பெரிய இடத்துப் புண்களை;

எல்லோர் முன்பும்
எடுத்துப் பரப்பிவைப்பதுதான்
எழுத்தின் தருமம்- என
எண்ணினார்;

ஏச்சும் பேச்சும்
எதிர்கொண்டு-
பிரபஞ்சத்தைத்-தன்
பேனாவால் சுத்தம் பண்ணினார்!

ஒரு
கால கட்டத்தில்
கல்கி போன்றவர்களால்-
புதுமைப்பித்தன்
பலமாக -
விமர்சிக்கப் பட்டார்; ஒருசிலர்
வசைகளாலும் அவரைச் சுட்டார்;

போகப்போகப்
புதுமைப்பித்தனோ-
புடம் போட்ட
பொன்னேபோல் சுடர் விட்டார்!

●●●

'கடவுளும் -
கந்தசாமிப் பிள்ளையும்!'

'கவந்தனும் -
காமனும்!'

'புதிய கூண்டு!'

'பிரேத மனிதன்!'

'ற்றன்னை!'
'சாபவிமோசனம்!'

இத்தியாதி;
இத்தியாதி;

இன்னும்பல-
இயம்பும் அவர் கியாதி;

அவரது
அறிவுக் கூர் மிகுந்த-
கையெழுத்தே - ஒரு
கத்தியாகி-

ச்ஸ்திர சிகிச்சை புரிய-
சொஸ்தமானது சமூக வியாதி!

●●●

புதுமைப்பித்தனின்
புகழ்வாய்ந்த பேனா-

படத்துறையிலும் நுழைந்தது;
படமெடுக்கவும் விழைந்தது;
அந்நிலையில் - நோய் வந்து
அவரோடு இழைந்தது;

●●●

கமலாம்பாள் - எனும்
கற்பரசியின் மணாளனை;
புகழ்சால் -
புதுமைப்பித்தன் எனும்
குணாளனை;

கடைசி நாள்களில் -
கொஞ்சம் கொஞ்சமாக-
வறுமை தின்றது; எமனை-
'வா! வா!' என்றது!

சாகாத எழுத்துக்களை
சமைத்தவனை;
பூந்தமிழுக்கு - ஒரு
புதிய தளம் அமைத்தவனை;

அழைத்துக் கொண்டது
ஆகாயம்;
ஆனால்-
அருந்தமிழ் நினைவு கொள்ளும்-
அவனால்- தான்
அடைந்த ஆதாயம்!

- இன்னமும் இருக்கின்றார்கள்



முச்சூடும் - அவர்
முகர்ந்து அனுபவித்தது -
முகை யவிழ்ந்த
முத்தமிழ் முல்லை!

•••

தான் பெற்ற தமிழின்பம் -
தமிழரெலாம் துய்க்கவேண்டி...

அவர்
ஆசைப் பட்டார்;
அந்த
அவா நிறைவேற -
அல்லும் பகலும் பாடுபட்டு
அடிக்கல் நட்டார்!

வக்கீல்
வேலையில்...

வருவாய் மேல்
வருவாய் வந்தும்; அந்த
வாய்ப்பை - சிங்கப்பூர்
வாழ்க்கை தந்தும்,

கோடியில் புரளாமல் - கடைக்
கோடியில் உள்ள...

பாமரத் தமிழர் பால்
பரிவு கொண்டார்;

எழுத்துக் கூட்டி -
எழுத்துக் கூட்டி -
எல்லாத் தமிழரும்
எளிதாகத் தமிழ் கற்க.....

ஏற்றவழி - என
ஏடு கண்டார்!

•••

உலக யுத்தம்
உச்சத்தில் இருந்த நாளில்...

கடுமையானது
காகிதத் தட்டுப்பாடு;
ஆயினும்-
அவரே...

வண்டி வண்டியாய்
வைக்கோலை வரவழைத்து-
ஊறவைத்துக் கூழாக்கி
உலர்த்திக் காகிதமாக்கி -

நாளேட்டைக் கொணர்ந்தார் -
நாளும் தாளாண்மையோடு!

சுடச்சுட -
செய்திகளை முந்தி -
தந்தது - அவரது
'தினத் தந்தி'!

இன்று - அவர்
இயற்றிய அருந்தொண்டால்...

கிளை பரப்பி
கம்பீரமாய் நிற்கிறது -
அற்றை நாளில்
அவர் கண்ட கனவு;
அந்த அளவு
அவருள் இருந்தது தமிழ்த் தினவு!

•••

இந்தியை எதிர்த்தார்; தனி
இயக்கம் கண்டார்;
உழவர்கள் பொருட்டு
ஒரு போராட்டம் நடத்தி
கல்விமானாகிய அவர் - தன்
கைகளில் விலங்கு கொண்டார்!

அமைச்சராய்
அவைத் தலைவராய்-

தான் -
தொட்ட பதவியை யெல்லாம்

துலங்கச் செய்தார்; சடையில்
திருக்குறளைப் பெய்தார்!

●●●

தமிழ்;
தமிழர்;
இவ்
இரண்டும் - அவரது
உதட்டிலும்
உள்ளத்திலும்
உட்கார்ந்து கோலோச்சின; புது -
உணர்வை நமக்குப் பாய்ச்சின!

ஏழை - அவரால்
எழுத்தறிவு பெற்றான்;
அவனும் -சமூக
அந்தஸ்து உற்றான்!

●●●

ஸ்ரீ வைணவர் சேவிக்கும் தலம் -
ஸ்ரீ வைகுண்டத்தில்...

வணக்கத்திற்கும் - ஊரார்
வாழ்த்துதலுக்கும் உரிய -
வழக்கறிஞராக
வாழ்ந்து வந்த...

சீலமிகு
சிவந்தி ஆதித்தனாரின் -
செல்வனாய் வந்துதித்த
செந்தமிழ்த் திலகம்;
கனகம் அம்மையார் -
கருப்பை விளைந்த கனகம்;
சி.பா. ஆதித்தனார் - எனும்
சாதனை அரசர்;
குணவதியாம் - திருமதி
கோவிந்தம்மாளின் புருசர்!

●●●

காலையிலும்
மாலையிலும் - நம்
கையிலும்
கண்ணிலும்...



விரிகிறது - அவர்
வளர்த்த ஏடு; பெரியவர்-
ஆதித்தனாரை - நாம்
அதில் காணலாம் உயிரோடு!

●●●

## 40. எஸ்.ஏ.பி.

குமுதம் -
திங்களில்தான் மலரும்;
இது -
இயற்கை விதி!

'குமுதம்'
ஞாயிறில் மலர்ந்தது;
இது -
எஸ்.ஏ.பி. விதி!

எஸ்.ஏ.பி. முழுப்பெயர் -
எஸ்.ஏ.பி. அண்ணாமலை;
பெயருக் கேற்ப
பிறர் -
அண்ணாந்து பார்க்கும்
அளவு....

மலையென நின்றார்; அவர் -
மற்றவர் நிழலை
நண்ணாமலை!

●●●

எவரும் பார்த்திருக்க ஏலாது -
எஸ்.ஏ.பி. புகைப்படம்;
அப்படி
ஆரேனும் பார்த்திருப்பின் -
அநேகமாக
அது...



பக்கவாட்டில்
பார்த்துச் சிரிப்பது போல் -
அமைந்த
அவரது -

ஒரு -
ஒரே ஒரு நகைப்படம்!

தன் ஏட்டைத் தவிர்த்துத் -
தன்னுடைய...

புகைப்படத்தைப்
பார்ப்பதால் - தன்
புத்தகத்தை விட - தன்
புகழ் மிகைப்படும் -

என - அவர்
எண்ணியிருந்தால் - அது
பிழையில்லை; மனித உணர்வு -
பற்பல வகைப்படும்!

●●●

எவரோடும் - தன்
ஏடு மூலமே அவர் பேசினார்;
வாசகரிடையே - தன்னை
வெளிப்படுத்திக் கொள்ள -
வாய்ப்பிருந்தும் - அதுபற்றி
வெகுவாக அவர் கூசினார்!

'அரசு பதில்'களில் -
அவர்தான் அரசு;
அது
ஆராயிருக்கும் - என்று
அனேகரின்
அனுமானத்திற்கு விட்டாரே
யன்றி...

தான் தான் - என்று
தட்டவில்லை முரசு!

அற்புதமாகச் சிறுகதை - எழுத
அவருக்குண்டு அருகதை;
ஆயினும்
அதை -
அவர்
அவ்வப்போதுதான் செய்தார்; நம்-
அகங்களைக் கொய்தார்!

தொடர்களையும் - அவர்
தொட்டதுண்டு;
தொட்டவற்றில் - தன் முத்திரையை
இட்ட துண்டு!

●●●

கீதை;
குறள்;
ஆகிய
அற நூல்களைக் கொண்டு
அவ்வப்போது - அக
அழுக்குகளைத் துடைத்தவர்;
சின்மயா நந்தரிடம் - தன்
சிந்தையை -
ஒட்டு மொத்தமாக
ஒப்படைத்தவர்!

பாட்டிலும் - உண்டு
பிரியம்;
அவரோடு
அணுக்கமாக இருந்தவர்க்கு -
ஆழ
அனுபவித்து...

சன்னமான
சாரீரத்தில் - தனக்குப்
பிரியப்பட்ட பாடலை - அவர்
பாடுவது புரியும்!

எல்லோருக்கும் - அவர்
இனித்திருந்தார்;



ஆயினும்
அவர் - ஒரு
தத்துவவாதி போல்-
தனித்திருந்தார்!

●●●

பொதுவாகப் - புவிமிசை
பார்க்குமிடத்து...

தனவானா யிருப்பவர் -
கனவானா யிருப்பதில்லை;
கனவானா யிருப்பவர் -
தனவானா யிருப்பதில்லை;
ஒரே நேரத்தில் -
ஒரு சேர...

தனவா னாகவும் -
கனவா னாகவும் -
இருந்தவர்
எஸ்.ஏ.பி.; அவர் -
இனிய இயல்புகளை
ஏந்திய நம்பி!

கோடீஸ்வரன்
குடும்பத்தில் -
பிறந்த
போதும் -

அவரது
ஆடை;
அமைதி;
அடக்கம்;
ஆகியவை
அனைவர்க்கும் -

எளிமையின்
ஏற்றம் ஓதும்!

●●●

சட்டம் படித்தவர்
சட்டத்தை விட்டார்;
பத்திரிகைத் துறையைப்
பிரியப்பட்டுத் தொட்டார்!

தானே -
தீர்மானித்து...

ஆரம்பித்தார் - ஓர்
அழகிய பத்திரிகையை;
உயிர்த்தோழர்
பி.வி. பார்த்தசாரதி -
மற்றும்
ரா.கி.ரங்கராஜன்;
ஜ.ரா.சுந்தரேசன்;
புனிதன்;
பால்யூ; என-
பலர்
பலப்படுத்தினர்...
அதன் -
ஆசிரியரின் கையை!

●●●

எஸ்.ஏ.பி.
ஏற்ற தலைவர்...
ஆசிய ஜோதி - என
அழைக்கப்பெறும் ஜவஹர்;
அதன் தாக்கம் -
அவர் மகன் பெயரும் ஜவஹர்!

●●●

அமரிக்கையான எஸ்.ஏ.பி.
அமெரிக்காவில் இருக்கையில்...
மரித்தார்- தன்
மகன் வீட்டில்;
மரிக்காமல் வாழ்கிறார் - தமிழ்
மாந்தர்தம் மனவீட்டில்!

-இன்னமும் இருக்கின்றார்கள்

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

## 41. கவிமணி

ஓங்கி வளர்ந்து
ஓவாப் புகழுடன் நின்ற - தன்
ஒரே மகனை இழந்து
ஒருவர் வாடினார்;

அந்த -
அகாலமரணம் குறித்து—

கவிஞர் ஒருவர்
கண்கள் பனிக்க -
இரங்கற்பா ஒன்று
இயற்றிப் பாடினார்;

'பசுந்தமிழுக்கு - இப்படியொரு
பாட்டுக் கிடைக்குமாயின்-

இன்னுமொரு பிள்ளை
இருந்தால் கூட -
இக்கணமே - நான்
இழக்கத் துணிவேன்!' என்று—
தனயனை இழந்த தந்தை - ஒரு
தாண்டவமே ஆடினார்!

இரங்கற்பாவை -
இயற்றியவர் கவிமணி;
இருந்த ஒரே மகனை -
இழந்தவர் ரசிகமணி!

• • •

நாஞ்சில் -
நாட்டில் -

தேரூர் - என்று
ஓரூர்;
காரூர் வானமுமாய் -
ஏரூர் வயல்களுமாய் -
பிறங்கிய -
பேரூர்!

தமிழ்த்தாய் -
தவமிருந்து பெற்ற பிள்ளை - அத்
தேரூரில் பிறந்த - கவிமணி
தேசிக விநாயகம் பிள்ளை!

சிவதாணு பிள்ளை - எனும்

**சென்ற நூற்றாண்டில்,**
**தமிழ் மண் தரணிக்கு வழங்கிய**
**மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!**

**கவிஞர் வாலி**



சிலருக்கும்;
ஆதிலட்சுமி எனும் -
அருங்குண வதிக்கும்;

தனயனாய்த் தோன்றிய -
தேசிகவிநாயகம்...

உமையம்மையார் - எனும்
உத்தமியின் - வலக்
கரம் பிடித்தார்; திருக் -
கல்யாணம் முடித்தார்!

படித்துத் -தமிழ்ப்
பண்டிதரான பிள்ளை...

ஒரு கல்லூரியில் -
விரிவுரையாள ரானார்;
கால வெள்ளத்தில் - தேர்ந்த
கவிஞராகிப் போனார்!

செட்டிநாட் டரசர் - அவருக்கு
சிறப்பு விழா எடுத்தார்;

புலவர்
பெருமக்கள் -
போந்திருந்த
பெருஞ் சபையில்...

அரசர் -
அவருக்குப் -
பொன்னாடை போர்த்திப்
பொற்கிழி கொடுத்தார்!

• • •

கவிமணியின்
கவிதைகளில் -
டி.கே.சி.
தோய்ந்தார்;
அவரது
அருமையான பாடல்களை -தான்
செல்லுமிட மெல்லாம்
சொல்லிச் சொல்லி மாய்ந்தார்!

கல்கி;
கலைவாணர்;
சுத்தானந்த பாரதியார்;
சர்.ஆர்.கே.ஷண்முகம் செட்டியார்;

என்று
ஏராளமான -

பெருமக்கள் - கவிமணியின்
பித்த ராயினர்; அவரது -
வீடுதேடிச் சென்று
விருது மேல் விருது தந்து -
கவிமணியின்
கவிதைத் தேனை -
மாந்தி மாந்தி - உன்
மத்த ராயினர்!

• • •

காலத்தின்
கொடையாய் - நமக்குக்
கிடைத்த
கவிமணியின்...

பாடல்கள் அனந்தம்; யாவும் -
பாரிஜாதத்தின் சுகந்தம்!

கபிலவாஸ்துவில்
கண் மலர்ந்த -
புத்தன் கதையைப்
புனைந்தார் கவிமணி...

'ஆசிய ஜோதி' என்று;
ஆரால் ஆகும் அதுபோல் இன்று?

'மங்கையராகப் பிறப்பதற்கே-நல்ல
மாதவம் செய்திட வேண்டுமம்மா!'
என்று -
ஏந்திழையரின் -
ஏற்றத்தை
எடுத்துச் சொன்னார்;
பிறிதொரு
பாரதி அன்னார்!

உமர்கய்யாமை -
வண்ணத் தமிழில் நெய்தார்;
அசலைக் காட்டிலும்
அதிக சிறப்பாக -
நகலில் - தத்துவங்களை
நன்மழையாய்ப் பெய்தார்!

கவிதைகள்;
கீர்த்தனங்கள்;
கட்டுரைகள்;
காவியங்கள்;

என-
எல்லாச் சிகரங்களையும்
தமிழால் தொட்டார்; கவித்துவத்-
துவசத்தை நட்டார்!

கவிமணி நாவில் -
கலைமகள் நர்த்தன மாடினாள்;
அச்சு -
அசலாக -
அவளே -
அவராக இருந்து பாடினாள்!

• • •

காலன் - ஒருநாள்
கவிமணியைச் சாப்பிட்டான்;



அவரது -
அருந்தமிழ்க் கவிதைகளின் -
அற்புதச் சுவைகளை -
அறிய வக்கற்றுப் போனதால்_

அவற்றை மட்டும் -
அவன் சாப்பிடாமல் விட்டான்!

## 42. நாமக்கல் கவிஞர்

அரசவைக் கவிஞர் வரிசையை -
ஆரம்பித்து வைத்தவர்;
வாழும் நாள் வரை
வண்டுபோல் -
வண்ணத்தமிழ்
வாரிசத்தை மொய்த்தவர்;
தமிழின்பத்தைத்
தலையாய இன்பமாய்க் -
கருதிக் கருதிக்
காலமெல்லாம் துய்த்தவர்;

விடுதலை
வேள்வியை
விரும்பி நோற்று - சிறை
வாசத்தை ஏற்று -

தனது -
திருமேனி எய்த்தவர்!

• • •

'கால்நடக்கும் தெய்வம்' என்று -



காந்தியைக் கண்டவர்;
அடிகளார் கருத்துக்களையே -
ஆகாரமாய் உண்டவர்;

மறநெறிகளை
மனத்தாலும் சிந்தியாது -
அறநெறிகளையே
ஆதாரமாகக் கொண்டவர்;
திருக்குறளுக்குத் -
திருத்தமாய் ஓர் உரை எழுதி...

பரிமேலழகரைக் கூடப் -
பரிசீலித்துப் பார்த்து - தனக்குப்
பட்டதை -
பயமின்றி விண்டவர்!

● ● ●

ஆங்கிலேயர் -
அரசோச்சிய நாளில்...

காவல்துறையில் - 'ஹெட்
கான்ஸ்டபிள்' என்றிருந்த -
கண்ணியவான்;
புண்ணியவான்;

வெங்கட்ராம பிள்ளையின்
வாரிசாக உதித்தவர்;

அன்னையார்
அம்மணி அம்மாளை -

'புகழ்சால் புத்திரனைப்
பெற்ற தாய்!' என -
பூமி
போற்றுமாறு...

வரலாற்றில் - தன்
வித்தகத்தைப் பதித்தவர்!

● ● ●

'தமிழன் என்றோர் இனமுண்டு;
தனியே அவர்க்கொரு குணமுண்டு;
அமிழ்தம் அவனது மொழியாகும்;
அன்பே அவனது வழியாகும்!'
என்று
எழுச்சியுறப் பாடி -
உறங்கிய தமிழரை
உசுப்பியவர்;

பாட்டு என்னும்
'புல்டோசரால் -
நால்வருணம் என்றும்
நச்சுக்கிருமிகளை நசுக்கியவர்!

அவர்
ஆக்காத கவியா? அவரது -
கவிகளைக்
கேட்காத செவியா?

இருபதாம் நூற்றாண்டின் -
இருபதுகளில்...

காங்கிரஸ்
கட்சியின் -
பொதுக் கூட்டங்களில் - இவர்
பாட்டுத்தான் பிள்ளையார் சுழி;

'கத்தியின்றி ரத்தமின்றி
யுத்தமொன்று வருகுது!' எனும் -
நாமக்கல்லாரின்
நற்றமிழ்ப் பாடல்தான்...

உப்பு சத்தியாக்கிரகத்தின்
வெற்றிக்கு வகுத்தது வழி!



கல்கி - இவரைக்
காதலித்தார்;
ராஜாஜி - இவரின்
ரசிக ரானார்;
இவரது
இனிய கவிதைப் புனலில் -
தினம் தினம் - டி.கே.சி.
தீர்த்தமாட லானார்;
சின்ன அண்ணாமலை - இவரது
சிந்துகள் பாடி சிங்கமாகிப் போனார்!

• • •

நாமக்கல் கவிஞர் -
நாட்டுக்கு வழங்கிய....

ஒவ்வொரு பாடலும் -
ஒண்டமிழுக்கு வாய்த்த அணி;
விஞ்ஞான ரீதியான -
விளக்கங்களைப் -
பாட்டில் வைத்துப் -
போக்கினார் நாத்திகப் பிணி!

அவர் -
ஆக்கிய
அற்புதக் காப்பியம் -
'அவனும் அவளும்';
அற்றை நாளில் -
அதை வாசித்து....

எண்ணங்களில் - காதல்
ஏக்கங்கள் -
எழாதிருக்க மாட்டார் -
எவனும் எவளும்!

'மலைக்கள்ளன்' - அவரது
மகோன்னதமான புதினம்;

பல மொழிகளில்
படமாக வந்த -
'மலைக்கள்ளன்' - இன்றும் நம்
மனங்களில் மணக்கும் பூவனம்!

அந்த -
அருமையான கதை...

கலைஞரின் உரையாடலோடு -
களத்திற்கு வந்தது;
அதுதான் எம்.ஜி.ஆருக்கு - ஓர்
அங்கீகாரம் தந்தது!

• • •

நாமக்கல் கவிஞர் -
நல்ல ஓவியரும் கூட;
தூரிகையைத்
தூக்கினால் -
வெகுவாக
விழையும்....

ராமலிங்கம் பிள்ளை விரல்கள் -
ரவிவர்மாவோடு போட்டி போட!

• • •

தமிழ் மண்;
தமிழ்ப் பண்;
இரண்டும் உள்ளவரை -
இருப்பார் பிள்ளை; அவர் -
தமிழர் நெஞ்சங்களில் -
தொத்திக் கொண்டிருக்கும் கிள்ளை!

- இன்னமும் இருக்கின்றார்கள்...

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

## 43. ஜாவர் சீதாராமன்

அம்பது; ஆம்!
அம்பதே ஆண்டுகள்தான்-
ஜீவித்திருந்தார்-
ஜாவர்;

ONE DAY MATCH போல்-
உலக மைதானத்தில்...

அவர்
ஆட நேர்ந்தது-
அம்பதே
அம்பது ஓவர்;

அம்பதாம் ஓவரை -
ஆடுகையில்தான்...

காலன் பிடித்தான்-
CATCH;
ஆயினும்-
அவர்தான்-
MAN OF THE-
MATCH!

●●●

சென்ற நூற்றாண்டில்,
தமிழ் மண் தரணிக்கு வழங்கிய
மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!

கவிஞர் வாலி

ஜூனியர் விகடன் 8.4.2003



மாலா சின்ஹா;
அசோக் குமார்;
முதலிய-
முன்னணி நட்சத்திரங்கள்-
பங்கு-
பற்றிய...

இந்திப்படம் ஒன்றை
இயக்கி முடித்துவிட்டு-
படத் தொகுப்புப்
பணிகளில்...

பகலிரவாய் - அவர் கவனம்
பதிந்திருந்த பொழுதில்-
'பொக்' கெனப்
பிரிந்தது-

அவரது உயிர்; அரைநொடியில்-
அறுவடையானது பயிர்!

●●●

இந்தியன் சிவில் சர்வீஸ் - என
இங்கிலீஷ்காரன் காலத்தில்-
பெயர்சூட்டப் பெற்ற - ஐ.சி.எஸ்.
பரீட்சைக்குப் புக இருந்தவரை...

சட்டென்று ஒருநாள் தாக்கியது-
சினிமா FEVER;
சட்டம் படித்தவரை
சந்தர்ப்பம் புரட்டிப்போட-
சீதாராமன்
சீக்கிரமே ஆனார் ஜாவர்;

அவரும் - 'குமுதம்'
ஆசிரியர் எஸ்.ஏ.பி.யும்-
சென்னை
சட்டக் கல்லூரியில்-
ஒருகாலத்தில்
ஒருசாலை மாணாக்கர் ஆவர்!

●●●

வெற்றிகரமான
வழக்கறிஞர்-
திருச்சி நடேசய்யரின்
திருமகன்தான்....

ஜனங்களால்
ஜாவர் என்று-
சிலாகிக்கப் பெற்ற
சீதாராமன்;
ஒழுக்கத்திலும் - அவர்
ஓர் சீதாராமன்!

அபாரமான-
ஆங்கில அறிவும்;
அஃதே போல்-
அருந்தமிழ் அறிவும்;
ஒருசேரப்பெற்ற
ஒருவரை -

விடுவாரா - எஸ்.எஸ்.
வாசன்? - ஏற்கெனவேயே
சீதாராமனும் -
சினிமா நேசன்!

மிஸ். மாலினி-
முதல் படம்;
சிறப்பாக -
சீதாராமன் பதித்தார் தடம்!

'ஏழை படும் பாடு' - ஓர்
ஏணியாக....
புகழின் - உச்சம்
போனார்;
அதில்-

அற்புதமாக நடித்து-
ஜனங்கள் நடுவே-
'ஜாவர்' ஆனார்!

●●●

அவர் - ஓர்
அருமையான-
நடிகர் மட்டுமல்ல; இன்னும்-
நிறைய உண்டு சொல்ல!

'அந்த நாள்'
'ஆலய மணி'
'குழந்தையும் தெய்வமும்'
'உயர்ந்த மனிதன்'
ஆகிய படங்களில்-
அவரது உரையாடல்கள்-
பேசப் பெற்றன;
பெருமை யுற்றன!

அவரது-
அருமையான-
புதினங்கள் - 'குமுதம்'
பத்திரிகையில் வந்தன;

'உடல் பொருள் ஆனந்தி'யும்-
'பணம் பெண் பாச'மும்
அவருக்கு-
அளப்பரிய புகழ் தந்தன!

●●●

நடிகர்;
நாவலாசிரியர்;
உரையாடல் வித்தகர்;
உயரிய இயக்குநர்;

எல்லாவற்றிற்கும் மேலாக
எளிய மனிதர்; ஓர்
அறிவு ஜீவியா யிருந்தும்
அடக்கம் காத்த புனிதர்!

●●●



ஜாவர் வாழ்கிறார்
ஜனங்கள் மனங்களில்;
அவர் போல் -ஓர்
ஆண்டகையைக் காண்பது-
அபூர்வம்-
ஆறறிவு இனங்களில்!

## 44. வீணை பாலசந்தர்

தமிழ் சினிமாவின்
தலையெழுத்தை-

முதன்முதல்
மாற்றியவர்;
கச்சா ஃபிலிமில் - புதிய
கற்பனைகளை ஏற்றியவர்;
மேனாட்டவர்க்கு இணையான
மூளை...
தமிழர்க்கும் உண்டு-எனத்
தனது-
ஒவ்வொரு திரைப்படத்திலும்
உலகறியப் பறை சாற்றியவர்;

பிள்ளைப்
பிராயத்திலேயே-
நுண்மாண்
நுழைபுலத்தோடு தோற்றியவர்;
எஸ். பாலசந்தர்
என்றால்...

'இது நிஜமா?' -என
இன்றுளோர் வினவக் கூடும்;
பாலசந்தர் இயக்கிய



படம்-
'இது நிஜமா?' பார்த்தால்-
இங்கு...

நான் சொல்வது
நூறு சதவிகிதம்-
மெய்யென்றும் எண்ணும்
மாந்தர் மனத்தில் இறை ஓடும்!

'டைரக்டோரியல் - டச்!'
என்பார்களே ஒன்று; அது-
எல்லோர்க்கும் அன்று...

பாலசந்தர்
படங்களில்தான்-
புரிய வந்தது;
பரவலாகத் தெரியவந்தது!

●●●

நடிகர் திலகத்தின்
நடிப்புப் பசிக்குத்
தீனிபோட்ட
திரைப்படம்...
'அந்த நாள்!' -பாலசந்தர்தான்
அதை இயக்கினார் அந்தநாள்!

சின்ன வயதிலேயே-
சாந்தாராம் படத்தில் நடித்தவர்;
சினிமாவின்-
சகலவிதமான...

அகலம்; நீளம்;
ஆழங்களை-
அவர்
அனுபவ ரீதியாகப் படித்தவர்!

●●●

குடும்பமே-
கலைக் குடும்பம் எனலாம்;

வக்கீலுக்குப் படித்தும்-
வக்கீலாகப் பிடிக்காமல்-
சென்னையில் குடியேறிய
சுந்தரம் அய்யர்...

சதா நீராடியது -
சங்கீதப் புனலாம்!

●●●

அவர்தான் பாலசந்தரின்-
அப்பா;
தந்தை வழியைப் பேணாது-
தனயன் போவானா தப்பா?

அதுமட்டுமல்ல;
அன்றைய திரைப்படம் ஒன்றில்...

பாலசந்தர்;
பாலசந்தர் அப்பா;
பாலசந்தர் சகோதரன்;
பாலசந்தர் சகோதரி;

நால்வரும்
நடித்தனர்; வெற்றிப்-
பதாகையைப்
பிடித்தனர்!

●●●

பாலசந்தர்-
பானுமதியோடு நடித்தார்-
'ராணி'யில்; ஏறினார் புகழ்-
ஏணியில்!

ஏவி.எம்.
எடுத்த...

படத்தில் நடித்தார்;
படத்தை இயக்கினார்;
பாடினார்; ஆடினார்;
பெரும்புகழ் சூடினார்!

●●●

சில
சொந்தப் படங்களும் எடுத்தார்;



பின்னாளில்
படத்துறையையே விடுத்தார்!

ஏற்கெனவேயே-
ஏராளமான இசையறிவுள்ளவர்-

வீணையை எடுத்து
விரல்களால் மீட்டினார்;
எழுபத்திரண்டு
மேள கர்த்தாக்களை
எல்லோர்க்கும்
இனம் காட்டினார்;
கடல்
கடந்து சென்று...

அனைத்து
அயல் நாடுகளிலும்
வீணையில் - தன்
வெற்றிக் கொடியை நாட்டினார்!

அவர் இடுவார் ஆணை;
அதைக் கேட்டது வீணை;

வீணைமேல் - அவர்
விரல்வைத்த போதெல்லாம் -
தன்
மூக்கின் மேல் - உலகம்
விரல் வைத்தது; அவரது-
வாசிப்பு - வேறுபட்ட

வையத்தாரை இசையால் தைத்தது;

பிறகு என்ன?
போன இடமெல்லாம்-
பாலசந்தரை - ரசிகப்
பட்டாளம் ஒன்று மொய்த்தது!

●●●

பாலசந்தர்
படத்துறையை விட்டதில்...

வெள்ளித்திரை-
வெகுவாக அழுதது;
வீணை - அவரது
விரல்களைத் தொழுதது!

●●●

வீணை-
வாசிப்பில்-
சரஸ்வதிக்கே - ஒருநாள்
சந்தேகம் வந்தது;
உடனே-
வரும்படி...

பாலசந்தருக்குப்-
பொன்னுலகம் தகவல் தந்தது!

அவர்-
ஆகாயம் போய்விட்டாலும்...
வாழ்கிறது-அவரது
வீணையின் தொனி-
குவலய மெங்கும்-
குறுந் தகடுகளில்;
எஞ்ஞான்றும் - அவற்றின்
எதிரொலி கேட்கலாம்-
ஈரமான -
இமயத்தின் முகடுகளில்!

(இன்னமும் இருக்கின்றார்கள்)

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

## 45. பாகவதர்

அறிஞர் என்றால் -
அண்ணாவைத்தான் குறிக்கும்;
கலைஞர் என்றால் -
கருணாநிதியைத்தான் குறிக்கும்;
கவிஞர் என்றால் -
கண்ணதாசனைத்தான் குறிக்கும்;
பாகவதர் என்றால் - தியாகராஜ
பாகவதரைத்தான் குறிக்கும்;
அந்தப் பெயரை
அல்லாது - வேறு
எந்தப் பெயரை
எல்லோர் நெஞ்சிலும்
காலம் அதுபோல் - ஒரு
கல்வெட்டாகப் பொறிக்கும்?

● ● ●

சாரீரம்;
சரீரம்;
இவை -
இரண்டும்...
ஓஹோ என்று -
ஒருசேர அமையப்பெற்ற
ஒருவர் உண்டெனில் - அந்த
ஒருவர் அவரே? அந்த
ஒருவர்க்கு ஒப்பாய் - வேறு
ஒருவர் எவரே?

வெள்ளித் திரை வானில்
வெளிச்சம் உமிழ்ந்த

பிற நட்சத்திரங்கள்
பருவ நட்சத்திரம்; தியாகராஜ
பாகவதர் ஒருவர்தான்
துருவ நட்சத்திரம்!

இன்னும்
மின்னுகிறார்;
இசையால் - நம்
இதயங்களைத் தின்னுகிறார்!

● ● ●

ஆடவரே
ஆசைப்படும் ஆடவன்;

சென்ற நூற்றாண்டில்,
தமிழ் மண் தரணிக்கு வழங்கிய
மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!

**கவிஞர் வாலி**



அற்றை நாளில்
அருந்தமிழர் செவிகளை -
அடகு பிடித்த
அபூர்வப் பாடகன்!

ஏழிசை - அவனால்
வாழிசை ஆனது; மகர -
யாழிசை கூட - அவன் குரலிடம்
யாசகம் போனது!

இசைக்கு
இசை சேர்த்தவன்; எண் -
திசைக்கும்
தித்திப்பை வார்த்தவன்!

குரல் வழியே
குடம் குடமாய்க் -
குறிஞ்சித் தேனைக்
கொட்டியவன்;
கந்தருவ
கானம் - எனும்
மந்திரத்தால்
மனங்களைக் கட்டியவன்;

நற்றமிழர்
நாக்குகளில் - எஞ்ஞான்றும்
நீங்காவண்ணம் - தன்
நாமத்தை ஒட்டியவன்;
எட்ட - இனி
எல்லையில்லை -
எனும்படி - புகழை
எட்டியவன்!

• • •

பாகவதர் -
பொம்மையில்லாத -
நவராத்திரி கொலு - அன்று
நாட்டில் இல்லை;

பாகவதர்
பால் -
வசமிழக்காத ஓர் ஆத்மா -
வீட்டில் இல்லை!

பாகவதர்
பாணியில்...

தனது -
தலைமுடியை வளர்த்தோர் - அன்று
தமிழக மெங்கும்
தென் பட்டனர்;
பாகவதர்
பாதம் பட்ட
தெரு மண்ணை - அவர்கள்
திருநீறாய் இட்டனர்!

சுருங்கச் சொன்னால் - முதல்
சூப்பர் ஸ்டாரும் அவரே;
சிந்தையை அள்ளிய - முதல்
சிங்கிங் ஸ்டாரும் அவரே!

• • •

'மன்மத லீலையை -
வென்றார் உண்டோ?'

'சொப்பன வாழ்வில் மகிழ்ந்து'
'கிருஷ்ணா! முகுந்தா! முராரே!'
'சத்வகுண போதன்'
என -
எத்துணை எத்துணை -
பாடல்கள்! அவை -
பாடல் அல்ல; கள்!

அண்ணாமலைச் செட்டியார் -
ஆரம்பித்த -

தமிழிசை இயக்கத்தின் - முதல்
தொண்டர் பாகவதர்;
சத்திய மூர்த்தி
சொன்னார் என்று -
பட்டுச்சட்டை வேட்டியை விட்டு -
பாகவதர் கட்டினார் கதர்!

● ● ●

நீண்ட
நெடிய -
விரதமிருந்தது
விசுவகர்மா குலம்;

பாகவதர்
பிறந்தார்; அந்தக்
குலத்தைக் -
கொண்டாடுது நிலம்!

கிருஷ்ணமூர்த்தி - எனும்
கனவானுக்கும்;
மாணிக்கத் தம்மாள் - எனும்
மாதரசிக்கும்;

கடன் பட்டிருக்கிறது - தமிழ்க்
கலை அரங்கம்;



அவர்கள்
அகழ்ந்தெடுத்ததன்றோ -
பாகவதர் என்னும்
பாட்டுச் சுரங்கம்!

## 46. பி.யூ. சின்னப்பா

புதுக்கோட்டையில பூத்த -
புகழ்க் கோட்டை;

பூமி
பூரித்துப் -
புளகம் எய்தும்படி - அந்தப்
புகழ்க் கோட்டை...

பாட்டில்; நடிப்பில் - வகுத்தது
புதுப்பாட்டை!

'பி.யூ.சின்னப்பா - கலைப்
புதையலாய்க் கிடைத்த
பொன்னப்பா!'
என்று - அன்று
ஏத்தியது நாடு;

புரட்டிப்
பார்த்தால் புரியும் -
பதிவு செய்திருக்கிறது
பி.யூ.சின்னப்பாவின்...



சாதனைகளை -
சரித்திர ஏடு!

● ● ●

புகழ்வாய்ந்த -
புதுக்கோட்டை நாடக நடிகர் -
உலகநாதம் பிள்ளை -
உலகுக்குத் தந்த பிள்ளை...

சின்னப்பா எனப்படும் -
சின்னசாமி;
வசன
உச்சரிப்பிலும் -
நவரசம் பிலிற்றும்
நடிப்பினிலும் -

புதுப்புதுப்
பரிமாணங்களைக் காட்டி -
பயில்முறை நடிகர்களுக்குப்
பாடங்கள் சொன்ன சாமி!

● ● ●

உவமைக் கவிஞர் சுரதாவின் -
உரையாடல்களோடு -
மலர்ந்த -
'மங்கையர்க்கரசி';

இளங்கோவனின் -
இன்னிசைத் தமிழ் -
கட்டியம் கூற வந்த -
'கண்ணகி';

டி.வி. சாரியின் -
தமிழ்ச் சிலம்பத்தால் -
உச்சப் புகழ்கொண்ட -
'உத்தம புத்திரன்';

மற்றும் -
மணித்தமிழில் -
சுந்தரம்பிள்ளை -
சமைத்துத் தந்த -
மகோன்னதமான காவியம் -
'மனோன்மணி';

அற்றை நாளில் -
அசத்தோ அசத்து என்று -
ஆரையும் அசத்திய -
'ஆரிய மாலா';

பாபநாசம் சிவன் - நடிப்பில்
பங்கு பற்றிய -
பாட்டும்
பசுந்தமிழும் -
கோலோச்சிய -
'குபேர குசேலா';

ஸ்ரீராமுலு நாயுடுவின் -
'ஜகதலப் பிரதாபன்';
கதா -
காலட்சேபத்தின் மூலம் -
கர்நாடக இசையின் -
கனத்தைக் காட்டிய -
கீர்த்திமிகு -
'கிருஷ்ணா பக்தி';



என -
ஏராளமான -
படங்களைப்
பட்டியல் போடலாம்...

சின்னப்பாவின்
சீர்த்தியைக் காட்ட; அந்த -
முத்தமிழ் வித்தகனின்
மூர்த்தியைக் காட்ட!

● ● ●

கறுத்த மேனி; ஆனால் -
கடல்நுரைபோல் வெளுத்த
மனம்;
குட்டையான உருவம்; ஆனால்
குன்றைவிட உயரமான புகழ்
வடிவம்;
பிசிறு விழாத -
பிர்க்கா சாரீரம்;
சொன்னபடி யெல்லாம் -
சுழன்று சுழன்று -
கம்பு விளையாடியும் -
கத்தி வீசியும் -

காட்சிக்குக் காட்சி -
கனல்பொறியைப் -
பறக்கவிட்ட -
பயில்வான் சரீரம்!

● ● ●

தமிழ்த் -
திரை உலகில்...

பாரதியார்
பாட்டை -
ஆசை
ஆசையாய்...
இடம் பெறச் செய்தவர்; நம் -
இதயங்களைக் கொய்தவர்!

ஒரு படத்தில்
ஒன்பது வேடங்களில் -
ஒரு மேடையில்
ஒருசேர அமர்ந்து-

கல்யாணி ராகக்
கீர்த்தனையைப் பாடி -
அற்புதம் நிகழ்த்தியவர்; நம்
அகங்களை நெகிழ்த்தியவர்!

● ● ●

நடுத்தர வயதை -
நெருங்குவதற்கு முன்பாகவே...

பி.யூ.சின்னப்பா -
புவியை விட்டுப் போனார்;
போனால் என்ன?
பூந்தமிழர் நெஞ்சங்களில் -
நின்று நிலைக்கும் -
நிரந்தரம் ஆனார்!

- இன்னமும் இருக்கின்றார்கள்...

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

## 47. அரியக்குடி

'அரியக்குடி' ஊர் -
அரியக்குடி;
'அரியக்குடி' உதித்தது -
அய்யங்கார் குடி;
அறுபது ஆண்டுகள் பறந்தது -
அரியக்குடி கொடி;
அற்புதம்; அபூர்வம் -
அரியக்குடி பிடி;
ஆசாரம்-
அனுஷ்டானம் -
ஆகியவற்றில் -
அரியக்குடி மடி;
அரங்கத்தில் -
அடுத்தவர் அறியாது -
அவ்வப்போது போடுவார் -
அரியக்குடி பொடி;
அளப்பரிய
ஆற்றலோடு -
ஆரும் தோன்றவில்லை
அரியக்குடிக்கு அடுத்தபடி!

• • •

தந்தை -
திருவேங்கடத் தய்யங்கார்;
நற்றாய் -
நாச்சியா ரம்மாள்;
அவர்கள் இருவரும் -
அருந்தவம் ஆற்றினார்;
அதன் பலனாக -
அம்புவி மீது -
அவர்கள் மகனாக -
அரியக்குடி தோற்றினார்!

சங்கீதம் -
சின்ன வயதிலேயே - அவரது
சித்தத்திலும் இருந்தது;
ரத்தத்திலும் இருந்தது;

வெறும்
வாய்ப்பாட்டல்ல;
வண்டமிழர் செவிக்கெல்லாம்-
வாய்த்த விருந்தது!

• • •

முதன் முதன் - ஹரிகேசநல்லூர்

**சென்ற நூற்றாண்டில்,**
**தமிழ் மண் தரணிக்கு வழங்கிய**
**மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!**

**கவிஞர் வாலி**



முத்தையா பாகவதரிடம்;

பின்பு -
புதுக்கோட்டை -
மகாவித்துவான் -
மலையப்பையரிடம்;
அதற்கு -
அடுத்த படியாக...

ஸ்ரீரங்கம் -
ஸ்ரீமான் -
நாமக்கல்
நரசிம்ம அய்யங்காரிடம்;

இவர்களுக்குப்பின் -
இறுதியாக....

பன்மொழி கற்ற
பண்டிதரும் -
தொல்லிசையில் -
துறை போனவரும் ஆன-

புகழ்சால் -
பூச்சி அய்யங்காரிடம்;

இப்படி -
இணையற்ற மேதைகளிடம்...

அவர்களது
அடிநிழல் அமர்ந்து -
அரிய கர்நாடக இசையின் -
அகலம்; நீளம்; ஆழங்களை;
அறிந்து புரிந்து -
அப்பியசித்து -

அரியக்குடி ஆனார் மேதை;
அதன்பின் ஆண்டார் மேடை!

• • •

ராமானுஜ அய்யங்கார் -
ராஜபாட்டையில் நடந்தார்;
ரசிகர்களின் நெஞ்சணையில் -
ஒரு
ராக புருஷனாகவே கிடந்தார்!

வர்ண மாகட்டும்;
கீர்த்தன மாகட்டும்;
ராகம் தானம் -
பல்லவி யாகட்டும்;

அவருக்கென்று -
அமைந்திருந்தது ஒரு பாணி;
பி. ராஜம் அய்யர்;
பாலக்காடு நாராயணசாமி;
மதுரை கிருஷ்ணன்;
முதலியோருக்கு அவர்தான் ஏணி!

• • •

திருவாரூரில்
தோன்றிய -

மும்மூர்த்திகளுக்கும் - அவர்
முழுக் கீர்த்தியை சேர்த்தார்;
அதே நேரத்தில்
அருந் தமிழில் -
ஆண்டாளை ஆழ்வாரை -
அரங்கம் ஏற்றி அழகு பார்த்தார்!

• • •

'சங்கீத ரத்னாகரம்'
'சங்கீத கலாநிதி'
'சங்கீத சிகாமணி'
'காயக சிகாமணி'
'இசைப் பேரறிஞர்'
'சங்கீத நாடக அகடெமி விருது'
என -

ஏராளமான விருதுகள்...

அரியக்குடியை
அணி செய்தன;
புகழ்ப்
பூக்களைப்
பல சபைகள் - அவரைப்
பாராட்டிப் பெய்தன!

• • •

காஞ்சி மகாப் பெரியவாள்
காது குளிரக் குளிர...

அய்யங்கார் பாடக் கேட்டு -
ஆசீர்வதித்த துண்டு;
இசை
இன்பத்தைத் -
துறவிகளுக்கும் சேர்த்தார் -
தனது
தேன்பிலிற்றும் சாரீரம் கொண்டு!

• • •

அரியக்குடி -
அய்யங்கார் பாட்டுக்கு -
ஆரோகணம் உண்டு;
அவரோகணம் உண்டு!

ஆனால் -
அவர் பெருமைக்கு -
ஆரோகணம் மட்டுமே உண்டு;
அவரோகணம் இல்லை!

• • •

## 48. மதுரை சோமு

'உருகாதா? மனம் -
உருகாதா?
உரகசயனன் -
மருகா! முருகா!'

சக்ரவாகம் ராகத்தில் -



சோமு பாடிய -
இந்தப் பாட்டுக்கு
இறைவனை விடவும் -

அதிகம் உருகியது -
அனேகம் பேர்;
ஆம்!
அவ்வளவு பேர் -
அகத்தை உருக்கிய
அப்பாட்டுக்கு அவ்வளவு பேர்!

• • •

சுவாமிமலை
சோமசுந்தரம் -
மதுரை சோமுவாக
மாறினார்;

படிப்படியாகப்-
படிப்படியாகப்-
பாடுபட்டுப்-
புகழ் ஏணியில் ஏறினார்!

தஞ்சை மண்ணில்
தோன்றினார்;
பாண்டிய மண்ணில் - தன்
பதாகையை ஊன்றினார்!

சங்கீத
சிம்மமாய்க் கர்ச்சிக்கும் -
சித்தூர்
சுப்பிரமணியப் பிள்ளையிடம்...

108 - ஆம் பக்கம் பார்க்க



7-ஆம் பக்கத் தொடர்ச்சி

இடையறாது-
இசையைப் பயின்றார்;

சாதகம் -
சாதகம் - என்று
சதா சாதகத்தில் ஈடுபட்டு -
சில நாழிகைகளே துயின்றார்!

மதுரை சோமுவும் - கோ.வி.
மணிசேகரனும்....

ஒருசாலை மாணாக்கர் என்பதை-
ஒருசிலரே அறிவர்;
இருவருமே-
இசையில் நல்ல அறிவர்!

• • •

தந்தையார் -
திருநாமம் சிதானந்தம்;
தாயார் -
திருநாமம் கமலாம்பாள்;

இவர்கள் -
இருவரும்...

நோற்ற -
நோன்பின் பயனாக -ஞான
ஊற்றென -
உதித்த ஒரு மகன் -
பாட்டரசர் சோமு - எனப்
பார்புகழும் திருமகன்!
கட்டை -
குட்டையான தேகம்;
ஆற்று மணலில் -
அற்றை நாளில் -
மல்யுத்தம் பழகியதால் -
மேலும் வலியதென் றாகும்

சோமு -
சின்னக் குழந்தை போல் -

வெள்ளை மனத்தோடு
விரிப்பார் நகையை; அடிக்கு
விரல்களால் - கோதி
விட்டுக் கொள்வார் சிகை

அளப்பரிய
அன்போடும் பண்போடும் -
ஆரிடமும் பழகும்
அவர்பால்...

எவர்தான் - கொள்ள
ஏலும் பகையை?

பேரும் புகழும்;
சீரும் சிறப்பும்;
பாட்டுத் துறையில் -
பெற்ற பின்பும்...

தருக்கும் செருக்கும்
துளியளவும் இல்லாத -
நிறைகுடம் - அந்த
நல்ல மகன்;

தனது இசையால்
தமிழ்ச் சமுதாயத்தையே -
கிறங்க வைக்கும் அளவு
கீர்த்தனங்களை...

சுதி சுத்தமாகப் பாடிய -
செல்ல மகன்;
வாராத சங்கதிகளையும் - தன்
வளமான சாரீரத்தால் -

கண்ணாடியைத் தூக்கி கண்ணை இடுக்கி, "யாரு.. சபேசனா.. வாடாப்பா வா. சௌக்கியமா இருக்கிறியா?" என்று வாய்வழிய வரவேற்றார். எண்பது வயசாச்சு அல்லவா. குழந்தை மாதிரி ஜொள் வழிந்தது.

இடைப்பட்ட காலத்தில் இடையூர், மதுக்கூர் என்று மாற்றலாகி திரும்பவும் இந்த ஊருக்கே வந்து தலைமையாசிரியராக ஓய்வு பெற்றதாகச் சொன்னார். மருமகனும் ஆசிரியர்தானாம். சற்றைக்கெல்லாம் அவரும் வந்துவிட்டார். நல்ல மாதிரியான மனிதர்தான்.

பேசிக்கொண்டிருந்தோம்.

மீண்டும் நான் சொந்த ஊருக்கு வந்து, கம்ப்யூட்டர் சென்டர் ஆரம்பித்ததில் ஐயாவுக்கு பரம சந்தோஷம். கடைசிகாலத்தில் சொல்லிக் கொள்ளும்படி ஒரு பழைய மாணவன் கிடைத்ததில் அவருக்குப் பூரிப்பான பூரிப்பு. ஒரு சீனியர் கிழத்துக்கு ஒரு ஜூனியர் கிழம்.

சரி... மதுரபாஷினி?

அரைமணிக்கு மேலாகியும் அவள் தென்படவில்லை. வெளியில் போய் இருப்பாள். வரட்டும். வந்ததே அவளைப் பார்க்கத்தானே.

இருட்ட ஆரம்பித்தது.

"வைஷ்ணு.. இன்னைக்கு செவ்வாய்க்கிழமை. அம்மாவுக்கு விளக்கேத்தி வைம்மா" என்றார் ஐயா.

ஊசி குத்தியதுபோல் இருந்தது எனக்கு. வைஷ்ணவி அகல் விளக்குடன் வர, நான் நிலைவாசலுக்கு மேலே பார்த்தேன்.

மதுரபாஷினி புஷ்பக்குவியலாய்ச் சிரித்துக் கொண்டிருந்தாள். கண்ணாடிச் சட்டத்திற்குள்.

படத்தின் அடியில் 'துன்பக் கடலைத் தாண்டும்போது தோணி யாவது கீதம்...' என்னும் சரணம்.

"அதென்னமோடாப்பா. இந்தப் பாட்டென்றால் மதுராவுக்கு உசிரு. உள்ளுக்கும் திண்ணைக்குமா இதப் பாடிண்டுதான் வளைய வருவா. ஆஸ்பத்திரி பெட்டிலே டிரிப்ஸ் ஏத்திட்டு இருக்கறச்சகூட இந்தப் பாட்டைத்தான் முணுமுணுத்துட்டு இருந்தா ..ம்.. போய்ச் சேர்ந்துட்டா.." சோகப் பெருமூச்சுவிட்டார், ஆசிரியர்.

நீர் வழிந்தது என் கண்ணில்.

"எதுக்குடா சபேசா இப்ப அழறே. பிறந்தவா சாகறது சகஜம்தானே..."

குருவின் வார்த்தைகள் எனக்குச் சமாதானமாகவில்லை.

மதுரபாஷினியின் மரணத்துக்காகவும், அதனிலும் அவள் மரணத்துக்குள் வாழும் அப்பாடலின் ரகசியத்துக்காகவும் வழிநெடுக நான் அழுதுகொண்டே வந்தேன். ●

---

"சித்த மருந்துகளைப் பத்தி ஒரு கட்டுரை அனுப்பியிருந்தேனே... என்ன ஆச்சுங்க சார்..?"

"அனுப்பி எவ்வளவு நாள் ஆகுதுங்க..?"

"ஒரு 'மண்டலம்' ஆயிடுச்சே சார்..!"

-கிரிஜா மணாளன்



7-ஆம் பக்கத் தொடர்ச்சி

இடையறாது-
இசையைப் பயின்றார்;

சாதகம் -
சாதகம் - என்று
சதா சாதகத்தில் ஈடுபட்டு -
சில நாழிகைகளே துயின்றார்!

மதுரை சோமுவும் - கோ.வி.
மணிசேகரனும்...

ஒருசாலை மாணாக்கர் என்பதை-
ஒருசிலரே அறிவர்;
இருவருமே-
இசையில் நல்ல அறிவர்!

• • •

தந்தையார் -
திருநாமம் சிதானந்தம்;
தாயார் -
திருநாமம் கமலாம்பாள்;

இவர்கள் -
இருவரும்...

நோற்ற -
நோன்பின் பயனாக -ஞான
ஊற்றென -
உதித்த ஒரு மகன் -
பாட்டரசர் சோமு - எனப்
பார்புகழும் திருமகன்!
கட்டை -

குட்டையான தேகம்;
ஆற்று மணலில் -
அற்றை நாளில் -
மல்யுத்தம் பழகியதால் - அது
மேலும் வலியதென் றாகும்!

சோமு -
சின்னக் குழந்தை போல் -

வெள்ளை மனத்தோடு
விரிப்பார் நகையை; அடிக்கடி -
விரல்களால் - கோதி
விட்டுக் கொள்வார் சிகையை;

அளப்பரிய
அன்போடும் பண்போடும் -
ஆரிடமும் பழகும்
அவர்பால்...

எவர்தான் - கொள்ள
ஏலும் பகையை?

பேரும் புகழும்;
சீரும் சிறப்பும்;
பாட்டுத் துறையில் -
பெற்ற பின்பும்...

தருக்கும் செருக்கும்
துளியளவும் இல்லாத -
நிறைகுடம் - அந்த
நல்ல மகன்;

தனது இசையால்
தமிழ்ச் சமுதாயத்தையே -
சிறங்க வைக்கும் அளவு
கீர்த்தனங்களை...

சுதி சுத்தமாகப் பாடிய -
செல்ல மகன்;
வாராத சங்கதிகளையும் - தன்
வளமான சாரீரத்தால் -



போராடிப் போராடித் - தன்
போக்குக்கு....

வரவழைக்க -
வல்லமகன்!

உள்தொண்டை -
உதவு படியாக -
இல்லாமல் -
இருப்பினும்...

விடாக் கண்டன்
கொடாக் கண்டனாய் -
அதை
அடக்கி ஆண்டு -

அவையோர்க்கு -
அமுது பிழிந்து தருவான்;
அந்த
அரிய கலைஞன் -
உற்ற புகழுக்கு
உவமை பெருவான்!

• • •

'மருதமலை -
மாமணியே!'

சோமு பாடிய
சினிமாப் பாட்டு;
ஆனால்...
அருந்தமிழ் நாட்டில் -

உருகாத - ஓர்
உயிர் உண்டோ - அந்த
சினிமாப் பாட்டை -
செவிகளால் கேட்டு?

• • •

அற்றை நாளில் -
அனேக விளம்பரங்களில்...

'பாட்டுக் கச்சேரி; தக்க -
பக்கவாத்தியங்களுடன்' - என்று
பிரசுரிக்கப்
பட்டிருக்கும்;

மதுரை சோமு - என்னும்
மாமேதைக்கு மட்டும்....

'பாட்டுக் கச்சேரி - மிக்க
பக்கவாத்தியங்களுடன்' - என்று
பிரசுரிக்கப்
பட்டிருக்கும்;

காரணம் - அவர்
கச்சேரியில் -
பக்கவாத்தியங்கள்
பத்தைத் தொட்டிருக்கும்!

• • •

'தாமரைத் திரு' விருதினைத் -
தந்து -
அவரை கவுரவித்தது
அரசு;
ஆனால் - அதைவிட
அதிகமாக...

காலம் உள்ள
காலம் -
பூங்காற்று கொட்டி நிற்கும் -
அவர்
புகழ் முரசு!

(இன்னமும் இருக்கின்றார்கள்)

**3**

"அப்பா..."

குரல் கேட்டு, டி.வியிலிருந்து, திரும்பினான் ராஜு.

"என்னடா?"

"எனக்கொரு டவுட்"

"சீக்கிரம் கேளு. டிராமா முடிஞ்சு கேள்வி கேட்கப் போறான். உனக்கு இப்பத்தான் சந்தேகம் வரும்."

"ஆமா! நீங்களும் எத்தனையோ போட்டி கார்டுகளுக்குத்தான் அனுப்பி வைச்சீங்க. என்ன பிரயோஜனம்? அவனோட சந்தேகத்துக்காவது பதிலைச் சொல்லுங்க. நான் உள்ளே போய் 'குக்கர்' வைக்கிறேன்."

மைதிலி உள்ளே போனாள்.

**4**

இது என்ன கூத்து? இன்னிக்குப் புதுசா இந்த சப்ஜெட்டைத் தொடறானே? என்ன கண்றாவிடா இது? டி.வி. வந்த பிறகு ஏழு வயது பையன் கூட Sex பற்றி கேட்கிறானே?

சினிமா போஸ்டரைப் பார்த்திருப்பானோ?

"ஸ்ரீராமா.. என்னோட 'புக்' ஷெல்பை நோண்டினியா?"

"இல்லே டாடி! எதுக்குக் கேட்கறீங்க?"

"உம்! மண்ணாங்கட்டி. முளைச்சு மூணு இலை விடலை.. அதுக்குள்ளே Sex-க்கு அர்த்தம் கேட்குதோ? மைதிலி.. நீ பிள்ளை வளர்க்கிற லட்சணத்தைப் பாரு.. ஏழு வயசு ஆறது. அதுக்குள்ள Sex-க்கு அர்த்தம் கேட்கிறான்.

இங்கிலீஷ் பட போஸ்டர் பார்த்தியா? என்னோட புத்தகத்தை எல்லாம் புரட்டினியா..? மைதிலி நீ ரொம்ப தண்டம்.. பாரு அந்த மாதிரி புக்ஸ் எல்லாம் வைச்சிருப்பேனே.. அதைப்போய் நோண்டி இருக்கான், இந்த திருட்டு படவா. இனிமே என்னோட ஷெல்பைத் தொடு.. கையை ஒடிச்சுடறேன்.."

**வரிசைப்படுத்தி வாசிக்க முடியாதவர்கள் 102-ம் பக்கம் பார்க்க...**

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

## 49. ம.பொ.சி.

'ம.பொ.சி. என்றால் - தமிழை
மறைபொருள் அறியும் சிவஞானம்!'
என்று - ஒருமுறை
எம்.ஜி.ஆர். பேசினார்;
அடக்கம் காரணமாய் -
ம.பொ.சி.
அதைக் கேட்டுக் கூசினார்!

●●●

புண்ணியவான்-
பொன்னுசாமிக்
கிராமணியாரும்;
சிவகத்தை-
சிவகாமி அம்மையாரும்;

பெற்றெடுத்த
பெருமகன்-
படிக்கப்
புகுகையில்...

வறுமை
வைத்தது
மூன்றாம் வகுப்போடு - ஒரு
முற்றுப்புள்ளி;

காரணம் எதுவாயினும்
கல்லாதவன் என்றால்
வையமிசை - அவனொரு
வெற்றுப்புள்ளி!

ஆனால்-
அந்தப் பையன்...

முகிழ்த்தான் - ஒரு
முக்கியப் புள்ளியாக; கால்-
முளைத்து நடக்கும்-
முத்தமிழ்ப் பள்ளியாக!

●●●

ஆரம்பித்தான் வாழ்வை - ஓர்
அச்சுத் தொழிலாளியாக;

சென்ற நூற்றாண்டில்,
தமிழ் மண் தரணிக்கு வழங்கிய
மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!

**கவிஞர் வாலி**



அப்படி
ஆரம்பித்தவன்...

சிலப்பதிகாரத்தின்
சிறப்புகளை; சேரன்
தம்பி இளங்கோவின்
துறப்புகளை -

ஆய்ந்து பேசும் அளவு
ஆகினான் அறிவாளியாக!

●●●

தாய்ப்பாலையும்-
தமிழ்ப்பாலையும்-
ஒருசேர ஊட்டினாள்
ஓர் உத்தமி-

தான்
தாலாட்டிய மகவுக்கு;

அதுதான்
ஆணிவேர்; பின்னாளில்
ஆலமரமென
அப்பிள்ளை பெற்ற தகவுக்கு!

ஆம்;
அருட்பாவையும்;
தேவாரத்தையும்;
திருவாசகத்தையும்;

மாதா சொல்லக் கேட்டு-
மனனம் செய்த பிள்ளை ம.பொ.சி.;
அறநெறிகளை -தன்
அன்பு மகனுக்கு-
ஆசை ஆசையாய் போதித்த-
அந்த அன்னையார் ஒரு மகராசி!

●●●

வான்புகழ் கொண்ட-
வள்ளுவனையும்;
கல்வியில் பெரிய-
கம்பனையும்;
சிலம்பை இசைத்த-
சேரன் இளவலையும்;

தானே கற்றுத்
தேர்ந்ததுதான்-
ம.பொ.சி.யின்
மாண்பின் உச்சக் கட்டம்;

'சிலம்புச் செல்வர்' என - ரா.பி.
சேதுப்பிள்ளை தந்தார் பட்டம்!

●●●

ம.பொ.சி. எனும்-
மாவீருக்கு...

மீசையின் - இரு
முனைகளும்-
மேல்நோக்கி-
முறுக்கிவிடப் படாமல்...
கீழ்நோக்கிக்
கவிந்திருக்கும்; ஆனால்-
கண்களில் வீரம்
குவிந்திருக்கும்!

அதுபற்றி
அவரிடம் - ஒரு
பொதுச்சபையில் - நான்

பேச நேர்ந்தது; அவரது-
கவிந்த மீசைக்குக்-
காவியமுலாம் பூசநேர்ந்தது!

'அய்யா!
அருந்தமிழ் அரசி...

உங்கள்
உதடுகளில்-
வீறுற
வீற்றிருக்கிறாள்; அவள் தனது-
வெண்கொற்றக் குடையாய் - உங்கள்
வெண் மீசையை ஏற்றிருக்கிறாள்!'

ம.பொ.சி. -
மகிழ்ந்தார்; என்னை-
நெஞ்சாரத் தழுவி-
நெகிழ்ந்தார்!

●●●

சுதந்திரப் போரில்
சுத்த வீரனாக நின்று- அவர்
பன்முறை -
பார்த்திருக்கிறார் சிறை!

அதுமட்டுமல்ல;
ஆந்திரா ஆசைப்பட்டது-
சென்னையைச்
சாப்பிட;

கேரளம் ஆசைப்பட்டது-
கன்னியாகுமரியைச் சாப்பிட;
ம.பொ.சி. - அவற்றை
மீட்டுத் தந்தார் நமக்கு -
அரசு-
அவர் கைக்குக் காப்பிட!

●●●

மண்ணை மட்டுமல்ல;
மகத்தான மனிதர்களாகிய...



கப்பலோட்டிய தமிழன்;
கட்டபொம்மன்; ஆகியோரின் -
காணாமற்போன-
கவுரவங்களையும்...

ம.பொ.சி.தான்
மீட்டார்; அவர்களது-
மாண்புகளை-
மக்கள் காதுகளில் போட்டார்!

●●●

ம.பொ.சி. - நம்மால்
மறக்க முடியாதவர்; நம்
இதயங்களைப் பொறுத்தவரை-
இறக்க முடியாதவர்!

## 50. வ.உ.சி.

பாரதியாரை விட -
பத்து வயது மூத்தவர்;
வ.உ.சி.யை -
வாஞ்சையுடன்-
'மாமா' என-
மருவி-
பாரதியார்-
பெருமகிழ்ச்சி பூத்தவர்!

●●●

முள்ளை-
முள்ளால் எடுக்க
வேண்டும்-எனும்
முதுரைக் கேற்ப...

கடல்வழியால் புகுந்த



கள்வர்களை-
கடல்வழியாகவே
கூடிது கூடிந்து கால் பிடரிபட...
விரட்ட வேண்டும்-என
விரும்பினார் வ.உ.சி. - அவர்
சுத்த-
சுயம்பிரகாசமான சுதேசி!

வணிகத்தால் - நாட்டை
வவ்வியவர்களை; அதே-
வணிகத்தால் - நாமும்
வரிந்து கட்டிக்கொண்டு...

எதிர்கொள்ள- வ.உ.சி.
எண்ணினார்;
அதற்கு-
ஆவன பண்ணினார்!

●●●

அந்த
அற்புதமான தமிழன்...

கப்பல் ஓட்டிக்
காட்டினான்; அதற்கான-
பொருளை-
பாலகங்காதர திலகர் அனைய-
தேசு மிகுந்த
தேசபக்தர்களிடம் ஈட்டினான்;

பாரத தேசத்தின்
பதாகையை-
பவழமும் முத்தும் தரும்
பரவையில் நாட்டினான்;

சுப்பிரமணிய
சிவாவோடு சேர்ந்து-
சுதந்திரக் கனலை
சுடச்சுட மூட்டினான்!

●●●

தும்பைப் பூவைப் போல்
தூய்மையான-
வெள்ளை மனத்தவன் ஒருவன்-
வெள்ளையர் முகத்தில் -
தூத்துக்குடியில் நின்று -
தூதூவெனத் துப்பினான்;

நரியை -
நிகர்த்தவர் மூஞ்சியில் -
கரியைக்
கைநிறைய எடுத்து அப்பினான்!

ஆங்கிலேயனை-
அவமானம் பிடுங்கித் தின்ன;
அவனது
அரசு என்னும் அரசின்-
ஆணிவேரை
அணு அணுவாய்க் கொன்ன-

விரசிதம்பரனாரை
விரித்த வேண்டி -
துப்பாக்கியால்
துளைத்தான் தெற்குத் திக்கை;

அதை ஆண்டிருந்த
ஆண்டகையை அள்ளி வந்து-
இருமூன்று ஆண்டுகள்
இழுக்க வைத்தான் செக்கை!

இத்தகு-
இழிசெயலுக்கு...

அனுசரணையா யிருந்தான்-
'ஆஷ்' என்னும் பஞ்சை;



ஆதலால்தான்-
அடலேறு அனைய-
வாஞ்சிநாதன் தோட்டா -
வகிர்ந்தது அவன் நெஞ்சை!

●●●

'ஒட்டப்பிடாரம்'-
ஓர் ஊர்; அதன் பேர்-
ஒவ்வொரு
தமிழன் உதட்டிலும்-
ஒட்டிக்கொண்டது;
அதுதானே - நம்
அருமைச் செல்வம்-
சிதம்பரனாரை-
சகத்துக்குத் தந்து-

கணக்கற்ற புண்ணியத்தைக்
கட்டிக் கொண்டது!

பரமாயி அம்மாள்- எனும்
பத்தினிக்கும்;
உலகநாதம் பிள்ளை- எனும்
உத்தமர்க்கும்;

சனித்த பெருந்தகை
சிதம்பரம்; அவர் இட்ட-
பிச்சைதான் - நாம்
பெற்றிருக்கும் சுதந்திரம்!

●●●

வ.உ.சி. - வெறும்
வழக்கறிஞர் மட்டுமல்ல;
தமிழ் போதாது- அவர்
தமிழ்ப் பற்றைச் சொல்ல!

சட்டம் படித்தவர்-
செந்தமிழும் படித்தார்;
நல்ல
நல்ல
நூல்களை - தன்
நுண்ணறிவு கொண்டு...

வையம் பயனுற - அந்த
வித்தகர் வடித்தார்!

சிதம்பரனாரின்-
சீரிய தலைமையின் கீழ்...

அமரர்
அ.ச. ஞானசம்பந்தம் - தன்
ஆரம்ப காலத்தில்
ஆற்றியிருக்கிறார் உரை;

வ.உ.சி.யின்
வண்ணத்தமிழ்ப் புலமையில்...

பலமுறை - தோழர்
ப. ஜீவானந்தம்-
பரவசப்பட்டு-
பாகாய் உருக -
நனைந்தது உண்டு- ஜீவாவின்
நயனத் திரை!

●●●

சிதம்பரம் பிள்ளையின்
சீர்த்தியை; சிறு-
கீறல்கூட இல்லாத
கீர்த்தியை;

கடல் சொல்லும்;
காற்று சொல்லும்;
கப்பல் சொல்லும்;
ககனம் சொல்லும்;

எங்கள் வ.உ.சி.யை-
எதுதான் கொல்லும்?

- இன்னமும் இருக்கின்றார்கள்...

# கவிஞர் வாலி

சென்ற
நூற்றாண்டில்,
தமிழ் மண்
தரணிக்கு
வழங்கிய
மகத்தானவர்களின்
மகோன்னத
வரலாறு!

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

## 51. முக்தா ராமசாமி

'வேலை செய்பவன் கூலியை - அவன்
வேர்வை அடங்குமுன் கொடு!' என...

இயம்புகிறது
இறைநூல்;
இசுலாமியப் பெருமக்களின்
இதயம் ஏத்தும் மறைநூல்!

●●●

மேற்சொன்ன -
மறை வாசகத்தின்படி...

பேசிய கூலியை
பேசிய வாறு - உடனுக்குடன்
பட்டுவாடா செய்த
புண்ணியவான்;

அதுவும் -
அவரவர் -
வீடுதேடிப் போய் -
வாசற்கதவைத் தட்டி...

காசோ -
காசோலையோ - 'இந்தா' எனக்
கையில் திணித்த
கண்ணியவான்;

திரைத்
துறை - எனும்
ஒப்பனை உலகில்
ஒருவர் இருந்தார்; பிறர் -
ஊழியத்திற்கான
ஊதியத்தைத் தரும் வரை -
அவர்
அன்னடானம் அருந்தார்!

தரமுடிந்ததைச் சொல்லுவார்;
தருவார்;

ஆகவே -
அவர் அழைத்தால்...



கோடம்பாக்கத்தில் -
கோலோச்சும் -
கலைஞனோ -
கவிஞனோ -

வேலை செய்ய - உடனே
வருவார்!

●●●

முக்தா ராமசாமி பற்றி - நான்
முன் மொழிந்ததை...
அட்டியின்றி
அப்படியே -
வழிமொழியும்
வெள்ளித்திரை;

வெறும் - உபசார
வார்த்தையல்ல; நூறு -
விழுக்காடு -
வாய்மை என் உரை!

கொடுத்த வாக்கைக் -
காப்பாற்ற விரும்பினாலும்...

சில சமயம் -
சினிமாத் துறையில் - அது
சாத்தியமாகாது போகலாம்; அந்த-
சூதாட்டத்தில் -
சரிவுகள்; உயர்வுகள்; விரல் -
சொடுக்கும் நேரத்தில் ஆகலாம்!

வீழ்ச்சியிலும் -
வளர்ச்சியிலும் -
வாக்கு நாணயத்தை -
விடாது காத்த...

ராமசாமி -
ராமாயணகால -
ராமசாமி யாகவே -
ராஜ்ஜிய பரிபாலனம் செய்தார்;

கொய்த வெற்றிகளைத் - தன்
கோதறு குணத்தால் கொய்தார்!

●●●

அனேகமாக
ஆண்டுக்கு ஒருமுறையாகிலும் -
மயல் கொண்டு - புயல்
மய்யம் கொள்ளும்...

நாகப்பட்டினம்
நகரில்...
ஓர்
உயர்நிலைப் பள்ளிக்கூடம்;
அதில் - ஓர்
அந்தணப் பெருந்தகை -
ஆசிரியரா யிருந்து போதித்தார்
அனைவர்க்கும் ஆங்கிலப் பாடம்!

வித்தகரான - அவ்
வெங்கடாச்சாரியார்க்கும்;
மாசு -
மறுவற்ற -
மாண்புகள் மிக்க -
மாதரசி செல்லம்மாளுக்கும்;

பிள்ளையாக - ராமசாமி
பிறந்தார்; இரு -
உடன்பிறப்புகள்
உடையவராகச் சிறந்தார்;

'பொக்'கென - விதி
போக்கியது தந்தையை;
திக்கற்ற ராமசாமி -
திடப்படுத்தினார் சிந்தையை!

●●●

'சீ' எனத் தள்ளினார் அயர்வை;
சிந்தினார் வியர்வை;
எட்டினார் ராமசாமி -
எட்ட ஏலாத உயர்வை!

அவர் மூலம்
அடியே னொத்தவர் -
அறிந்து கொண்டது
யாதெனில்...

காரியம் யாவிலும் -

காட்டு ஆர்வை;
அவலத்தில்
ஆட்பட்ட நெஞ்சை -
அங்கிங்கு
அலைபாயாதபடி நேர்வை;

கொட்டு -
குடம் குடமாக வேர்வை;
காலம் காட்டும் -
கஷ்டங்களுக்கான தீர்வை!

●●●

'முக்தா பிலிம்'சுக்கு - ராமசாமி
முதலாளி யானார்;

தொட்ட தெல்லாம் -
துலங்கிய நாளிலும் -
தொடர்ந்து உழைக்கும் -
தொழிலாளி யானார்!

சிவாஜியை வைத்து -
சிறந்த படங்கள் எடுத்தார்;

பாலசந்தர்;
சோ;
விசு; இவர்கள் -
வடித்த கதைகள்...

வெள்ளித் திரையில் அமர -
வாய்ப்புகள் கொடுத்தார்!

●●●

'முதலாளி' படத்தின்
மூலமாக...

இயக்குனரான - தன்
இளவலுக்கு - ராமசாமி
இன்னொரு தந்தையாகவே
இருந்து -

வழிநடத்தினார்; பொருதி -
வறுமையைக் கீழே கிடத்தினார்!

●●●

பல பாடல்கள் - ஏற்கெனவேயே
புனைந்தவர் ஆயினும்...

வெளிச்சத்திற்கு
வராமல் இருந்த



ஒரு கவிஞருக்கு - ராமசாமிதான்
வாய்ப்புத் தந்து...

ஏற்றினார் - புகழ்
ஏணியில்;

அதுவரை -
அந்தக் கவிஞர் -
கிடந்தார் - துன்பக்
கேணியில்!

ஆர் அவர்? வாலியெனும் -
அடியேன்தான்! வேறு எவர்?

## 52. 'இதயம் பேசுகிறது' மணியன்

எல்லோர்க்கும் இனியன் -
என்றிருந்த மணியன்...

தஞ்சை மாவட்டத்துத் - தமிழ்
நஞ்சை; இந்த -
நஞ்சை
நல்கிய சொல்மணிகள் -
அள்ளியிருக்கின்றன
அருந்தமிழர் நெஞ்சை!

பத்திரிகை;
படம்;
பயணம்;
நாடகம்;
நவீனம்; என -
நானாவிதத்திலும்...

அவன் பேனா -
அபிநயம் புரிந்தது;
தமிழ்த் தேறலை -
தாரையாய்ச் சொரிந்தது!

●●●

தும்பைப் பூ



தோற்றுப் போகும்;
வேட்டி சட்டை - அப்படியொரு
வெள்ளை!

தொட்டில் சேய்
தோற்றுப் போகும்;
பழகு குணம் - அப்படியொரு
பிள்ளை!

சற்றே - பருத்த
சரீரம்;
சற்றே - கனத்த
சாரீரம்;

மடிப்பு -
மடிப்பாகத் தலைமுடி;
முன் நெற்றியில் -
முட்டையாய்த் திருநீற்றுப் பொடி!

சுற்றுப்புறச் -
சூழலை...

தன் வருகையால்;
தன் வார்த்தையால்;

கலகலவென ஆக்குவான்;
கவலைகளை நீக்குவான்;
உற்சாகம் கொள்ளுமாறு -
உள்ளங்களை ஊக்குவான்!

●●●

'விகடன்' துணை ஆசிரியராக -
வீற்றிருந்த நாளில்...

புதிய
படைப்பாளிகளின் -
வரவுக்கு
வழி கோலினான்;

எவர் எழுதுகிறார் -
என்பதை விட -
என்ன எழுதுகிறார்
என்பதைக் கணக்கில் எடுத்து...

சிறந்த படைப்பை - வாசித்து
சிலிர்த்த தோலினான்!

ஆணோ -
அல்லது பெண்ணோ -

எழுத்துலகில் - சிலர் இன்று
எய்தியிருக்கும் பிரபலம் -
அவனது உதவி; அது -
அவனால் வந்த பதவி!

●●●

அவன் பாதம் படாத
அயல் நாடு இல்லை;

வடதுருவம் தொட்டு -
தென்துருவம் வரை -
உள்ள மண் - அவன்
உலவிய எல்லை!

'இதயம் பேசுகிறது' -
எனும் தலைப்பில்...

அவன் -
அற்புதமாகப் -
புனைந்த
பயணக் கட்டுரைகள்-

பஞ்சாப் முதல் கேரளம் வரை -
பல்கலைக் கழகப்
புத்தகங்களில்-
பெற்றன இடம்; அன்னணம் -
பெற்றும் அவன் நிறை குடம்!

●●●

'இதய வீணை'
'சிரித்து வாழ வேண்டும்'
'பல்லாண்டு வாழ்க'
'சொல்லத்தான் நினைக்கிறேன்'
என - அவன்
எடுத்த படங்கள் - மக்கள்
நெஞ்சங்களில்
நீங்காது -
நிற்கின்ற
நினைவுத் தடங்கள்!

●●●



ஆதிநாள்களில்
அவன்...

எழுதி இயக்கினான்
எத்தனையோ நாடகங்கள்;
அது குறித்து -
அதிகம் பேர் அறிய -
அனுசரணையாக - இன்றுபோல்
அன்றில்லை ஊடகங்கள்!

ஆயினும் -
அற்றை நாளில்...
சந்திர காந்தா நடித்த -
'சொல்லத்தான் நினைக்கிறேன்'-
நல்ல -
நாடகங்களில் ஒன்று;
ஆசிரியர் மணியனை -
அதுதான் ஏற்றியது குன்று!

●●●

எம்.ஜி.ஆரின் சுயசரிதை - 'நான்-
ஏன் பிறந்தேன்?' - ஆனந்த
விகடனில்
வெளிவர -
மணியன்தான்
முக்கியக் காரணம்;
அன்று
அவர்களிடையே
ஆரம்பமான நட்பு...
அரசியல்
ஆலோசனைகள் வரை சென்று-
ஆனது பின்னாளில் பூரணம்!

ஆம்!
அவன்தான்...
இந்திரா காந்திக்கு -
இடது கையாகவும்;
எம்.ஜி.ஆருக்கு -
இரண்டு கையாகவும்;

செவ்வனே -
செயல் பட்டான்;
இந்திரப் பிரஸ்தத்திலிருந்து -
இராமாவரம் வரை - ஓர்
இணைப்புப் பாலம்
இட்டான்!

●●●

பரமாசாரியாள்; காஞ்சிப் -
பெரியவரிடம்...

காதலாகிக்
கண்ணீர் மல்கிக்
கசிந்துருகி நின்றவன்;
ஜகம் -
ஜபிக்க நின்ற -
ஜகத்குருவின் அருளை -
ஜகம் முழுக்க ஏந்திச்
சென்றவன்!

அருள்மயமான
ஆத்திகம் -
ஞாலம் முழுக்கப் பரவ -
'ஞான பூமி' நடத்தியவன் -
பல
பக்தர்களின்
நெஞ்சங்களை-அந்தப்
பத்திரிகை மூலம்
பரவசத்தில் கிடத்தியவன்!

●●●

சாப்பாட்டுப் பிரியன்;
சங்கீதப் பிரியன்;
செல்லுமிட மெல்லாம் - தன்
சகதர்மிணியைப் பிரியன்;

அப்படிப்பட்டவன் -
அனைத்தையும் ஒருநாள்
பிரிந்து...

ககனம் ஏறிக் -
கயிலாயம் சென்றான்;
புகழ் உடம் போடு - தமிழ்
பூமியில் நின்றான்!

- இன்னமும் இருக்கின்றார்கள்...

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

கவிஞர் **வாலி**

## 53. அ. மருதகாசி

பொதுவாகப்
பார்க்குமிடத்து...

நல்ல மனிதனானவன்
நல்ல கவிஞனாவதில்லை;
நல்ல கவிஞனானவன்
நல்ல மனிதனாவதில்லை!

இது-
இந்த மண்ணின் ராசி;
ஆயினும்
அந்தக் கூற்றை-
அபத்தமாக்கியது
அ. மருதகாசி!

நல்ல மனிதனாகவும்-
நல்ல கவிஞனாகவும்-
ஒரே நேரத்தில் - அந்த
ஒருவன்தான் இருந்தான்;
ஒருவர் உணவைப் பறித்து-
ஒருநாளும் அவன் அருந்தான்!

●●●

கால் நூற்றாண்டு
காலம்...

படவுலகம் - அவன்
பைக்குள் இருந்தது;
கவிதை - அவன்
கைக்குள் இருந்தது;
அறுபத்தொன்பது
ஆண்டுகள் - அத்தகு
மேன்மை மிக்கவனின் உயிர்-ஒரு
மெய்க்குள் இருந்தது!

தேமா; புளிமா;
தெரிந்தவன்-
டிராமா; சினிமா;
தெரிந்தவனாகவும்-
இருந்த நாளில்-
இருந்தவன் அவன்;

பசுந்தமிழைப்
பழுதற - அவனுக்குப்
பயிற்றுவித்த-

**சென்ற நூற்றாண்டில்,
தமிழ் மண் தரணிக்கு வழங்கிய
மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!**



பாபநாசம் ராஜகோபால அய்யரின்-
பின்னோன்தான்-
பாபநாசம் சிவன்!

●●●

மருதகாசியின்
மணிமணியான பாடல்களை...
இசைத் தட்டுகளைவிட-
இன்றைய ஒலிநாடாக்களை விட-
கடை கடையாகப் புழங்கும்-
குறுந்தகடுகளை விட-
அதிக-
அக்கறையோடு...
பதிவு செய்து வைத்திருப்பது-
பூங்காற்று;
காற்றுள்ள வரை-
கேட்கும் அவன் பாட்டு!
ஒன்றா? இரண்டா?
ஒரு பட்டியல் போட?
இவ்வளவு-
இவ்வளவு - என
எவ்வளவு
எழுதினாலும்...
அவற்றின் எண்ணிக்கை-
அப்பவும் இருக்கும் கூட;
கணக்கற்ற -
கவிதைப் பூக்களை-
தந்தான் அவன்-
தமிழ்த்தாய் தன் தலையில் சூட!

●●●

'வாராய் - நீ
வாராய்'
'முல்லை மலர் மேலே-
மொய்க்கும் வண்டு போலே'
'உலவும் தென்றல் காற்றினிலே-
ஓடமிதே'
'வருவேன் - நானுனது
மாளிகையின் வாசலுக்கே'
'வண்ணத்தமிழ்ப்-
பெண்ணொருத்தி'
'மாசிலா-
உண்மைக்காதலே'
'சமரசம் -
உலாவும் இடமே'
'வசந்த முல்லை-
போலே வந்து'
என -
ஏராளம் உண்டு எனினும்...
கர்மவீரர்
காமராஜர் - ஒரு
பொதுக்கூட்டத்தில்
போற்றிய பாட்டு-
'மணப்பாறை-
மாடு கட்டி'

●●●

காற்றும்
காட்டாமணக்குச் செடியும்-
கொஞ்சிக்
குலாவும்...

கொள்ளிடக்
கரையோரத்தில்-
அழகிய சிற்றூர்-
அதன்பேர் 'மேலக்குடிக்காடு';
மருதகாசி பிறந்ததால்-
மேலக்குடிக்காடு பெற்றது பீடு!

வையம் புகழ-
வாழ்ந்த பிள்ளையின் தந்தை-
அய்யம்பெருமாள் உடையார்;
அருளும் பொருளும் உடையார்!

மதுரகானங்களை வழங்கிய-
மருதகாசியின் மாதா-
மிளகாயி அம்மாள் - எனும்
மாதரசி; நல்ல-
மக்களைப் பெற்ற மகராசி!

'வெளுக்காத சாயம் -
விவசாயம்!' என-

ஓர்ந்த குடும்பத்தில்
உதித்தாலும்-
மருதகாசி கல்லூரி புகுந்தார்;
மொழியறிவு மிகுந்தார்!

நாடறிந்த-
நல்ல எழுத்தாளர்...
தி. ஜானகிராமனைத்
தனது-
கல்லூரி நண்பராய்க்
கொண்டவர் மருதகாசி;
இருவரும்-
இயல் இசைத் துறையில்-
பிறங்கினர்-
பின்னாளில் புகழ் வீசி!

●●●



வர்ண மெட்டுக்கு-
வார்த்தை வழங்குவதில்...

மருதகாசியை
மிஞ்சியவர் இல்லை;
இசையின்
இனிமைக்கேற்ப-
தேடித்
தேடிப்-
போடுவார்-
பொருத்தமான சொல்லை!

உண்மையை-
உரைக்கப் போனால்...

வர்ண மெட்டு என்பது
வெறும் சவம்; அதற்கு-
வார்த்தையால் - உயிர்
வழங்க வேண்டி...
கவிஞன் - மேற்
கொள்ளுவான் தவம்!

●●●

மருதகாசியை-
மறவாது தரணி; அவரது-
மாண்புகளை - தன்
மணித்தமிழால் காத்துவருகிறார்-
மகன்-
மருதபரணி!

## 54. கவி. கா.மு. ஷெரீப்



சீறாப்புராணத்திற்கு
சீராக ஒரு திறனாய்வு-
செய்தவர்;
நன்னெறிகளை
நற்றமிழில் நெய்தவர்;

நூல்கள்;
நாடகங்கள்;
கவிதைகள்;
காவியங்கள்;
என-
எல்லாவற்றிலும்-
அடைமழையென - தன்
ஆற்றலைப் பெய்தவர்;

பண்பால்;
பரிவால்;
நண்பால்;
நல்லியல்பால்;

அனைவர் நெஞ்சங்களையும்-
அநாயாசமாகக் கொய்தவர்!

●●●

கா.மு. ஷெரீப் - தேர்ந்த
கவி; அவரது-
பல
பாடல்களுக்கு - நன்கு
பரிச்சய மானதுதான்
பூந்தமிழர் செவி!

எல்லாப் பாடல்களிலும்
எளிமை யிருக்கும்;
அதே நேரத்தில்-
அவற்றின்-
இறைச்சிப் பொருளில்
இமாலய வலிமையிருக்கும்!

திரைப் பாடல்களுக்கு - ஒரு
திடம் சேர்த்தவர்;

கிராமீயம்;
கீர்த்தனம்;
பதம்;
பள்ளு;

ஆகிய இசை வகைகளில்
அவரது எழுதுகோல்...

தகத்தகாயமாகத்
துலங்கியதை-
திரையுலகம் கண்டது;
தழுவிக் கொண்டது!

●●●

கௌரி மனோகரி ராகத்தில்
கேட்ட-

'பாட்டும் நானே;
பாவமும் நானே;
பாடும் உனைநான்-
பாட வைத்தேனே!'
என்கிற-
எழிலார்ந்த கானமும்;

தேவகாந்தாரி ராகத்தில்-
தோய்த்தெடுத்த-

'ஏரிக்கரையின் மேலே-
போறவளே! பெண் மயிலே!'



என்கிற-
எடுப்பான நாட்டுப் பாடலும்;

காவடிச் சிந்து-
கிளிக் கண்ணி-
வரிசையில்
வைக்கப்பட வேண்டிய...

'இருக்கும் இடத்தை விட்டு-
இல்லாத இடமெல்லாம்-
உருக்கமுடன் தேடிடுவார்
ஞானத்தங்கமே'

என்கிற - இறையின்
ஏகத்துவத்தை
எடுத்தோதி - அறியாமையை
இடித்துரைக்கும் பாட்டும்;

கா.மு. ஷெரீப்
கவித்துவம் மிக்கவர்-
என
எஞ்ஞான்றும்-
சாட்சி சொல்லும்
சிந்துகள்;
இத்தென்புலத்தில்-
இல்லை-
இந்த-
இசைப் பாடல்கள்...

போயடையாத - செவிப்
பொந்துகள்!

'வாழ்ந்தாலும் ஏசும்;
தாழ்ந்தாலும் ஏசும்;
வையகம் இதுதானடா!' என-
வெளிச்சம்போட்டு...

மன்பதையின்
மலிவான குணத்தை-
சகலருக்கும்
சுட்டும்-

மணியான பாடலை
மறக்க முடியுமா?

இவ்வளவு
இலாவகமாக-
கவிதை - வேறொரு
கைக்குப் படியுமா?

●●●

தஞ்சைத்
தரணியில் உள்ள-

அந்த ஊரின் பெயர்
அபிவிருத்தீஸ்வரம்;

கவி
கா.மு. ஷெரீபை-
அவனிக் களித்தது
அந்த ஊர் பெற்ற வரம்!

கண்ணியம் மிக்க-
காதர்ஷா ராவுத்தருக்கும்;
புண்ணியம்மிக்க - முகம்மது
பாத்திமாவுக்கும்;

நோன்பு
நோற்றுப்-



பெற்றெடுத்த
பிள்ளையாக-

ஷெரீப்-
ஜனித்தார்; ஒரு-
தத்துவக் கவிஞராகத்
தனித்தார்!

●●●

கலைஞரின்-
கைவண்ணத்தில்-

நாடறிந்த
நாடகமாக-
மக்களை ஈர்த்த
'மந்திரி குமாரி'யை...

மாடர்ன் தியேட்டர்ஸ்
முதலாளியின்-
கவனத்திற்கு - ஷெரீப்தான்
கொண்டு போனார்;

இரட்டைப் புலவர்
எனும்படி - கவிஞர்
மருதகாசியின்
மறுபதிப்பாக ஆனார்!

திரைத்-
துறையில்-
இரண்டு கவிஞர்கள்
இணைந்து காரிய மாற்றியது-

உலக அதிசயங்களில்
ஒன்று;
ஆனாலும் அது நடந்தது-
அன்று!

●●●

ஒரு-
கால கட்டத்தில்-
கா.மு. ஷெரீப்...

ம.பொ.சியின் பால்-
மனத்தை ஈந்தார்;

எல்லைப் போராட்டத்தில்-
எழுச்சியோடு ஈடுபட்டு-
தொல்லைகளை ஏற்கும்
தொண்டர்களுக்கான-

முன்வரிசைக்கு-
முழுமனத்தோடு போந்தார்!

சிலகாலம்-
'சாட்டை' எனும்-
நல்ல ஏடு ஒன்றையும்
நடத்தினார்;
அந்த ஏடு மூலம் - மக்களின்
அறியாமையை; மடமையை;
சுட்டிறக்-
கிடத்தினார்!

●●●

கவி.
கா.மு. ஷெரீப்...

அஞ்சுவேளை-
அல்லாவைத் தொழுத-
மார்க்கத்தைப் பேணிய - நல்ல
முசல்மான்;
அவர் - தன்மானத்தில்
அசல்மான்!

-இன்னமும் இருக்கின்றார்கள்

# கவிஞர் வாலி

## சென்ற நூற்றாண்டில்,
## தமிழ் மண் தரணிக்கு வழங்கிய
## மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!

### 55. மணியம்

'உத்தரமேரூர்' - என்று
உள்ளது ஒரூர்; ஒரு-
சித்திர மேதையை
சகத்துக்குத் தந்ததால்-அவ்
ஒரூர் - ஆனது
பேரூர்!

ஆம்;
அந்த-
மண்ணில் மலர்ந்தவன்தான்-
'மணியம்' எனும் கலைஞன்;

வண்ணங்களை
வீசி - மாந்தர்தம்
எண்ணங்களை
எளிதாக...

வாரிச் சுருட்டிய
வளமார்ந்த வலைஞன்!

●●●

சுப்பிரமணியம் என்பதன்-
சுருக்கம்தான் 'மணியம்';
அந்த
அழகிய பெயருக்கேற்ப...
மணிமணியா யிருந்தது
மணியம் ஆற்றிய பணியும்;
சிந்தனையும்-
செயலும் - அவனது
விரல்கள் இடுகின்ற ஆணைக்கு-
வாய் பொத்திப் பணியும்!

●●●

'காவியம் படைப்போர்க்குக்-
காரிகை உதவும்; வண்ண-
ஓவியம் படைப்போர்க்குத்-
தூரிகை உதவும்!'

இருந்தமிழ் நாட்டில்-
இன்னணம்...
பண்டு - ஒரு பழமொழி
உண்டு!

ஒல்காப் புகழ் படைத்த -
ஓவியப் பெருந்தகை-
மணியத்தின் -
மூன்றாம்கை தூரிகை;
அந்த-
அற்புதமான...

தூரிகை கொண்டு
தொய்வின்றி - இறுதிவரை
தட்டினான் அவன்-
தனது தகவுசொல் பேரிகை!

●●●

வீரசைவர் குலத்தில்
வந்தவன்;
தன் பிறப்பால்-
தான் பிறந்த குலத்திற்கு-
தகத்தகாயமான பெருமையைத்
தந்தவன்!

உத்தமர்-
உமாபதிக்கும்;
ஞாலம் நிகர் பொறைமிக்க-

## இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்



ஞானாம்பாளுக்கும்;

அருமைப் பிள்ளையாய் -
அவதரித்தவன்;
அழகழகாய்-
அழகழகாய்-
படம் வரையும் நுண்கலையைப்-
பிறப்பிலேயே தரித்தவன்!

நீல வானமும்;
நெடிய வரைகளும்;
சோலைப் பூவும்;
சுந்தர வனங்களும்;

மேலைத் திசையின்-
மஞ்சள் வெயிலும்;
காலைப் பொழுதின்
கண்கவர் வனப்பும்;

காஞ்சிப் பல்லவர்-
குடைவரைச் சிற்பமும்;
புத்தர் காலத்துப்
புகழ் பேசும் சித்திரமும்;

'என்னை வரைக!
என்னை வரைக!' என்று...

மணியம் என்னும்
மாபெரும் ஓவியனின் -
தூரிகை முன்னே -
தவம் செய்து நின்றன;
அவற்றின் மேல் -
அவனது...

விழியும்
விரலும் மேய்ந்ததால்-
அவையெலாம்
அழகிய சித்திரங்களாகி -
இறவாது-
இன்றளவும் காலத்தை வென்றன!

●●●

வையமிசை-
வாழ்ந்த ஓவியரெல்லாம் - தாம்
வரைந்த படங்களுக்கு-
விழிதிறப்பர்;
விழிதிறக்கும் - அவ்
வித்தையிலே சிறப்பர்!

ஓவிய வேந்தாம் - மணியம்
ஒருவன் தான்...

தான் -
தன் தளிர் விரலால்-
வரைந்த படங்களுக்கு-

வாய் வைத்தான் ; வாய்க்குள் -
வார்த்தையும் வைத்தான்!

ஆம்!
அவை-
வாய்விட்டு-
வார்த்தை பேசின;
உயிர்த்து
உலவி-
உலகின் கண்-
ஓவாப் புகழ் மணம் வீசின!

'நிஜந்தான்' எனும்படி-
நின்றன - அவன் வரைந்த
அஜந்தா ஓவியங்கள்;
அவை சித்திரக் காவியங்கள்!

எல்லோராலும்-
ஏத்தப் பெற்றன - அவன் வரைந்த
எல்லோரா ஓவியங்கள்; அவை-
ஏற்றன அவனால் சீவியங்கள்!

●●●

சித்திரம் வரைவதை-தன்
சிறிய தந்தையார் லிங்கையாவிடம் -
அவன்-
ஆதிநாள்களில்...

பொழுதும்-
பழுதறக் கற்றான்;
'எஸ். ராஜம்'
எனும்-
வீணை பாலசந்தரின்
உடன் பிறப்பை - தன்

சிற்பியிடம் பயிலும்-
சக மாணவனாக உற்றான்!

ராஜத்தின் தந்தையார்தான்-
ரா. கிருஷ்ணமூர்த்தியிடம்-
மணியத்தைச் சேர்த்தார்; அவனது-
முன்னேற்றத்திற்கு நீர் வார்த்தார்!

●●●

'கல்கி'யின்-
காலத்தை வென்ற படைப்பான...
'பொன்னியின் செல்வ'னுக்குப் -
புகழ் சேர்த்தன-
மணியத்தின்
மகத்தான படங்கள்;

நம் -
நெஞ்சங்களில்-இன்றளவும்
நீங்காமல்
நிற்கின்றன...

அந்தப் படங்கள் -
அன்று பதித்த தடங்கள்!

●●●

படத்துறையிலும் - மணியம்
பங்கு பற்றினான்;
'பார்த்திபன் கனவு' எனும்-
படத்திற்கு...

அவன்-
ஆர்ட் டைரக்டராகி-
கலைத்தாயின்
கழுத்தில்-
ஒரு-
புதிய பூமாலையைச் சுற்றினான்!

●●●

மணியம் - என்னும்
மகத்தான சித்திரக்காரன்...

நாற்பத்தைந்தாம் வயதில்-
நானிலம் நீங்கினான்; பின்-

காலனும்
கைவைக்க முடியாத-
புகழுடம்பை - அந்தப்
பெருமகன் தாங்கினான்!

சர்க்கரை - அவனைச்
சாப்பிட்டது;

அல்ல! அல்ல!
அமரருலகம்...
வண்ண ஓவியம்-
வரைய அவனைக் கூப்பிட்டது!

●●●

ஒப்பரும் புகழுடைய - அந்த
ஓவியன்...

வாழ்கிறான் இன்றும்-
வெண்திரைக் கடல் சூழும்-

லோகத்திலும்; தன் செல்வன்-
லோகநாதனின் தூரிகையிலும்;
மணியம் செல்வன்-
முழக்கும் புகழ் பேரிகையிலும்!

## 56. மாலி

தஞ்சை மாவட்டம்
தரணிக்குத் தந்த-
பல்வேறு
புதையல்களில்...

'மாலி' - ஒரு
மாசறு பொன்;
ஆரும்
அவன் போல்-
புதுமைகள்
புரிந்ததில்லை...

ஓவியத் துறையில் - அந்த
ஒருவனுக்கு முன்!

'கிச்சுகிச்சு' மூட்டினாற்போல் -
தன்
'கேரிகேச்ச'ரால் -
அவன்
அனைவரையும் சிரிக்க
வைத்தவன்;
சிரிக்க மாட்டேன் - என
விரத மிருந்த - பலரது
வாயிதழ்களையும் - முகை
வெடித்தாற்போல் விரிக்க
வைத்தவன்!

'கேரிகேச்சர்' என்பது-
கேலிச்சித்திரமாக-
அதீத நகைச்சுவை-
அதன்மூலம் வெளிப்படும்படி-
வரையப்படுவது - என

விளக்குகிறது-
ஆங்கில அகராதி; அவன்-
அறிந்திருந்தான் அதன் அந்தம் ஆதி!

மாபெரும் ஓவியன்
மாலி; மாலிக்குக்
கைவந்த கலை-
கேலி; கேலிக்கு-
வளைபவருண்டோ - ஒரு
வேலி; வேலிக்குள்-
அடைக்க
ஆகாத -
அவனது
அரும்புகழ்-

மாலியின்-
மகுடத்தில் செருகியது மயிற் பீலி!

●●●

ஆரம்பத்தில்
அவன் - ஓர்
ஆங்கில ஏட்டில்தான்-
ஆற்றினான் பணி;

வாசன்தான் - அவனை
வருந்தி அழைத்து வந்தார்;
விலகியது-
விகடனைச் சூழ்ந்திருந்த...

ஒருவகை-
வெறுமைப் பனி!

நோய்விட்டுப் போகுமளவு
நற்றமிழ் நாட்டார் - அவனால்
வாய்விட்டுச் சிரித்து - தம்
வாழ்வில்- புது
வசந்தம் கண்டனர்; விகடனை-
விரும்பி ஏற்றுக் கொண்டனர்!

கரிய
கோடுகளால்-
பெரிய தலைகளை - அவன்
படமாக்கினான்;

'கொல்'லென்று - வயிறு
குலுங்க - அந்தப்
பெரிய தலைகளே சிரிக்கும்-
பக்குவத்திற்கு இடமாக்கினான்!

●●●

மூதறிஞர் ராஜாஜியை
மாலி வரைந்தால்...

அரைது-
அழகிய-
கிளிமூக்கு - நம்
கையைக் குத்தும்;

குடுமி;
கடுக்கன்;
இவற்றோடு - அரியக்குடி
இராமானுஜ அய்யங்கார்-

பொடிபோடுவதை - மாலி
படமாகப் போட்டால் - அதன்
நெடி - நமது
நாசிகளுக்கும் தொத்தும்!

ஒன்றா? இரண்டா?
உதாரணம் காட்ட?

ஆண்டவன்-
அந்த...

ஒப்புமை இல்லா-
ஓவியனை-
மண்மிசை படைத்ததே-
மன்பதைக்கு-

சதா-
சிரிப்பு மூட்ட!

●●●

கோடுகளைக்
கொண்டு - அவன்
போடு போடு என்று
போட்டான் -

கருத்தாழம் மிக்க-
கேலிச் சித்திரங்களை;
ஆரிடமும் -
அடியேன் கண்டேனில்லை-
அவனிடம் கண்ட
அபாரமான அத் திறங்களை!

புலியைப் பார்த்துப் -
பூனை சூடு
போட்டுக் கொண்டது போல்...

ஆரம்பகாலத்தில் - ஓர்
அரைகுறை ஓவியனான நான்-



மாலிபோல் ஆக விரும்பி-
வாலி ஆனேன்; பின்-
காலத்தின் கட்டளைக் கேற்பக்-
கவிஞனாகிப் போனேன்!

●●●

ஒற்றைக் குடுமியோடு பிறங்கும்-
விகடன் தாத்தா; கதர்க்-
குல்லா யணிந்து- அவரொடு
கூட உலவிய குரங்கு நிருபர்;
ஜெமினியின்
ஜெயத்திற்குக் காரணமான-

குழலூதும் - இரு
குழந்தைகள்;
அந் நாளில்
ஆகாயம் தீண்டுமளவு-
வைக்கப் பெற்ற
வாசனின்
திரைப்படக் 'கட்அவுட்'டுகள்;

எல்லாம் - மாலி
எனும் -
சிரஞ்சீவி ஓவியனின்
சிருஷ்டிகள்;

ஆதலால்தான் -
அவன் -
வாழ்ந்த நாள் வரை-
விடாது - அவன் மீது
பெய்தன - பெரும்
பாராட்டு விருஷ்டிகள்!

●●●

'மாலி'யை -
மற்றொரு கலைவாணர் என்றால்-
நான் செப்பும் - இவ்
வெண்மையை
நானிலம் ஒப்பும்!

கலைவாணர் ஒருவர்தான்-
கிஞ்சித்தும் காழ்ப்பின்றி...

தான் சார்ந்திருந்த
துறையிலேயே -
நிறைய
நகைச்சுவை நடிகர்களை-

உண்டாக்கினார்; அவர்களை-
உளமார ஊக்கினார்;
அவர்தம் வறுமையை-
அறவே நீக்கினார்!

அஃதேபோல்-
அடடா!

மாலியும் - ஒரு
மகத்தான மனிதன்; புனிதன்

தனக்குத்
தகவு தந்த-
ஓவியத் துறையிலேயே - பலர்
உட்கார இடம் கொடுத்தான்;
அவர்களுக்குள் இருந்த
ஆற்றலை-
அவனே - புதையல் போல்
அகழ்ந்து எடுத்தான்!

கதர் ஜிப்பா அணிந்து-
கால் முளைத்து உலவிய-
கண்ணியம்; அவன்
கலைத்தாய் செய்த புண்ணியம்!

●●●

பல-
படங்கள் வரைந்த அவனே-
படமாகிப் போனான்;
ஆயினும்-
அம்புவியில்-
நிரந்தரமானவர்களின்
நெடிய வரிசையில்....

ஓவிய மேதை மாலியும்-
ஒருவன் என்று ஆனான்!

- இன்னமும் இருக்கின்றார்கள்...

# கவிஞர் வாலி

## சென்ற நூற்றாண்டில்,
## தமிழ் மண் தரணிக்கு வழங்கிய
## மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!

### 59. புரட்சித் தலைவர்

'ஏழு வள்ளல்கள் -
ஏட்டிலும் பாட்டிலும் -
இருந்தது முன்னாலே;
எங்கள்
மன்னவன் வந்தான்-
மற்றவ ரெல்லாம் -
இவனுக்குப் பின்னாலே!

என்று நான் - ஒருமுறை
ஏத்தியது நிஜம்;
ஆம்;
அனேகருக்கு -
வழங்கி வழங்கி
வீங்கியிருந்தது அவன் புஜம்!

இல்லார்க்கு ஈவதில் - அவன்
இன்னொரு பேகன்;
நடிப்பிலிருந்து - பதவி
நாற்காலிக்கு வந்ததில் -
இப் புவிமிசை - அவன்
இன்னொரு ரொனால்டு ரீகன்!

●●●

அவனை -
அறியு முன்...
வான்புகழ்
வெண் திரையில் -
அடியேன் வரைந்ததுண்டு
அனேக வரிகள்;

ஆயினும் -
அவன் பொருட்டு - நான்
எழுதிய முதல்வரி -
எனக்குத் தந்தது முகவரி!

ஆம்!
அவனது - மன
விசாலம் - தந்ததெனக்கு
விலாசம்!

அவன் -
அம்பு கொண்டு -

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்



வாலியை
வீழ்த்திய இராமச்சந்திரன் அல்ல;

அவன் -
அன்பு கொண்டு -
வாலியை -
வாழ்த்திய இராமச்சந்திரன்!

அதுமட்டுமல்ல;
அவன்...
இந்தியாவில் பிறந்து -
இலங்கை சென்ற -
இராமச்சந்திரன் அல்ல;

இலங்கையில் பிறந்து -
இந்தியாவிற்கு வந்த -
இராமச்சந்திரன் !

அந்த இராமச்சந்திரன் -
ஆதியில்...

மன்னனாயிருந்து -
பின் நாடோடி யானான்;
இந்த இராமச்சந்திரன் -
இளமையில்...
நாடோடி யாயிருந்து -
பின் மன்ன னானான்!

●●●

கோபால மேனன் - எனும்
குண வானுக்கும்;

சத்திய பாமா - எனும்
சகதர்மிணிக்கும்;

பிள்ளையாய்ப்
பிறந்தவன் -
எம்.ஜி.ஆர். என
எல்லோராலும் விளிக்கப்
பெற்ற...

பெருமகன்; வெற்றித் -
திருமகன்;
ஓர் ஆயிரத்தில் -
ஒரு மகன்!

அவனது -
ஆரம்பம்...

மூன்று தமிழ்களில்
மூன்றாம் தமிழான நாடகத்தில்;
அதன்வழி
அவன் புகுந்தான் -
மெல்ல மெல்ல
மன்பதையின் நெஞ்சகத்தில்!

காளி. என். ரத்தினம் -
குரு;
அவர் -
அந்நாளில் இட்ட எரு -

உண்டு
உயர்ந்தது -
எம்.ஜி.ஆர்.
என்னும் தரு!

முதன் முதல் - அவன்
முகம் காட்டிய படம்...

பலர் வாழ்வுக்குப் -
பிள்ளையார் சுழி போட்ட -
சினிமா எனப் பேசப்பெற்ற -
சதி லீலாவதி;

அதன்பின் -
அந்திம காலம் வரை -
அவனது புகழ்
ஆகவில்லை காலாவதி!

●●●



அறிஞர் பெருந்தகை
அண்ணாவின் -

இதயக்கனியாக
இலங்கியவன்;

தொய்வடையாத கீர்த்தியொடு -
துலங்கியவன்!

பெரும் பெயரைப் -
பெற்றுத் தந்த படங்கள்...

மந்திரிகுமாரி;
மலைக் கள்ளன்!

இந்தப் படங்களில் - அவன்
இயம்பிய உரையாடல்களை...

மாந்தர் செவிகள்
மாந்தின - அடடா!
முத்தமிழ்த் தேனா என்று!
அந்தத் தேனை
அருளியது -
கலைஞர் பெருமானின்
கைப் பேனா அன்று!

●●●

'புரட்சித் தலைவர்'
'பொன்மனச் செம்மல்'
'மக்கள் திலகம்'
'இதய தெய்வம்'

இவை யெலாம் -
இருந்தமிழர் உலகம்...

அவனுக்கு -
அளித்த பட்டங்கள்;
ஆயினும்
அவன் -
இத்தகு பட்டங்கள் பெற
இளமை முதல் -
ஏற்க நேர்ந்தது
எத்துணையோ கட்டங்கள்!

துன்பத்தில் பிழைத்தான்;
துப்பாக்கியில் பிழைத்தான்;

இத்துணை
இடுக்கண்களின்
இடையே - அவன்
இறவாது பிழைக்கக் காரணம்...

அவன் - இடையறாது
அறங்கள் இழைத்தான்!
அனேகருக்கு - அவன்
அன்ன மிட்டவன்;
அடித்தட்டு மக்களின்
அன்பு மனங்களைத் -
தனது -
தருமத்தால் கன்னமிட்டவன்!

●●●

ஏற்ற வேடங்களுக்கெல்லாம்
ஏற்றம் தந்தவன்;
இயல்பான நடிப்புக்கு -
இலக்கணமாய் வந்தவன்!

'பெற்றால்தான் பிள்ளையா?' எனும்-
பேசும் படம் - அவன்
பெருமையை - இன்றளவும்
பேசும் படம்!

சரித்திர வேடங்களில் - அவன் போல்
சாதித்தவ ரில்லை;
மதுரை வீரனாகவும் -
மன்னாதி மன்னனாகவும் -



அடிமைப் பெண்ணின்
அன்புக்குரிய அழகனாகவும்;

விளங்கி - நடிப்புக்கு
வகுத்தான் புதிய எல்லை!

●●●

அவனை -
அந்தகன் வெல்லவில்லை;
அவன்தான்
அந்தகனை வென்றான்;
ஆதலால் தான் -
அவன் -
இறந்தும் - இன்றளவும்
இறவாது நின்றான்!

தமிழ்த்
திரையில்...

என் -
ஏற்றம் -
அவன் தந்த பிச்சை;
அதைச் சொல்ல எனக்கில்லை
லச்சை!

## 60. நடிகர் திலகம்

**ஆ**தவன் ஒளிச்சிறப்பை - சிறு
அகல் புகல்வது போல்;
பல -
நூதனக் கலைவனப்பை - விழி
நோயுளான் நுவல்வது போல்;
குல -
மாதரார் பிள்ளைப் பேற்றை -
ஒரு
மலடிதான் மொழிவது போல்;

ஒரு -
மேதையாம் சிவாஜி
மேன்மை - ஒரு
பேதையான்
பேசப் போமோ?

●●●

சுதந்திரப் போர்வீரர் -
சின்னையா மன்றாயர்;
அரிவையர்க்கோர் அணியாம் -
அன்னை ராஜாமணி அம்மையார்;

இருவரும்
இருந்த நோன்பின் பயனாய்...

மண்மிசை தோன்றினான் - ஒரு
மாபெரும் நடிகன்;
முன்னும் இல்லை -
பின்னும் இல்லை - அந்த
உயரிய நடிகனை
உவமிக்க ஒருவன்!

அவனை -
அவனிக்கு அளித்ததால்...

விழுப்புரம் - புகழ்
விழாப்புரம் ஆனது;

வெண்திரை
வரலாற்றில் -
அந்த
அழகிய ஊர்...

தமிழர்க்கு - ஒரு
திருத்தலமாகிப் போனது!

●●●

தண்ணீர் மேகம்
தாழப் பறக்கும் -
கொடைக் கானல்



குறிஞ்சி போல்;
பன்னிரு ஆண்டுக்கொரு
முறை -
பூப்பவனல்ல அவன்;

திருக்குடந்தைத் -
திருக் குளத்தில் -
நன்னீராடி -
நாட்டோர் நற்கதி பெற -

ஆறிரு ஆண்டுக்கொரு முறை-
அலரும் மகாமகம் அல்ல
அவன்;

ஒருநூறு ஆண்டுக்கு -
ஒருமுறை...

வாராது வரும்
மாமணியாய்; தெய்வம் -
தாராது தரும்
தனிக் கொடையாய்...

நம்மிடை வந்து -
நாளும் உலவிய நாமகள்
மகன்!
அவனிலும் மேலாய் -
ஆருளர்...

தமிழுக்குத்
தன் உச்சரிப்பால் -
தகத்தகாயமாய் - ஒரு
தகவு சேர்க்க?
அவனிலும் மேலாய் -
ஆருளர்...

வல்லினம் மெல்லினம்
வாய்த்த மொழியை -
நறவத்தில் தோய்த்து -
நம் செவிகளில் வார்க்க?

சிவாஜிபோல் - ஒரு
சிம்மக்குரல் -
வாய்த்தார் - இவ்
வைய மிசை உண்டோ?

கசடதபற கூட - அவன்
கர்ச்சிக்கையில்...
'அடடா!
அவ் வோசை -
பனங் கற் கண்டோ? வெல்லப்
பாகுதரும் கரும்புத் துண்டோ?'
என
எவர் கிறங்காதார்?
வாய்வழி - அவன்
வழங்கும் வசனங்களைக் -
கேட்டுக்
கேட்டு...

பித்தராய் - உன்
மத்தராய் எவர் பிறங்காதார்?

●●●

பள்ளியில் - அதிகம்
பயிலாது போனான்;

பின்னாளில் - அந்தப்
பெருமகன் -
கால்முளைத்த - ஒரு
கல்லூரி ஆனான்!

அகில உலகத்தில்
அதிக மொழிகள் -
அறிந்தவை



அவனது விழிகள்!

கேமிரா லென்சில் -
கசியும் ஈரம்...

அவன்
அவலக் காட்சியில் நடிக்கையில்;
அண்ணன் தங்கை பாசத்தில் -
அவன் அலறித் துடிக்கையில்!

கச்சா ஃபிலிம் - எனக்
கூறப் படும்...

படச்சுருள் -
பெருமை பெற்றது - அவனது
பாவங்களைப்
பதிவு செய்வதில்;
தமிழ் சினிமா
தலைகனத்து நின்றது - அவன்
தயவால்
தான் உய்வதில்!

ஆம்!
அனேக ஆண்டுகளாக...

குடல்
கழுவப் பெறாமல் - ஒருவகை
மலச்சிக்கலில்
மாட்டிக் கொண்டு முழித்தது ...

தமிழ் சினிமா; அவன்தான் -
தந்தான் அதற்கு இனிமா!

●●●

கட்ட பொம்மனை;
கப்பலோட்டிய தமிழனை;
கர்ணனை; முண்டாசுக்
கவிஞனை;
சோழனை;
சேக்கிழாரை;
பரதனை;
பசும்பொன் தேவரை;

என -
எத்துணையோ பேர்களை...

உயிர் கொடுத்து
உலவச் செய்தவன்;
கல்லறையிலிருந்து - எழுப்பிக்
காட்டிய பெருமகன்;

எவராலும்
எழுப்ப முடியாதபடி -

உறங்கிப் போனதால் -
உலகு அழுதது; தன்னை -
ஒழுங்காய் உச்சரிக்க -
ஒருவரும் இல்லையே என -
ஒண்டமிழ் அழுதது!

ஆயினும் -
அவன்...

நாமும் -
நாடும் -
அழுவதற்காகப் பிறந்தவனல்ல;
தொழுவதற்காகப் பிறந்தவன்!

- இன்னமும் இருக்கின்றார்கள்...

ஆசிரியர் : ராவ். அச்சிட்டவர் : எஸ். பிச்சை. பதிப்பாளர் : பி. வரதராசன். குமுதம் பப்ளிகேஷன்ஸ் (பி) லிமிடெட், 151, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, சென்னை-10ல் அச்சிடப்பட்டு வெளியிடப்படுகிறது.

இந்த நூற்றாண்டுக் கணக்கில் -
இப்பொழுது...
வந்திருப்பது -
வருடம் ஆறு;
வாரியார்க்கு -
வயது நூறு!

○○○

இலண்டனிலிருந்து
இந்தியாவை நோக்கி...
வருகிறது - அந்த
வான ஊர்தி;
வான ஊர்திக்குள்
வாரியாரெனும் ஞான ஊர்தி!

○○○

நீள்விசும்பு விட்டு
நிலம் வந்து சேருமுன்பே...
அருள்மொழி
அரசு - என
ஆராதிக்கப் பெறும் - அவ்
ஆன்மிக வெயிலை...
அடி பணிந்து
அந்தரத்திலிருந்தே -
அந்தகன்
அழைத்துப் போகிறான் கயிலை!

○○○

ஆம்; ஓர்
அலகு இலாத -
கீர்த்தி வாய்ந்த
கிருபானந்த வாரியார் ஸ்வாமி...

தமிழ் மண் - செய்த
தவம்;
தரையிறங்கித் -
தாள் கொண்டு நடந்த சிவம்!

○○○

ஊர்
ஊராய்க் -
கோயில்
கோயிலாய்ச் சென்று...
ஆற்றினார் சொற்பொழிவு;
அவருக்கில்லை சொற்ப ஒழிவு!

○○○

வீணை;
வேதம்;
வடமொழி;
தென்மொழி;
அனைத்தும் அவர்க்கு -
அத்துப்படி;
அவற்றைக் கொண்டு
அவர் -
அன்றாடம்
அளந்து தருவார்...
பக்தி அமுதம்
பத்துப்படி!

○○○

வயலூர்;
வடலூர்;
அவர் ஆற்றிய
அருட் பணிகளுக்குச் சான்று;
நெஞ்சே! அவர்
நினைவை உன்னுள் ஊன்று!

○○○

இன்றைய
இளைஞனே!
வாரியாரை
வாங்கிப் படி; அதுதான்
வெற்றிக்கு
வாயிற் படி!●

வாரந்தோறும் வாலி


வாரியாருக்கு
வயது
நூறு

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

## கவிஞர் வாலி

### 61. பட்டுக்கோட்டை

'குட்டி ஆடு தப்பிவந்தா -
குள்ளநரிக்குச் சொந்தம்;
குள்ளநரி மாட்டிக்கிட்டா -
குறவனுக்குச் சொந்தம்;
தட்டுக் கெட்ட மனிதர் கண்ணில் -
பட்டதெல்லாம் சொந்தம்;
சட்டப்படி பார்க்கப் போனா-
எட்டடிதான் சொந்தம்!'

நீர்க்கோலம் அனைய - வாழ்வின்
நிலையாமையை -
இதனிலும் இயல்பாய்
இன்னொருவர் இயம்பப் போமோ?

இதை
இயம்பியவன் -
பட்டுக்கோட்டை; பாதம் முளைத்த-
பாட்டுக் கோட்டை!

●●●

தொடக்கத்தில் -
திராவிடர் கழகத்திலும்;
பின்னாளில் -
பொதுவுடைமைக் கட்சியிலும்;

சேர்ந்திருந்து -
சார்ந்திருந்து -
மேடைதோறும்
முழங்கியவன்;

பண்டிதத் தமிழைப்
பாமரப் படுத்தி -
பாரதிக்குப் பின் -
பாரோர்க்கு வழங்கியவன்!

அவனுக்கு -
அவ்வளவாக இல்லை
பள்ளிப்
படிப்பு;
ஆயினும் -
அகலமாக ஆழமாகப் -

படித்தவனின்
பாட்டில் இல்லை -
பட்டுக் கோட்டையின்
பாட்டில் இருந்த உயிர்த் துடிப்பு!

அவன்
அசாதாரணமாகச் சிந்தித்த -
சாதாரணன்; ஆனால் -
சாகித்யக் கலையில் பூரணன்!

●●●

தஞ்சைத்
தரணியில்...

பட்டுக்கோட்டைக்குப்
பக்கம் உள்ள -
'செங்கம்படுத்தான் காடு' - அவன்
சனித்த ஊர்; வந்தவன் -
வந்த வேகத்திலேயே -
வானம் திரும்பியதால் -
விம்மி வெதும்பி வெடித்து -
விழிகள் பனித்த ஊர்!

நீர் பிடித்த
நிலத்தில் - நாளும்

**சென்ற நூற்றாண்டில்,
தமிழ் மண் தரணிக்கு வழங்கிய
மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!**

ஏர் பிடித்து வாழும்
ஏரார்ந்த விவசாய மரபில்...

அருணாசலம் என்னும் -
ஆசுகவிக்கும்;
விசாலாட்சி என்னும் -
வஞ்சியர்குல திலகத்திற்கும்;

இரண்டாம் மகவாக - நிலம்
இறங்கினான்...

கல்யாண சுந்தரம் - எனும்
கவிதைக் கனல்; நம் -
நெஞ்சவயல்களில் பாய்ந்த -
நற்றமிழ்ப் புனல்!

●●●

கோடம்பாக்கத்தில் - அவன்
கோலோச்சியது...

அஞ்சு ஆண்டுகள்
இருக்கலாம் -
அதிகப் பட்சம்;
ஆயினும் -
அவ்வளவு குறுகிய காலத்தில் -
ஆரும் தொடவில்லை -
அவன் தொட்ட புகழ்உச்சம்!

பட்டியல் போட்டு - அவனது
பாட்டுகளைக் காட்டுவது...

அவ்வளவு
அவசிய மல்ல;
எதை விட?
எதைச் சொல்ல?

எழுதிய பாட்டெல்லாம் -
ஏற்றம் மிகுந்தவை;

எல்லாமே -
எல்லாமே -
பொக்கிஷம் என்று -
போற்றத் தகுந்தவை!

எங்கு கிள்ளினாலும்
இனிக்கும் வெல்லக்கட்டி;
அதை -
இப்பக்கம் அப்பக்கம் - என
இயம்புவதுண்டோ விரலால்
சுட்டி?

பட்டுக் கோட்டை -
பாடிய பாட்டெல்லாம் -
திருக்குறள் போல் -
தெருக்குறள் ஆயின;
அவனால்தான் -
சமூக -
சிந்தனைகள் -
சிந்துகளாகி - நம்
செவிக்குள் போயின!

உயரமானவன் -
உருவத்திலும் உள்ளத்திலும்;
மேட்டுக்குடிக்கு
மட்டுமல்ல; அவன்
பாட்டு -
போய்ச் சேர்ந்தது பள்ளத்திலும்!

விழுந்து கிடந்தோர்
எழுந்தார்;
அவனது பாடலை
ஆர் செவிமடுத்தாலும் -
அவர் மறுபடியும்
அடிமைக் குழியில் அழுந்தார்!

கம்யூனிஸ்டுக் -
கட்சியின்...

ஜீவநாடிகளில் ஒருவரான -
ஜீவா-அவனைப்
பெரிதும்
போற்றினார்; அந்தப்
பெருமகன்தான் - அவனைப்
புகழேணியில் ஏற்றினார்;

செங்கொடி பறந்த
சபை தோறும் -
ஜீவாதான் - அவனது
சீர்த்தியைச் சாற்றினார்;
பட்டுக் கோட்டை - எனும்
பசிய விதை - ஒரு
விருட்சமாக வளர - அவர்தான்
வேரில் உற்சாக நீரை ஊற்றினார்!

●●●

அவன்
அடிநாளிலிருந்தே -

பாரதியை நேசித்தான்;
பாரதிதாசனை வாசித்தான்;
பிறகு - சுயமாகப்
பாடல் புனைய யோசித்தான்!

நாடகங்களில்
நடித்தான்; அவற்றின் -
காட்சிக் கேற்ப -
கவிதைகள் வடித்தான்!
சுதேசிக்கவி எஸ்.டி.சுந்தரமும்;
சக்தி கிருஷ்ணசாமியும்;
அவனை -
ஆதரித்தனர்;
அவன் எழுத்தை -
ஆராதித்தனர்!

●●●

கடைசி வரையில் - தன்
கவுரவத்தைக் கடுகளவும் -
கைவிடாது காத்த -
கல்யாண சுந்தரம்...

திடுமென-ஒருநாள்
தனது -
கைத்தலம் பற்றிய
கவுரவம் அம்மாளைக்
கைவிட்டான்; கைக்குழந்தையோடு-
கைம்மையில் இட்டான்!

ஆம்!
அகவை இருபத்தொன்பதில் -
அவன் -
ஆகாயம் போனான்;
கடவுள் -
கல்நெஞ்சன் ஆனான்!

## 62. கண்ணதாசன்

'காட்டுக்குள் - தேனீக்கள்
கூட்டுக்குள் வைத்ததைப் -
பாட்டுக்குள் வைத்தவன்!'

என்று நான் -
ஏத்தித் தொழும் கவியரசு;
எட்டுத் திசையும்
எட்டுமாறு -

கொட்டி முழக்கினான் -
கவிதை முரசு!

சிறுகூடற்பட்டியில்
சின்னதாய் ஊற்றெடுத்து -
சிகாகோவில்
சங்கமித்த ஜீவநதி;

சட்டை வேட்டியொடு
சபையேறி நின்று -
சந்தமிகு செந்தமிழ் மழையை -
சந்ததம் பெய்த சரஸ்வதி!

●●●

நல்லான் செட்டியார் என்னும்-
நகரத்தார் மரபில்...

சான்றாண்மை மிக்க -
சாத்தப்பச் செட்டியாருக்கும்;
வைதேகி அனைய மாதரசி -
விசாலாட்சி ஆச்சிக்கும்;

தமிழ் செய்த
தவமாக - இத்
தரணிமிசை
தோன்றிய திருமகன் -

கண்ணதாசன் - எனும்
கவிஞர் கோமான்;
பூந்தமிழர் நெஞ்சமெலாம்
புகுந்து - நிரந்தரமாய்
ஆண்டாண்டு காலமாய்
ஆளப்பிறந்த பூமான்!

பெற்றோர் - அந்தப்
பெருமகனுக்கு -
முதலில் இட்ட பெயர் -
'முத்தையா'; 'தாய் -
முழுகாதிருந்து - எடுத்த
முத்தய்யா!' - என...

ஆச்சிகள்
ஆராரோ பாடினர்;
உச்சி முகர்ந்து

உவகை வெள்ளத்தில் ஆடினர்!

●●●

காலம் - அவனைக்
கவிஞனாய்ச் செதுக்கியது;

நாட்பட
நாட்பட -
நாத்திகத்திலிருந்து - அவன்
நெஞ்சை அது ஒதுக்கியது!

ஆத்திகர்களின் -
அன்புக்குப் பாத்திரமானான்;
பக்தர்கள் -
பின்பற்றும் சாத்திரமானான்!

●●●

'தாடியில்லாத தாகூர்;
மீசையில்லாத பாரதி!'

என நான்
எழுதினேன் ஒருமுறை;
அவனைப்பற்றி
அன்னணம் நான் குறிப்பிட்டதை -
ஆக்கத்தோடு
அவன் மறுத்தான் அனேக முறை!
அடடா!
அவனிடம் -
கண்டேன் தமிழ்கனம்;
காணேன் தலைக்கனம்;

முளைத்து
மூன்று இலை விட்டவுடன் -
தருக்கும் செருக்கும்
ததும்பி நிற்பார் இடையே -

அவன் -
அக்கன்னாபோல் தனித்து
நின்றான்;
ஆதலால்தான்
அநாயாசமாய்த் தரணியை
வென்றான்!

●●●

அந்த
அரிய கவிஞன்...

கைநழுவி மண்ணில் விழுந்த -
கண்ணன் புல்லாங்குழல்;

அவன்
அருளிய -
கவிதைப் பூக்களை
காதல் பொங்க...
வாங்கி வாங்கிச் சூடிக்
கொண்டது -
வண்ணத் தமிழ்த் தாயின்
வார்குழல்!

தமிழைத்
தித்திக்க வைத்தான்;
தமிழால்
தமிழ்த் தாய்க்கு ஆடை
தைத்தான்;
தமிழன்னை
திருமேனி தளர்ந்தால் -
அக்கணமே
அவனும் தன்மேனி எய்த்தான்!

●●●

அருந்தமிழ் - அவனுக்கு
அறிவாடை உடுத்தி விட்டது;
அரசியல் - அவ்வப்போது
அதை அழுக்குப்
படுத்திவிட்டது!

காலத்தின்
கையில் -
அடிக்கடி
அவனொரு பந்தானான்;
ஆயினும் -
அவன்...

புதுப்புதுச் சிந்துகளைப்
பிறப்பிக்கும் விந்தானான்!

படக்கொட்டகை - அவனால்
பாடல்பெற்ற ஸ்தலமானது;
வெள்ளித் திரை - அவனால்
தங்கத் தமிழுக்குத் தவிசாகிப்
போனது!

சினிமாப் பாடல்களுக்கு
- அவன்தான்
சமூக அந்தஸ்தைப் பெற்றுத்

தந்தவன்;
எம்மனோர்க்கெல்லாம் -
எந்தச் சூழலுக்கு -
எப்படி எழுத வேண்டும் -
எனக் கற்றுத் தந்தவன்!

தாலாட்டுப் பாடல்களில் -
அவன்
தாய்க்குலத்தை மிஞ்சினான்;
கொஞ்சு கொஞ்சென்று -
தமிழைக்
குழந்தைபோல் கொஞ்சினான்!

தத்துவப் பாடல்களைத்
தருவதில் - அவன்
சித்தர்களை
சாப்பிட்டான்;

காதல் பாடல்களை
கவனம் செய்வதில் - அவன்
சங்ககாலப் புலவர்களையும்
சவாலுக்குக் கூப்பிட்டான்!

மெல்லிசைப் பாடலுக்கு -
மேன்மையான

இலக்கிய முலாமை
இனிதே பூசினான்;

பாமரனும் - அவன்
பண்டிதத் தமிழைப்
பாராட்டிப் பாராட்டிப்
பலகாலும் பேசினான்!

●●●

'அர்த்தமுள்ள இந்துமதம்'
ஆக்கினான்;

'ஏசு காவியம்' இயற்றி -
எங்கும் சமயப் பொறையை
ஊக்கினான்;

'பகவத் கீதைக்குப்
பேருரை வழங்கினான்;
கண்ணன் கீர்த்தியைக்
காலமெல்லாம் முழங்கினான்!

சினிமா உலகில் - ஒரு
சகாப்தமாகவே பிறங்கினான்;
அறிவு வெள்ளத்தில் -
ஆழங்காற்பட இறங்கினான்;
உள்ளில் - ஞான ஒளி
வீசப் பெற்றவன் - ஏனோ
கள்ளில் விழுந்து - பல
கணங்கள் கிறங்கினான்;
இறுதியில் -
இந்தியாவில் துயிலாமல் -
வெளிநாட்டு - மருத்துவ
விடுதியில் போய் உறங்கினான்!

●●●

'வனவாசம்'
'மனவாசம்'
என - தன்னைப் பற்றி
எழுதிய வகையில்...

அவன்
அடுத்தவர்க்கு -
வாழ்க்கையின் அவலங்களை
வெளிச்சம் போட்டுக் காட்டினான்;
கொள்ள வேண்டியதைக்
கொள்ளவும் -
தள்ள வேண்டியதைத்
தள்ளவும் - அவன் தன்

நூல்கள் மூலம் -
நமக்கொரு பட்டியல் நீட்டினான்!

●●●

'கவி அரசு' என்றிருந்த
கண்ணதாசனை -
'அரசு கவி' எனத் - தலைகீழாக
ஆக்கினார் எம்.ஜி.ஆர்;
அவனைவிட -
அந்தப் பதவிக்குப் பொருத்தம் ஆர்?

●●●

வானம் வாழும்வரை - கண்ணதாசன்
கானம் வாழும்; அவன்
கரங்கள் பட்டு கவுரவம் பெற்றன -
சுரங்கள் ஏழும்!

- இன்னமும் இருக்கின்றார்கள்...



■ மக்கள் திலகத்துடன் அப்பா-அண்ணா

என்று அம்மா தடுத்திருக்கிறார்.

"நானும் சுத்த, பத்தமாதான் இருக்கேன். உடலாலும், மனதாலும் நான் தூய்மையானவன்... நான் அம்பியைப் பார்ப்பதால் யாருக்கும் எந்த இடையூறும் வராது" என்றிருக்கிறார். அம்மா மிகுந்த தயக்கத்தோடு அனுமதியளித்திருக்கிறார்.

கவியரசு அப்பாவைப் பார்க்கிறார். அப்பாவின் நிலைகண்டு கண் கலங்குகிறார். "அம்பி... நான் சொந்தமா படம் எடுக்கலாம்னு இருக்கேன். படத்துக்குப் பேரு 'மாலையிட்ட மங்கை..' பண்டரிபாய் ஹீரோயின். நீங்கதான் ஹீரோ. படத்தில் பாடல்களுக்கு முக்கியத்துவம் கொடுக்க விருப்பதால் உங்கள் கம்பீரக் குரலில் பாடல்கள் இடம்பெற வேண்டுமென்று விரும்பறேன். மறுக்காமல் நடிக்கணும்.." என்று கூறி பதினைந்தாயிரம் ரூபாய் அட்வான்ஸ் கொடுத்தார்.

கவியரசு சென்றபிறகு அப்பா அம்மாவிடம் சொன்னாராம். "காலம் எவ்வளவு வேகமாக ஓடுகிறது பார்த்தாயா? காலையில் சுகுமார் பத்து காசு கேட்டான். கொடுக்க என்கிட்டே ஒரு காசு இல்லே.. மதியம் பதினைந்தாயிரம் ரூபாய் கிடைச்சிருக்கு. இது நல்ல ஆரம்பம்தான். மீண்டும் ஒரு ரவுண்டு வருவேன் பாரு.."

சொன்னது போலவே அப்பா மீண்டும் ஒரு ரவுண்ட் வந்தார். மாலையிட்ட மங்கை படம் ரிலீஸ் ஆனது. படம் சூப்பர் ஹிட். பாடல்களுக்கும் ரசிகர்களிடம் பலத்த வரவேற்பு. 'எங்கள் திராவிடப் பொன்நாடே', 'செந்தமிழ்த் தேன்மொழியாள்' பாடல்களைப் பாடாத தமிழ் உதடுகளே கிடையாது. பாடல்களின் ராயல்டி மட்டும் கவியரசுக்கு இருபதாயிரம் ரூபாய் வந்ததாம்.

கவியரசு அப்பாவின் மீது மிகுந்த மரியாதையும், அன்பும் வைத்திருந்தார். அதேபோல், அப்பாவும் கவியரசு மீது அளப்பரிய பாசம் வைத்திருந்தார்.

தன் படங்களில் டி.ஆர். மகாலிங்கம் கண்டிப்பாக நடிக்க வேண்டும் என்று கவியரசு விரும்பினார். அதனால்தான் சந்திரபாபு ஹீரோவாக நடித்த 'கவலை இல்லாத மனிதன்' படத்தில் கூட அப்பாவுக்கு ஒரு கெஸ்ட் ரோல் கொடுத்தார். அப்போது பிரபலமாயிருந்த ஒரு நடிகர் கவியரசிடம் "டி.ஆர்.எம். ராசியில்லாத நடிகர். அவரை வச்சுப் படம் எடுக்கிறீங்களே.." என்று கூறினாராம்.

அதற்குக் கவியரசர் என்ன சொன்னார் தெரியுமா?

- அடுத்த இதழில் முடியும்

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்!

## கவிஞர் வாலி

### 63. ப. நீலகண்டன்

வையாபுரியில்
வாழும் அவன் -
நீலகண்டனுக்குப் பிறந்த
பழனியாண்டி!

விழுப்புரத்தில்
விளைந்த இவன் -
பழனியாண்டிக்குப் பிறந்த
நீலகண்டன்!

ப. நீலகண்டனால் -
புராணம் தலைகீழ் ஆனது;
ஆயினும் -
அவனால் -
தமிழ் மாதின்
தலைதாழாது உயர்ந்து
போனது!

ப. நீலகண்டனின்
பிதாவின் பெயர்
பழனியாண்டி;
பெற்றெடுத்தார்
புகழ்சால் புத்திரனை -
பலகாலும் - அவர்
பரம்பொருளை வேண்டி!

அவனது
அம்மாவின் பெயர்
அம்புஜம்;
அவள்
அருளால்தான் -
அம்புவியில் உயர்ந்தது
அவனது புஜம்!

●●●

தமிழ்ப் பற்றும்
தேசப் பற்றும்
ஒருசேர மிக்கவன் -
எனநாம்
ஒப்புக்கொள்ளத் தக்கவன்!

கதராடை -
கட்டியவன்;
காந்தியின் படத்தைத் - தன்
கருத்தில் ஒட்டியவன்!

ஆதியில் -
அவன்...

காதி வஸ்திராலயாவில்
கொஞ்ச காலம் -
பணியில் இருந்தான்; மது -
பானங்கள் அருந்தான்!

●●●

வண்ணத்தமிழ் - அவனுக்கு
வசமானது; அவனால் -
நற்றமிழில்
நல்ல நாடகங்களை -
நல்கமுடியும் எனும் கருத்து
நிசமானது!

நவீன
நாடகம் ஒன்றைத் தீட்டினான்;
கணிகையைக்

**சென்ற நூற்றாண்டில்,**
**தமிழ் மண் தரணிக்கு வழங்கிய**
**மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!**

கண்ணகியாக்கிக் காட்டினான்;
முத்தமிழ்க் கலா
வித்வ ரத்தின -
டி.கே.எஸ். சகோதரர்கள்
தம்மிடம் அதை நீட்டினான்!

'முள்ளில் ரோஜா' எனும் -அவன்
முதல் நாடகம்...

புரட்சிக் கருத்துக்குப் -
போடப்பெற்ற பிள்ளையார் சுழி;
அதன்பின் -
அனேக சமூக நாடகங்கள் -
மேடையேற -
மெல்ல மெல்ல...

வெளிச்சம் பெற்றது - பள்ளத்தில்
வீழ்ந்திருந்த மாந்தர் விழி!
கலைவாணர்
குழுவிற்காக -

நீலகண்டன் எழுதிய நாடகம் -
'நாம் இருவர்';
அதை -
அற்புதமான
திரைப்படமாய்த் - தனது
தேவகோட்டை ஸ்டூடியோவில்-

தயாரித்து
தமிழர்க்குத் தந்த
அந்த மாமனிதர் ஏவி.எம்.
ஆயிரத்தில் ஒருவர்!

ப. நீலகண்டனின்
பசுந்தமிழ் உரையாடல்களை...
'வேதாள உலக'மும்;
'வாழ்க்கை'யும்;
தகத்தகாயமாய்த் -
தாங்கி வந்தன;

நாட்பட -
நாட்பட -
நீலகண்டனின் -
நாவும் பேனாவும்...

ஒல்காது பொலிவிலும் வலிவிலும்-
ஓங்கி வந்தன!

●●●

அறிஞர் பெருந்தகை
அண்ணாவின் 'ஓர் இரவு' -
நீலகண்டனை
நாடறிந்த இயக்குநராக்கியது;
காலம் -
கைகொடுத்து -
மேலும் மேலும் - அந்த
மேதையின் செயலை ஊக்கியது!

ப. நீலகண்டன் - என்னும்
பெருமகன்தான்...

அற்றை நாளில் - எம்.ஜி.ஆரின்
அதிகப் படங்களை இயக்கியவன்;

'காவல்காரன்'
'மாட்டுக்கார வேலன்'
'திருடாதே'
'சக்கரவர்த்தித் திருமகள்'

முதலிய
முதல்தரமான படங்களில் - தன்
முத்திரையைப் பதித்து
மன்பதையை மயக்கியவன்!

அஃதேபோல் -
அவனது ஆளுமையை...

நடிகர் திலகம்
நடித்த -
'அம்பிகாபதி'
அம்புவிக்குச் சுட்டியது;

ஓர் எழுத்தாளனாக -
ஓர் இயக்குநனாக -
ஒரு படாதிபதியாக -

ப. நீலகண்டனின் புலமை -
பலவேஷம் கட்டியது!

●●●

கலைஞரின் -
கைவண்ணத்தில் வந்த -

'பூம்புகார்' -
ப. நீலகண்டனின் இயக்கத்தில்-
புகழ்பரப்பியது;
விநியோகஸ்தர்களின் பையை -
வசூலில் நிரப்பியது!

●●●

'அரசு பிக்சர்ஸ்'
அதிபராக இருந்த அவன் -
அரசு ஸ்டூடியோவின் - தலைமை
அதிகாரியாகவும் ஆற்றினான் பணி;
பி.ஆர். பந்துலுவோடு
பங்குதாரராக இருந்து - அவன்
பல -
படங்களை உருவாக்கினான்;

'கர்ணன்'
'கட்டபொம்மன்'
ஆகிய
அற்புதப் படங்களை அளித்த...
பத்மினி பிக்சர்ஸ்
பட வரலாற்றில் பேசப்பட - அந்தத்
தாபனத்திற்குத்
தன் வேர்வை எருவாக்கினான்!

●●●

நெற்றியில் திருநீறு;
நெஞ்சினில் தீந்தமிழ்;
உதட்டில் புன்னகை; என -
உலவிய பெருந்தகை -

நீலகண்டன்தான் - தன்
நுழைமாண் நுண்புலம் -
துலங்கும் -
தூய தமிழ் உரையாடலாலும்;

அணுவளவும் - கோவை
அறுபடாது - கதையை
இயல்பாகச் சொல்லி -
இயக்கும் உத்தியினாலும்;

சமூகப் படங்களின்
வெற்றியை -

சாத்திய மாக்கினான்;
படத்துறைக்கு சமூகப்
பிரக்ஞையை -
பாத்திய மாக்கினான்!

●●●

எளியேன் - முதன்முதல்
எம்.ஜி.ஆர். படத்திற்குப் -
பாடல்
புனைகின்ற வாய்ப்பு...
என்
நெஞ்சுக்கினிய நேசன் -
நீலகண்டன் தந்தது; என்-
வாழ்வில் - அவனால்தான்
வெளிச்சம் வந்தது!

●●●

நிறைகுடமாய்த் திகழ்ந்த -
நீலகண்டப் பெருந்தகை...

அகவை எழுபத்தாறில் -
ஆவியை நீத்தான்; ஆனால் -
தன் கண்ணியத்தையும் -

தமிழின் கண்ணியத்தையும் - அந்த
கனவான் -
கடைசிவரை காத்தான்!

## 64. சீர்காழி கோவிந்தராசன்

தொல்லிசை;
மெல்லிசை;
இவை
இரண்டிலும்...

ஆழங்காற்பட்டு -
அரும்புகழோடு நின்றான்; தன்-
ரவைஜாதி சாரீரத்தால் -
ரசிக நெஞ்சங்களை வென்றான்;
அரிய சங்கதிகளை -
அசைபோட்டு அசைபோட்டு மென்றான்;

சுருங்கச்
சொல்லின் -
சங்கீதத்தையே
சாப்பாடாகத் தின்றான்!

என் -
சிந்தைக்கினிய நேசன்;
சிரித்தமுகவிலாசன்;
சீலங்களின் தாசன்;
சீர்காழி கோவிந்தராசன்!

●●●

கோடம்பாக்கத்திலும் -
கொடிகட்டிப் பறந்தான்;
சங்கீத
சபாக்களிலும் -
சாலச்
சிறந்தான்!

முத்தமிழ்
மும்மூர்த்திகளையும்;

ஆரூரில்
அவதரித்த -
மாற்றுமொழி
மும்மூர்த்திகளையும்;

பேதா
பேதமின்றி...

அவன் நேசித்தான்;
அவன் பூசித்தான்;
அறுவரையும் ஒருவராய்
அவன் ஒப்பி -
யாண்டும் - அவர்கள்
யாத்த கிருதிகளை...
தேனில் -
தோய்த்து வழங்கினான்; தன் -
மேதாவிலாசம் வெளிப்பட -
மேடைதோறும் முழங்கினான்!

●●●

சீலம் மிகுந்த -
சிவசிதம்பரம் செட்டியாருக்கும்;
அன்பும் பண்பும் மிகுந்த -
அவயம்மாளுக்கும்;

மகனாய்ப் பிறந்தவன் - இந்த
மகாவித்துவான்;
வேய்ங்குழல்
வேந்து -
திருப்பாம்புரம்
சுவாமிநாதப் பிள்ளையின் -
திருவடிகளை
தினமும் நத்துவான்!

அவரிடத்தில்தான்
அவன் -

பகலும் இரவும்
பழைய மரபுப்படி -
பணிவிடைகள்
புரிந்து...

இசையை
இடையறாது கற்றான்;

பல்லவிகளும்;
வர்ணங்களும்;
கீதங்களும்;
தில்லானாக்களும்;

குற்றமறத் - தன்
கைவரப் பெற்றான்!

சாதகம் புரிந்து -
சாதகம் புரிந்து -
சாரீரத்தை - தனக்கு
சாதகம் ஆக்கினான்; தனது -
சாதகத்தை - யோக
சாதகம் என்று - இந்த
ஞாலம் மெச்சும்படி - அலகிலா
ஞானத்தைத் தன்னுள்
தேக்கினான்!

குரல் - அவனுக்குக்
குற்றேவல் செய்தது; அது
குடம் குடமாய்க்
குறிஞ்சித் தேனைப் பெய்தது!

மரபுக் கவிதையும் -
புதுக் கவிதையும் -
படைக்க வல்ல - ஒருசில
புலவர் போல்...

●●●

சாஸ்திரீய
சங்கீதத்தையும்;
சாஸ்திரங்களை
சட்டை செய்யாது -

வெகுஜன ரசனையையே
உள்நோக்கமாகக் கொண்ட -

சினிமா
சங்கீதத்தையும்;

அவன் ஒழுங்காக
அப்பியாசம் செய்தான்;
இந்த
இருவகையான -
புலமையைக் கொண்டு - தன்
புகழாடையை நெய்தான்!

●●●

'அமுதும் தேனும் -
எதற்கு?'

'சமரசம் உலாவும் -
இடமே...'

'தேவன் கோவில்
மணியோசை'

'கண்ணிலே -
நீரெதற்கு?'

'உள்ளத்தில் -
நல்ல உள்ளம்...'

இப்படி - அவன்
இசை பரப்பும்.
படப் -
பாடல்கள் அனந்தம்;
அனைத்திலும் - இசை
அன்பர்க்கு - அவன்
அருளினான்
அளப்பரும் ஆனந்தம்!

●●●

ஆதியில் -

அவன் -
நாடகங்களில்
நடித்தான்;
பிற்பாடு
படங்களிலும் நடித்தான்;

வாழ்க்கையில் மட்டும் - அவன்
வாழு நாள்வரை நடித்ததில்லை!

குறள்போல் - அவன்
குள்ளம்; ஆனால்
குன்றும் - அவன்முன்
குன்றும் - எனும்படி
உயரமான -
உள்ளம்!

●●●

'சினிமா உலகம்' ஆசிரியரும்;
சிற்றப்பாவும் ஆன...

பி.எஸ். செட்டியார் - அவன்
பிரபலமாக வேண்டி -
பெரும் பாடு பட்டார்; அவன்
புகழ்த்தரு வளர நீர்விட்டார்!

அவரது -
ஆசையை...

அவன்
அயராது உழைத்து -
நிறைவேற்றிக் காட்டினான்;
நிறையப் புகழை ஈட்டினான்!

பக்திப் -
பாடல்களால் ...

நற்றமிழர் இனத்தை -
நெறிப் படுத்தினான்;
வேலனுக்கும் -
விநாயகனுக்கும் -
திருமாலுக்கும் -
திரிபுர சுந்தரிக்கும் -

அழகழகான - இசை
ஆடைகளை உடுத்தினான்!

●●●

'தாமரைத் திரு' விருதும்;
'டாக்டர்' விருதும்;
சீர்காழியைச் சேர்ந்து - அவை
சிறந்தன;
காற்றும்
கார் மேகமும் - அவன்
பாட்டைச் சுமந்து கொண்டு
பாரெங்கும் பறந்தன!

அவன் குரல்; சொல்;
அகில உலகெங்கும் ஒலித்தன;
அவன்
ஆற்றிய கச்சேரியால் -
அயல் நாடுகளில்
அருந்தமிழும் இசையும்
சொலித்தன!

எம்.ஜி.ஆருக்கு - நான்
எழுதிய முதல் பாடல் -
அவன் பாடியது; என்புகழ்
அவனால் கூடியது!

●●●

சீர்காழி கோவிந்தராசன்
சீவிப்பது - இன்றும் நம்
சிவசிதம்பரம் குரலில்;
தொடையில்
செல்லமாய்த் தாளம்போடும்
விரலில்!

-இன்னமும் இருக்கின்றார்கள்...

# இவர்கள் இன்னும்

## 65. நடிகவேள் எம்.ஆர்.ராதா



'நான் வியக்கும்-
நடிகர்-
எவரென்று கேட்டால்-
எம்.ஆர்.ராதா என்பேன்!'

இப்படி
இயம்பியது-
நானல்ல;
நடிகர் திலகம்!

சிவாஜியே
சொன்னபின்-
வேறு சான்று
வேண்டுமா உலகம்?

●●●

வள்ளலார்
வாழ்த்திப் பாடிய-
தரும மிகு
திருநகராம் சென்னையில்...

ராணுவ வீரர்
ராஜகோபால் நாயுடுவின்
இரண்டாம் மகனாக - தரை
இறங்கியவர்தான் ராதா;

படிப்பும்-
பள்ளியும்...

ஆரம்ப நாள்களில்-
அவருக்கு அவ்வளவாக
ஆர்வமூட்டும்படி-
அமையவில்லை தோதா!

**கவிஞர் வாலி**

# ம் இருக்கின்றார்கள்



ஒருநாள்
ஒருவரிடமும் சொல்லாமல்-
வீட்டைவிட்டு
வெளியேறி...

நாட்டில் உள்ள-பல்வேறு
நாடகக் கம்பெனிகளில்-
புகுந்து
புறப்பட்டார்;

நடிகனாக;
நாடக எலெக்ட்ரீஷியனாக;
வாகன ஓட்டுநராக;
மோட்டார் மெக்கானிக்காக;

சுருங்கச் சொன்னால் - ஒரு
சகலகலா வல்லவனாக-
விளங்கி-
வேர்வையை விட்டார்!

நாளாவட்டத்தில்
நாடறிந்த நடிகரானார்;

ராதா-
ரத்தக்கண்ணீரில் நடித்து-
தொழுநோயாளியாகத்
தோன்றி...

உயர்ந்த நடிப்பில்-அதன்
உச்சத்திற்கே போனார்!

●●●

பெரியாரின் கருத்துக்களைப்
பிரியமொடு பின்பற்றினார்;

**சென்ற நூற்றாண்டில்,**
**தமிழ் மண் தரணிக்கு வழங்கிய**
**மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!**



அச்சமின்றி-
ஆணித்தரமாக-
நாட்டு நடப்புகளை
நையாண்டி செய்து...

முடை நாற்றமெடுத்த
மூடக் கருத்துக்களின்-
முதுகெலும்பை
முறிக்கும் முயற்சியில்-

ஓவாது ஈடுபட்டு-
ஊர்ஊராகச் சுற்றினார்!
அவரது நாடகங்களை
அரசு தடை செய்தது;
அந்த அளவு
அவரது நாடகம் ஒவ்வொன்றும்-
அரங்கத்தில்
அனல் மழையைப் பெய்தது!

நந்தனார்-
கிந்தனார் ஆனது-
கலைவாணரின்
கை வண்ணத்தில்; அது
பாமரர்க்கும்
படிப்பின் முக்கியத்துவத்தை
எழுப்பியது-பலரது
எண்ணத்தில்!

ராமாயணம்-
கீமாயணம் ஆனது-
ராதாவின்
ராவண காவியத்தில்;
அது-சில

அழுக்குகளைச் சுட்டியது-
வான்மீகியும் கம்பனும்
வரைந்த ஓவியத்தில்!

எனினும்-
எதிர்ப்புகளிடையே-
எஞ்ஞான்றும்
எதிர் நீச்சல் போட்ட...
நடிகர் ராதாவை-
'நடிகவேள்' என விளித்தார்-
அஞ்சா நெஞ்சன்
அழகிரி; அவர்-
அங்ஙனம் விளித்தாரே-
அதுசரி!

கூட்டியும்-
குறைத்தும்-
ஒருவகை வித்தியாசமான
ஓசைகளை எழுப்ப-அவருக்குத்
தோன்றாத் துணையாயிருந்தது
தொண்டை;

உரையாடல்களை
உணர்வுக்கு ஏற்ப-
உயர்த்தித் தாழ்த்தி
உச்சரிக்கும்...

ஆற்றலில்
ஆரும் நிற்க
ஆகாது-அவர்
அண்டை!

ஏற்ற பாத்திரங்களுக்கு
ஏற்ப...

முகபாவங்களை
மாற்ற வல்லவர்;

வார்த்தை அம்புகளை
வீசுகையில்-அதற்கு
வசதியாகத் தன்னையே
வளைத்துக் கொள்ளும் வில்லவர்!

நொடிக்கு நொடி;
நொடிக்கு நொடி;
அற்புதம் நிகழ்த்தும்
அநாயாசமான நடிப்புத்திறன்...

அவரிடம் இருந்ததை-
ஆரும் ஒப்புவர்;
'நடிகவேள்' எனும் விருதுக்கு-
நூறுசதவிகிதம்-
பொருத்தமானவர்-எனப்
புவியோர் செப்புவர்!

●●●

தொடக்கத்தில் - ஓரிரு
திரைப்படங்களில் - தன்
திறனைக் காட்டிவிட்டு - அவர்
திரும்பினார் நாடகத்திற்கு;
அன்றாட நல்லது கெட்டதை-
அப்படியே தோலுரித்துக்காட்ட
அவருக்கு-வெகு
அனுசரணையாயிருந்த ஊடகத்திற்கு!

●●●

திடீரென்று-ஒருநாள்
திரும்பினார் திரைக்கு-
'ரத்தக்கண்ணீர்' படத்தின் மூலமாக-
ரசிகர்களை வெல்ல;

பிறகு-
படஉலகத்தில்-ராதா
எழுப்பிய பிரளயத்தை
என்னவென்று சொல்ல!

சிவாஜி;
எம்.ஜி.ஆர்;
இந்த
இருவரில்-அது
எவர் படமானாலும்
எம்.ஆர்.ராதா இருந்தால்தான்-
ந்தப்படம் விற்கும்; இல்லையேல்-



அரைகுறையாய் நிற்கும்!

ஆம்!
அவர் கைக்குள்-

ஏறத்தாழ
இருபது ஆண்டுகள்-
தமிழ் சினிமா
தங்கியிருந்தது;
அரசியலைவிட-
அவரது
முழுகவனமும்-அதில்
மூழ்கியிருந்தது!

●●●

'பாகப் பிரிவினை'
'பெற்றால்தான் பிள்ளையா'
'புதிய பறவை'
'குமுதம்'
'சித்தி'

என-
எத்துணையோ படங்களில்-

ராதா - நவ
ரசங்களைக் கொட்டினார்;
எதார்த்த நடிப்பின்-
எல்லையை எட்டினார்!

●●●

எம்.ஆர்.ராதாவிற்கு
எவர் இணை?
இந்தக் கேள்விக்கு-
இங்கு விடையை யார் சொல்ல?

மன்பதை - அவரை
மறவா வண்ணம்...

ராதாரவி;
ராதிகா;
இருக்கிறார்கள்-படவுலகில்
இன்றும் அவர் பேர் சொல்ல!



## 66. சி.எஸ்.ஜயராமன்

சிதம்பரம் - பாடக
சுந்தரம் பிள்ளை-
பெற்றெடுத்த-
பெருமைக்குரிய பிள்ளை...

இசைச்சித்தர்-என
இலங்கிய சி.எஸ்.ஜயராமன்;
'ராமன்-எத்தனை
ராமனடி!' என்று-
வரிசைப்படுத்தி-கண்ணதாசன்
வரைந்த பாடலில்...

விடுபட்டுப் போன-இசை
வித்தகன் இந்த சங்கீதராமன்!

●●●

பிதா -
பாடக சுந்தரம் பிள்ளை-
பெரிய இசை மேதையாய்ப்
பிறங்கியதால்...
சிறுவன் ஜயராமன்-
சங்கீதத்தைத்-
தந்தையிடமே கற்றான்; அதில்-
தலையாய ஞானம் உற்றான்!

நளினமான குரல்; சற்றே-
நடுக்கமான குரல்; ஆனால்-
ஆலாபனையில்
அது உதிர்க்கும்-
ஒவ்வொரு சங்கதியும்
ஒளிரும் முத்துப் பரல்;

சிம்மநந்தன தாளத்தையும்-
சர்வ சௌக்கியமாக-
எண்ணிப் போடவல்ல-
ஏற்றம்மிக்க கை விரல்;
தியாகையர்-
தீட்சதர்-
சியாமா சாஸ்திரிகள்-ஆகியோர்
செய்த...

கடினமான
கிருதிகளையே-
அதிகம் நிரப்பி நிற்கும்
அவனது கச்சேரி நிரல்!

சி.எஸ். ஜயராமன்-ஒரு
சங்கீத மேதை;
எழுபத்திரண்டு
என இருக்கும்-
மேள கர்த்தாக்களையும்;
மற்றுமுள்ள ஜன்ய
ராகங்களையும்;

பிசிறில்லாமல்
பிர்க்காவோடு-அவன்
நிரூபணம் செய்கையில்
நமக்கு ஏறும் ஒருவகை போதை!

●●●

ஜகன்னாதய்யர் கம்பெனியில்-
ஜயராமன் சேர்ந்து...

பிள்ளைப்
பிராயத்திலேயே



நடிப்பிலும்
நல்லிசையிலும்...

அரங்கத்தை - வியப்பில்
ஆழ்த்தினான்;
பருவ வயதில்-
பாடு படுத்தும்-
'மகரக் கட்டு' எனும்
மகா சங்கடத்தை...

விடாத சாதகத்தால்
வீழ்த்தினான்!

ராஜமாணிக்கம் பிள்ளை
கம்பெனியில்
ராஜபார்ட் ஆனான்;
நாட்பட-
நாட்பட-
மெல்லிசையிலும்
தொல்லிசையிலும்
மெருகேறிப் போனான்!

சின்ன வயதிலேயே-
சினிமாவில் புகுந்தான்;

பக்த துருவனிலும்-
கிருஷ்ண லீலாவிலும்-
இன்னும்-
இவையொத்த படங்களிலும்-

பாடி ஆடி நடித்து-
புகழ் மிகுந்தான்!

'சிதம்பரம்-
சிங்கக் குட்டி!'
என
எழுதிவைத்தனர்-
வெள்ளித்திரை
விநியோகஸ்தர்கள்-
தங்கள்-விளம்பரத்
தட்டிகளில்;
அந்த
அளவு-

ஜயராமன்
ஜயக்கொடி நாட்டினான்-
தென்புலத்தில்-பட்டி
தொட்டிகளில்!

●●●

காலமோ-
கரையானோ-
தின்ன வொண்ணாத்
தீந்தமிழ்ப் பாடல்கள்...

ஜயராமனின் - ரவை
ஜாதி சாரீரத்திலிருந்து
பிறந்தன; அவை யாவும்
சிறந்தன; அவற்றைக் கேட்டு
மாந்தர் மனங்கள்-தம்மைத்தாமே
மறந்தன!

ஆரம்பகால சிவாஜிக்கு-
அவன்தான் பின்னணி;
அவனது
அற்புதமான-
சாரீரபலம்-சேர்த்தது
சிவாஜியை முன்னணி!

'மக்கள் கவிஞன்'-என
மின்னிய...
பட்டுக்கோட்டையின்-தத்துவப்
பாடல்கள் அனைத்தும் இசைச்
சித்தரின் சாரீரத்தில்-நம்
சிந்தனையை அள்ளின;
மரத்துப்போன-பல
மனங்களைக் கிள்ளின!

'குட்டி ஆடு தப்பிவந்தா-
குள்ளநரிக்குச் சொந்தம்'

'மனிதன்
ஆரம்பமாவது
பெண்ணுக் குள்ளே; அவன்-
ஆடி அடங்குவது
மண்ணுக் குள்ளே!'

'இன்றுபோய்
நாளை வா!'

'கா! கா! கா!'

'குற்றம் புரிந்தவன்
வாழ்க்கையில் நிம்மதி'

'விண்ணோடும்-
முகிலோடும்...'

'வண்ணத் தமிழ்ப்
பெண்ணொருத்தி...'

'அன்பாலே தேடிய-என்
அறிவுச் செல்வம்...'

'தன்னைத் தானே நம்பாதது-
சந்தேகம்...'

இத்தியாதி;
இத்தியாதி!

எழுத எழுத
எனக்கு-
விரல் வலிக்கும்;
வலிமிகுந்து சலிக்கும்!

அத்துணை
அற்புதமான பாடல்களை-
ஜயராமன்-இந்த
ஜகத்திற்குத் தந்ததுண்டு;

சினிமா வானிலும்-கர்நாடக
சங்கீத வானிலும்-ஒருவித
சிரமமுமின்றிப் பறக்க-ஞானச்
சிறகுகளைக் கொண்டு...



வித்தகனான அவன்-
வெற்றிஉலா வந்ததுண்டு!

●●●

சி.எஸ்.ஜயராமனின்-
சகோதரியார்...
பத்மா என்னும்-
பெண்ணரசிதான்-
முத்தமிழ் வித்தகர் கலைஞரின்-
முதல் தாரம்; அவர்
மனத்தில் இன்றும் நிழலாடும்-
முத்தாரம்!

●●●

இசைச்சித்தர்-என
இலங்கிய ஜயராமன்...

நாட்டில்-இன்று
நம்மிடையே வாழவில்லை;
நற்றமிழ்ப்
பாட்டில்-இன்னமும்
பசுமையாக வாழ்கிறார்;
அனேக சங்கீதப் பிரியர்கள்-
அவரது நினைவில்-
அவர் பாடலைக் கேட்கும்
போதெல்லாம்-
ஆழ்கிறார்!

சித்தர் நினைவில் ஆழும்
பித்தர் இந்த நிலமிசை
அனேகர் உண்டு; அவருள்-
அடியேனும் ஒன்று!
- இன்னமும் இருக்கின்றார்கள்

டூரிங் டாக்கீஸ்

# அந்த நாள் குயில்கள்!



■ பி. லீலா



■ கண்டசால வெங்கடேஸ்வரராவ்



■ கே.வி. ஜானகி



■ லக்ஷ்மி



■ ராணி



■ என்.எல். கானசரஸ்வதி



■ லக்ஷ்மி ராணி



■ வி.ஆர். தனம்



■ ஏ.பி. கோமளா

ஒரு படத்தின் வெற்றியில் அதன் பாடல்களுக்கும் முக்கிய பங்குண்டு. திரைக்குப் பின்னாலிருந்து குரல் கொடுக்கும் அந்தக்கால இசைக் குயில்களின் புகைப்படங்கள் இங்கே (பேசும் படம் : 1952 மலர்)



■ திருச்சி லோகநாதன்



■ மாஸ்டர் சுப்பையா



■ பி.ஏ. பெரியநாயகி



■ எம்.எல். வசந்தகுமாரி



■ பி.ஜி. கிருஷ்ணவேணி



■ டி.வி. ரத்னம்



■ டி. வஸந்தா



■ ஜெயலக்ஷ்மி



■ ராஜலக்ஷ்மி

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

## 67. ந. பிச்சமூர்த்தி

தாகூர் மாதிரி-
தாடி யிருக்கும்; அவன்-
ரவீந்திரர் மாதிரி - ஒரு
கவீந்திரர் வருக்கம்!

புதுக்கவிதையின்
பிதாமகன்;
பீஷ்மரைப் போல-ஞானம்
பிறங்கு முகன்!

உரைநடைக் கவிதையில்
உச்சகீர்த்தி-
பெற்றிருந்த பெரியவன்
பிச்சமூர்த்தி!

'மணிக்கொடி' காலத்தில்
மணம் பரப்பியவன்;
நற்றமிழ் நிலத்தைப்-புதிய
நாற்றுகளால் நிரப்பியவன்!

●●●

நாவில்
நாற்காலி போட்டு-
அமர்ந்திருந்தாள்
அரிய கலை மடந்தை;
இத்தகு
இசைமிகு கவிஞன்-
தோன்றிய
திருநகரம் திருக்குடந்தை!

நான்மறை ஓதிய
நடேச தீட்சிதருக்கும்;
கண்ணிலும்
கருத்திலும்
கற்புக் கனலைப் பிலிற்றிய-
காமாட்சி அம்மையாருக்கும்;

மகவாகத் தோன்றிய
மகான்;
அறவழி
அல்லாது-

## கவிஞர் வாலி

**சென்ற நூற்றாண்டில்,**
**தமிழ் மண் தரணிக்கு வழங்கிய**
**மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!**

ஜூனியர் விகடன் 24.6.2003



பிறவழி எதிலும்
புகான்!

அதனால்தானோ என்னவோ-
ஆதியில்...
அவன்
அறநிலையத்துறையில்-ஓர்
அதிகாரியாக
அலுவல் ஏற்றான்;
நேர்மையையே
நெடிய தவமாய் நோற்றான்!

●●●

தாய்மொழி-
தெலுங்கு;
ஆயினும்
அவன் போல்-
அருந்தமிழ்த் தாயின்
அழகிய திருவடிகளில்...

ஆர் இட்டார்
அழகிய நலங்கு?

வடமொழிப் புலமை;
வண்டமிழ்ப் புலமை;
ஆங்கிலப் புலமை;

அனைத்தும் ஒருசேரப்பெற்ற
அபூர்வக் கலவை;
அவன்-தனது
அற்புதமான...

கதைகளால்;
கட்டுரைகளால்;
கவிதைகளால்;

செய்தான்-ஒரு
சமுகச் சலவை!

●●●

சட்டம் படித்து -
சிலகாலம்...

வாதிகளுக்கு
வக்காலத்து வாங்கினான்;

தொழில்
தருமத்தைத்-
தலைக்கு மேல்
தாங்கினான்!

காந்தியைக்
காதலித்தான்;
பாரதி பாட்டில் கிறங்கி-புத்தி
பேதலித்தான்;

அடிமை மாந்தரின்
அவலங்களை-
சுடச்சுட எழுதிச்
சுட்டினான்;
கு.ப.ரா.;
சி.சு. செல்லப்பா;
சிட்டி; முதலிய
சிந்தனையாளர்கள் வரிசையில்
நின்று...

மூலை
முடுக்கெல்லாம்
முத்தமிழ்
முரசம் கொட்டினான்!

எழுதுவதை-ஓர்
எளியதவம்போல் புரிந்தான்;
'புதுக்கவிதை' என்று-இன்று
பேசப் படுகின்ற...

உரைநடை
உத்தியைக் கையாண்டு-
உயரிய கவிதைகளை
உருவாக்கி-

வாய்த்த புகழில்-
வானம்போல் விரிந்தான்!

பாரதிக்குப்-
பிறகு...

வசன கவிதைக்குப்-புதிய
வலிவும் பொலிவும் சேர்த்தான்;
பழைய மரபுகளை-மக்கிப்
போனவை என்று பேர்த்தான்!

●●●

வ.ரா.-
வசனம் எழுத;
பாரதிதாசன்-
பாடல் இயற்ற;
உயரிய சிந்தனையாளர்களால்
உருவாக்கப் பெற்ற-

இசைமிகு திரைப்படம்-
'இராமானுஜ'ரில்-
அவரது
ஆசாரியனான
'ஆளவந்தார்' பாத்திரத்தில்
அற்புதமாக நடித்தவன்...

பிச்சமூர்த்தி-என்னும்
பெருமகன்; இன்றைய-
உரைநடைக் கவிஞர்களுக்கு-
உதாரண புருஷனாகத்
திகழுகின்ற-
திருமகன்!

இருபதாம் நூற்றாண்டின்-
இருபது முப்பதுகளில்...

ஆங்கிலம்-
ஆதிக்கம் செலுத்திய
அற்றை நாள்களிலும்...

பசுந்தமிழ்ப்
பதாகை-
பட்டொளி வீசிப்
பறக்கக் காரண மாயிருந்த-



பலரில்-
பிச்சமூர்த்தியும் ஒருவன்;
இலக்கிய வானில்-
இன்றும்-அவன்
நட்சத்திரமாய்-ஒளியுமிழ்ந்து
நிற்கும் துருவன்

●●●

நான்-அவனது
நிழலில்...

சிலகாலம் தங்கினேன்;
செந்தமிழ்வாவியில்முங்கினேன்;
அவன்-
அருளால்தான்-ஒரு
பூங்கவிதைப்
புனலாய் நான்
பொங்கினேன்!

அவன் வாழ்ந்தான்-
ஆண்டுகள் எழுபத்தாறு;
எனினும் -
எனையொத்த-
கவிஞர்க் கெல்லாம்-
காலா காலம்...

ஊக்கமும்
உள்வலியும் சேர்க்கும்-
பிச்சமூர்த்தி-
பிழிந்துதந்த எழுத்துச்சாறு!

## 68. தமிழ்வாணன்

பாபுராவ்
படேலுக்குப் பிறகு...



கேள்வி பதிலில்
கொடிகட்டிப் பறந்தவன்;
வாசகர்
வினாக்களுக்கு-
வித்தியாசமாக-
விடையளிப்பதில் சிறந்தவன்!

காகிதத்தாலான
'கல்கண்டு'-நமக்கெலாம்
சுவைத்தது-அவனது
சொல்கண்டு!

பத்திரிகை ஆசிரியர்களில்
பிரத்தியேகமாய்த் திகழ்ந்தவன்;
பேனா முனையால்
பல நெஞ்சங்களை
அகழ்ந்தவன்!

●●●

ஒரு தொப்பி;
ஒரு கறுப்புக் கண்ணாடி;
இவை
இரண்டை மட்டும்-
ஒரு கோட்டு ஓவியமாக
வரைந்து
காட்டினால்போதும்...

இன்றைய தலைமுறையும்-
இது 'தமிழ்வாணன்' எனக்
கூறும்;
லோகம் அறியும்படியான-ஒரு
'LOGO'வை-
தனக்கென்று
தனியாக
வடிவமைத்துக் கொண்டு-அவன்
வலம் வந்தான்...

தொல்லுலகில்-
தமிழர் வாழும் நிலம் தோறும்!

சின்னஞ்
சிறார்களுக்கான
ஏடு
என்று...

கல்கண்டு-
கருதப் பட்டாலும்-அதன்
உள்ளீடு-பெரியவர்க்கும்
உகந்ததாயிருந்தது எந்நாளும்!

உலக
உருண்டைக்குள்...

எந்த மூலையில்
எது நடந்தாலும்-
அவை
அனைத்தையும்...

பாமரர்க்கும்
புரியும்படி-அவன்
தன் ஏடு வழி
தெரிவித்தான்; அனேகர்-
அறியாது விடுத்த
அனேக விஷயங்களை-
அவன் சுருக்கமாக
அறிவித்தான்!

ஒரே நேரத்தில்-
ஒரு சேர...

அஞ்சு வயது சிறுவனுக்கும்;
அம்பது வயது மனிதனுக்கும்;
அறிவு கொளுத்தியது
அவனது ஏடு;
அது -
அவ்வளவு
எளிதான பணியல்ல;
எனினும் அவன் ஏற்றான்பாடு!

●●●



"எதுக்கு
உங்க ஆபீஸ்ல
சம்பளக் கவரை
டேபிளுக்குக்
கீழே
கொடுக்கறாங்க?"

"இந்த மாசம்
பூரா 'மேல்
வரும்படி'யே
இல்லியாம்.
அதான், ஒரு
ஆறுதலுக்காக!"

-சாவித்திரி
வெங்கட்



"கண்ணு தெரியாதவன் சாமி... தர்மம் போடுங்கய்யா!"

"எடுத்துத்தானே தரணும்... ஏன்யா அவசரப்படுறே?"

-கிரிஜா மணாளன்

## “காஞ்சி மகா சுவாமிகள் மீது எனக்கு இருக்கும் பக்தி அளப்பரியது. அந்த மகா ஞானியின் வாழ்க்கைச் சரிதத்தை ஹரிகதையாகச் சொல்வதற்கு நிச்சயம் நான் புண்ணியம் செய்திருக்க வேண்டும்”

என்று உணர்ச்சி வசப்பட்டுச் சொல்கிறார் ரேவதி சங்கரன்.

ரேவதிசங்கரனுக்கு அறிமுகம் தேவையில்லை. பல டி.வி. சேனல்களில் நிகழ்ச்சிகளைத் தொகுத்து வழங்கி வருகிறார். விளம்பரங்களிலும் நடிக்கிறார். ஹரிகதை சொல்வதிலும் அவர் கைதேர்ந்தவர். காஞ்சி மகா சுவாமிகளின் வாழ்க்கைச் சரிதத்தை அவர் ஹரிகதையாகச் சொல்லி, அது இப்போது வீடியோ, ஆடியோ சி.டி. வடிவில் வெளியாகி இருக்கிறது.

காஞ்சி மகா சுவாமிகளின் 110-வது ஜெயந்தியான கடந்த 13-ஆம் தேதி அன்று இந்த சி.டி. வெளியிடப்பட்டுள்ளது. இந்த சி.டி. தயாரிப்பின் போது தனக்கு ஏற்பட்ட அனுபவங்களை நமது நிருபர் **ஏ.ஆர். குமாரிடம்** சுவாரஸ்யமாக விளக்குகிறார் ரேவதிசங்கரன்.

“ஹரிகதைக்கு நம்முடைய பண்பாட்டில் முக்கியமான இடம் உண்டு. புத்தகங்களும், சினிமாக்களும், டி.வி.க்களும்

# “உன் குரு ரமணர்!”



## – வழிகாட்டிய காஞ்சிப் பெரியவர்

**கவிஞர் 'வாலி' எழுதும் 'இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்' அடுத்த இதழில் இடம்பெறும்!**

இல்லாத அந்தக் காலத்தில் புராணங்கள், கடவுளின் திருவிளையாடல்கள், இறைவனின் திருவடியினைத் தொட்ட மகா மனிதர்களின் வாழ்க்கை, ஹரிகதையாகத்தான் சொல்லப்பட்டது. மதுரையில் சின்ன வயதில் ஓ.சி.பி.எம். பள்ளியில் படித்த போது நிறைய ஹரிகதைகளைக் கேட்டிருக்கிறேன். பிற்காலத்தில் பெரியவளாக வளர்ந்த பிறகு நான் ஹரிகதை செய்ய வேண்டுமென்கிற ஆசை அப்போதே எனக்குத் தோன்றி விட்டது.

நான் முதன்முதலாக ஹரிகதையாகச் சொன்னது எம்.எஸ். சுப்புலட்சுமி அம்மாவின் கதையைத்தான். ராமபிரானின் கதையை அவருக்கு முன்னாலேயே லவகுசர்கள் நடித்துக் காட்டியதுபோல, எம்.எஸ்.ஸின் கதையை ஹரிகதையாக அவர் முன்பே நான் சொன்னபோது நெகிழ்ந்து போனார் அவர். நான்கு ஆண்டுகளுக்கு முன்பு நடந்த சம்பவம் இது.



'என் கதையை அற்புதமா சொன்னே!' என்று அம்மா என்னைப் பாராட்டியபோது, எனக்கு பத்மஸ்ரீ விருது கிடைத்தது மாதிரி இருந்தது.

எம்.எஸ்.ஸின் ஹரிகதையை பலரும் பார்த்தார்கள். அவர்களில் ஒருவர் டாக்டர் பத்ரிநாத். 'காஞ்சி மகா சுவாமிகளின் வாழ்க்கை அற்புதமானது. அவரது சரித்தத்தை ஹரிகதையாக அவர் பிறந்த நாளன்று நீங்கள் சொல்ல முடியுமா?' என்று கேட்டார். எம்.எஸ். அம்மாவுக்கும் அவரது மகன் ஆத்மநாதனுக்கும் இதே யோசனை இருந்ததால், நான் சொன்னவுடன் அவர்களும் உடனே ஒப்புக் கொண்டார்கள். மகா சுவாமிகளின் வாழ்க்கைச் சரிதம் பற்றிப் பல புத்தகங்களை எனக்குக் கொடுத்தார் டாக்டர் பத்ரிநாத்.

அதையெல்லாம் படித்தேன். மகா சுவாமிகள் பற்றி மற்றவர்களுக்கு ஏற்பட்ட அனுபவங்களைக் கேட்டுத் தெரிந்து கொண்டேன். எல்லா தகவல்களையும் சேகரித்தபிறகு ஆத்மநாதன் உள்பட பலரிடமும் காட்டி, அதில் உள்ள தகவல்கள் எல்லாம் சரிதானா என்பதை உறுதிப்படுத்திக் கொண்டேன்.

மூன்று ஆண்டுகளுக்கு முன்பு மகா சுவாமிகளின் பிறந்த நாளன்று அவரது மணிமண்டபம் உருவாகும் ஓரிக்கையில் முதன்முதலாக அவரது சரிதத்தைச் சொன்னேன். அங்கு போகிறபோது எம்.எஸ். அம்மா எனக்கு ஓர் எச்சரிக்கை செய்தார். "கைகளில் தங்க வளையல் போட்டுக் கொள்ளாதே! கண்ணாடி வளையல்கள் மட்டுமே போட்டுக் கொள்! பட்டுப் புடவை வேண்டாம். நூல் சேலையே போதும்! தங்கமும், பட்டுப்புடவையும் பெரியவருக்குப் பிடிக்காது" என்றார். பெரியவரின் அருள் எனக்குக் கிடைக்க வேண்டும் என்பதில் எம்.எஸ். அம்மாவுக்குத்தான் எவ்வளவு அக்கறை.

அன்று ஓரிக்கையில் மகா மண்டபம்

"எப்படி?"

"நான் இன்னொரு நாள் உன்னோட வீட்டுக்கு வரட்டுமா. உன் வீட்டைப் பத்திச் சொல்லேன். உன் வீட்டுத் தோட்டத்தை எனக்குச் சுத்திக் காண்பியேன். உன்னோட மேரேஜ் ஆல்பத்தைக் காட்டேன். உன்னோட எம்பிராய்டரி வொர்க் எல்லாம் காட்டேன். ஒருநாள் முழுக்க உன்னோட இருக்க ஆசைப்படறேன்"

"சரி" என்றாள்.

அதேபோல அவளது வீட்டுக்குச் சென்றேன். வீட்டை துல்லியமான சுத்தத்தில் வைத்திருந்தாள். வெளியே லானில் அழகாக பூந்தோட்டம் அமைத்திருந்தாள். என்னைப் பார்த்ததும் சிரித்தாள்.

சிரிப்பில் லேசான ஏக்கமும், கவலையும் இருந்தன. அவளது கடந்த காலத்தை விட இந்த நிமிட வாழ்க்கைதான் முக்கியம் என்று புரிய வைத்தேன். நினைவுகள் எத்தனைப் பசுமையாக வேண்டுமானாலும் இருக்கலாம். எத்தனை சுகமாகவும், சுமையாகவும் இருக்கலாம். ஆனால் இந்த நிமிடம் வாழ்கிற வாழ்க்கை பின்னால் இன்னொரு பழைய நினைவுகளை உருவாக்கித் தரும். அப்படித் தருகிறபோது கிடைக்கப் போகிற வலி இன்னும் அதிகமாக இருக்கும். அதனால் இந்த நிமிடம் என்ன வாழ்க்கை வாழ்கிறோமோ அதை நன்றாக, நறுவிசாக, திருப்தியாக வைத்துக் கொண்டாலே போதும். வாழ்க்கை தெள்ளத் தெளிவாக நீரோடை போலச் செல்லும் என்று அவளிடம் பேசினேன். அவள் கனவில் இருப்பவள் போல முதலில் கண்கள் விரிய ஆச்சர்யமாகக் கேட்டுக் கொண்டிருந்தாள். மெல்ல மெல்ல நிஜம் புரியவும், அழுத்தமாகப் பார்த்தாள். பின் மீண்டும் கண்களை மூடிக் கொண்டாள். சட்டென்று எழுந்து என் கைகளைப் பிடித்துக் கொண்டாள்.

"என்ன ஆனந்தி?"

"ரொம்ப தாங்க்ஸ் தேவா."

"எதுக்கு?"

இத்தனை நாள் நான் சரியான குழப்பத்துல இருந்தேன். இப்ப எது நிஜம்னு நீ எனக்குப் புரிய வைச்சிட்டே. நானும் அவரும், குழந்தைகளும் உன் வீட்டுக்கு ஒரு நாள் வரப்போறம்."

''வெல்கம்'' என்றேன். எழுந்தேன்.

வெளியே வந்தபோது சிட்அவுட்டிலிருந்து கையசைத்தாள். அடுத்த ஞாயிறு வீட்டுக்கு வந்தாள். பேசிக் கொண்டிருந்து விட்டு, சாப்பிட்டுச் சென்றார்கள். போகும்போது என்னிடம் வந்தாள். மெதுவான குரலில் சொன்னாள்.

"தேவா நான் இப்ப நல்லா இருக்கேன். எந்தக் குழப்பமும் இல்லை."

"குட்"

"ஆனா ஒரு. விஷயத்தை இழந்துட்டேன்"

"என்ன சொல்ற?"

''என்னோட அறியாமையை, இன்னொசன்ஸை நான் இழந்துட்டேன். என்னோட புத்திசாலித்தனம் என்னோட அப்பாவித்தனத்தைத் தின்னுடுச்சி தேவா"

நான் சொல்லவில்லை. அவள் சொல்லிவிட்டாள். நான் முகத்தைக் கவிழ்த்துக் கெண்டேன். ஏனோ அழ வேண்டும் போலிருந்தது. அழுகை வரவில்லை. ●

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

## 69. முத்தமிழ்க் காவலர்

ஒழுக்கம்;
ஒண்டமிழ்;
இவ்
இரண்டையும்...

ஒருசேர ஒருவர்
ஓம்புவா ராயின் - அன்னணம்
ஓம்பும்
ஒருவரின்...

ஆயுள் -
அனேக ஆண்டுகளாய் நீளும்;
வான்விழுந்த பிறைபோல் -
கூன்விழுந்து நிற்காது தோளும்;
இந்த
இனிய -
முதுரைக்கு விளக்கமாய் நின்றார்
முத்தமிழ்க் காவலர் நாளும்!

●●●

யாண்டும் காத்தார் -
யாக்கை; மனம் -
போனபடி விடவில்லை - அதன்
போக்கை; அவரது -
தேகம் நிகர்த்திருந்தது -
தேக்கை;
கொடுத்தால்
காப்பார் -
வழங்கிய
வாக்கை;

ஆதலால் தான் -
அருந்தமிழ் அன்னை...
தானமரும் -
தவிசாகத்
தேர்ந்தாள் - அந்தத்
திருமகனின் நாக்கை!

●●●

ஒரு நூறைத் தொட -
ஓரைந்தே குறைவு;

## கவிஞர் வாலி

**சென்ற நூற்றாண்டில்,
தமிழ் மண் தரணிக்கு வழங்கிய
மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!**

ஜூனியர் விகடன் 8.7.2003



அதற்குள்
அந்தகன்-
அவசரப்பட
ஆனது அவரது மறைவு!

'பவுண்டரி'
'சிக்ஸர்'
என - பந்துகளை
எதிர் கொண்டு -
விளாசு விளாசு என
விளாசி...

செஞ்சுரி போடவேண்டிய
சமயத்தில் -

விக்கெட்
வீழ்ந்தாற் போல் -
விசுவநாதம்
வீழ்ந்தார்;

பூமிப் -
பந்துள்...

உண்டும் உயிர்த்தும்
உழைத்தும் உலவிடும் -
வண்டமிழர் யாவரும்
வருத்தத்தில் ஆழ்ந்தார்!

காலனைக்
கண்டு -

கி.ஆ.பெ. விசுவநாதம்
கிஞ்சித்தும் அஞ்சினா ரில்லை;

கல்லறை
கட்டி வைத்துக் -
காத்திருந்தது
காட்டும் ...

அவரது
ஆன்மஞானத்தின் எல்லை!

●●●

சோழிய வேளாளர் மரபின் -
சோதி துலங்க...

பெரியண்ணப் பிள்ளை - எனும்
பெருமகனாரும்;
சுப்புலட்சுமி - எனும்
சுடர்மிகு மாதரசியும்;

நோற்ற -
நோன்பின் பயனாய்...

அவர்களது
அருமந்த
மகவாய்
மண்மிசை தோன்றினார் -

கீர்த்திமிகு
கி.ஆ.பெ. விசுவநாதம்;
தாள்கொண்டு
தரை உலவிய தமிழ் வேதம்!

●●●

பள்ளியில் - அவ்வளவாகப்
பயில வில்லை;
ஆனால்
அவர்போல்
அருந்தமிழ் ஆழியில்
ஆழங்கால் பட்டவர்...

படிமிசை - நாம்
பார்ப்பதற் கில்லை;

ஆம்!
அவர்...

கால்முளைத்த - தமிழ்க்
கல்லூரி;



சதா - அவரது
செந்நா - ஒரு
பூந்தமிழ்ப்
புனல்போல்
பிறங்கிக் கிடக்கும்
புதுப்புதுச் சொல்லூறி!

வணிகர்;
வைத்தியர்;
வண்டமிழ் வாணர்;
வைதிகர்;
என - அவருக்கு
ஏகப்பட்ட முகங்கள்;
தமிழுக்கும்;
தமிழர்க்கும்;
அவரால் விளைந்தன
அனேக சுகங்கள்:
இந்தி
இடம் பெற்ற -
வானொலியின் ஆதிக்கத்தை
வகிர்ந்தன அவரது நகங்கள்;

முத்தமிழ்க் காவலர்
முத்தமிழ்ப் பாவலர்;
முத்தமிழ் நாவலர்;

என்றெல்லாம்
ஏத்தி...
அவரை
ஆராதித்தன
அம்புவி வாழும்
அருந்தமிழர் அகங்கள்!

●●●

தாழ்த்தப் பட்டோரை -
திருக்கோயில் கூட்டிச் சென்றார்;
சாதி -
சமய -
பேதா
பேதங்களை -
சமதரும வாளால்
சேதித்து நின்றார்;

வள்ளுவமே
வண்டமிழர்
வாசிக்க வேண்டிய
வேதம் என்றார்;

முத்த தமிழ்க் குடியின்
மூடத் தனங்களை - அறிவு
பூத்த தர்க்கங்களால்
பொழுதும் கொன்றார்!

●●●

பெரியார் மெச்சிய
பெரியார்;
எவர்மீதும்
எதற்கும்
எக்காரணம் கொண்டும்
எரியார்;
தும்பைப்பூ நிகர்த்த
தூய வெள்ளாடையைத் தவிர -
வேறு
வண்ண ஆடைகளை தரியார்;

அறம்
ஆகாது -
எனச் சுட்டும்.
எச் செயலையும் புரியார்!

●●●

பல்வேறு
பசுந்தமிழ் நூல்களை யாத்தார்;
சிறைபுகுந்தும்
செந்தமிழைக் காத்தார்;

'வண்டமிழுக்கு - ஒரு
வழு -
வாராதிருக்க
வளர்த்தார் புலவர் குழு!'

என
எல்லோரும் -
போற்றும்படி
புகழ் பூத்தார்;
ஒருநாள் -
உயிர் நீத்தார்!

●●●

அவர் நூல்கள் அனைத்தும் -
அருந்தமிழ்ச் சாத்திரம் -
அளவின்றி அளக்கும் - ஓர்
அட்சரப் பாத்திரம்!
அதை - ஓர்
அட்சயப் பாத்திரமாய்...

எல்லோர்க்கும் பயன்பட
ஏந்தி நிற்கிறார் -

அவரது
அன்பிற்குரிய...
மகள் -
மணிமேகலை;
தனயையால்
தழைக்கிறது -
தந்தையால்
தழைத்த தமிழ்க்கலை!

## 70. மக்கள் தலைவர்.

'மூப்பனார் - என்
தோப்பனார்!'

என்று - நான்
எதுகை கருதித்தான் பாடினேன்;
பிறகு -
பெற்ற தாதைபோல் -



அவர் காட்டிய
அன்பு கண்டு...

தந்தை வீடென்றே - அவர்
திருமனையை நாடினேன்;
புத்திரன் போலவே
புகழாரம் சூடி - அந்த
உத்தமன் நிழலில்
உளம்குளிர உட்கார்ந்து...

பெருக்கெடுத்த - அவரது
பாசப் புனலில் ஆடினேன்!

●●●

தலைமுறை தலைமுறையாய் -
தனவான்;
ஆயினும்
அவன் -
தருக்கும் செருக்கும்
தலைக்கேறாக் கனவான்!

'எளிமையானது - மிக
வலிமையானது!

என
எடுத்துக் காட்டிய -

காந்தி;
காமராசர்;
ஆகியோர் பின்னே
அவன்மனம் போனது!

அளவோடு பேசுவான்;
அதிகம்பேசக் கூசுவான்;
அவனது



அபிப்பிராயங்களை -
எதிர்த்தாலும்
ஏற்றாலும்...

முனியாது - மெல்லிய
முறுவலை வீசுவான்!

●●●

அவனுக்கு
அமைந்திருந்தது -
மூன்று கை;
மூன்றாம் கை ஈகை!

வண்மை மிக்கவன்;
உண்மை மிக்கவன்;
பதவி என்றால் - நாணும்
பெண்மை மிக்கவன்!

அந்த -
அரிய மனிதனின்...

பாதத்தின் கீழிருந்தது
பதவி;
ஆயினும்
அவன் -
அரும்புகழ் உற்றான் - அதை
அடுத்தவர்க்கு உதவி!

தனக்குத்
தானே -
மகுடம் சூட்டிக்கொள்ள - அவன்
மனம் ஒவ்வாது;
அவனது
அன்புமனம் - ஒரு
சாக்கடை யல்ல; அது -
சதா மணக்கும் சவ்வாது!

●●●

மெய்யாகவே - அவன்
மக்கள் தலைவன்;
தொண்டனோடு
தொண்டனாக - பணி
ஆற்றவேண்டி
அவனும் அலைவன்!

குறுகிய காலத்தில் - ஒரு
கட்சியை உண்டாக்கினான்;
ஒவ்வொரு தொண்டனையும் -
ஒரு வண்டாக்கினான்;
தனது கட்சியை
தமிழர் மோந்து மகிழும் -
செங்கமலச்
செண்டாக்கினான்;
'மானம் காப்போம்' எனும்
மகத்தான கொள்கையை -
கன்னித் தமிழர்க்குக் - கற்
கண்டாக்கினான்!

●●●

கோதிலா நிலக்கிழார் -
கோவிந்தசாமி மூப்பனாருக்கும்;
சாந்தம் சவுந்தரியம் நிறைந்த -
சரஸ்வதி அம்மாளுக்கும்;
உத்தம புத்திரனாக - அவன்
உதித்தான்;
கர்ம வீரர்
காமராசரையே -
மகோன்னதத் தலைவராக - அவன்
மதித்தான்;
'கபிஸ்தலம்
காமராசர்!'
என
எல்லோரும்
எஞ்ஞான்றும்

ஏத்தும் படி...
தன்பெயரை - அவன்
தமிழர் நெஞ்சில் பதித்தான்;

வாய்மையும் -
நேர்மையும் -
பொதுவாழ்வில்
பின்பற்றப்பட வேண்டிய...

நெறிகள் - என
நாளும் அவன் விதித்தான்;
அந்தகாரம் அப்பிக் கிடந்த
அரசியல் வானில்...
கருப்புச் சூரியனாய் - அவன்
கண் திறந்தான்;
சுத்த
சுயம் பிரகாச -
ஒளி வீசி
ஒவ்வொரு நாளும் சிறந்தான்!
●●●
காங்கிரஸ் - அவன்
கைக்குள் இருந்தது;
பாரதம் - அவன்
பைக்குள் இருந்தது;
ஆயினும் -
அவனிடத்தில் அழுக்கில்லை;
நாளும் பயின்ற
நேரிய நடையில் வழுக்கில்லை!

தேச பக்தி;
தெய்வ பக்தி;
தமிழ் பக்தி;
தமிழ் மண்ணின்மேல் பக்தி;
இந்த நான்கும் - அவன்
இமைதிறந்த பரம்பரையில்...
முத்தோர் காத்து நின்ற
முக்கிய குணங்களாகும்;
அவனது



ஆன்றோர் -
அள்ளி அள்ளி
அருளிய...

நன்கொடைகளே - இந்த
நாட்டிலுள்ள - பல
சங்கீத வித்வான்களின்
சேமிப்புப் பணங்களாகும்!
●●●
திருவையாறு
தியாகப் பிரம்மத்தின் -
உற்சவத்தை
உயர்வாக நடத்தினான்!
பல - தமிழ்ப்
பண்டிதர்களின்
வறுமையைத் - தன்
வண்மையால் கீழே கிடத்தினான்!

மா மனிதன்;
மனிதரில் புனிதன்;
கருப்பையா மூப்பனார் - எனும்
கன்னித் தமிழர் நேசன்;

அந்த -
அரிய மனிதனை....
நித்தமும் -
நினைவு படுத்துவது -
தாதை போலவே -
தண்ணிய -
குணம் படைத்த -
கோவிந்த வாசன்!

- இன்னமும் இருக்கின்றார்கள்

"தெருவுல வித்தை காட்றவன் டி.வி.யை வச்சுக்கிட்டு என்ன வித்தை காட்றான்?"

"பாம்பு-கீரி சண்டை வீடியோவை ஜனங்களுக்குப் போட்டுக்காட்டி தாயத்து விக்கறான்"

- பர்வதவர்த்தினி





"டாக்டர், ஆபரேஷனுக்கு முன்னாடி குளிச்சிடட்டுமா?"

"தேவையில்லே... எப்படியும் உங்களை வீட்டுக்கு எடுத்துட்டுப் போனவுடனே குளிப்பாட்டு வாங்களே!"

- டி.என்.பாலகிருஷ்ணன்

படங்கள் : **வாசன்**

"யோவ், ஏன்யா நம்ம கட்சியில எல்லாரும் பெருசா நகம் வளர்க்கறாங்க?"

"நீங்கதானே தலைவரே, தீவிர வாதத்தைக் கிள்ளி எறிய எல்லாரும் உதவணும்னு போன மாதம் அறிக்கை விட்டீங்க.."

- டி.என்.பாலகிருஷ்ணன்



# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

## 71. டி.பி.ராஜலட்சுமி

உளமையாயிருந்த நாளிலும் சரி;
உதடு முளைத்த நாளிலும் சரி;

தமிழ்சினிமாவின்
தலையெழுத்தைத் -
தீர்மானித்தது
திருவையாறு ராஜலட்சுமி;

அற்றை நாளில்
அவருக்குத் -
துணை நின்றது
தைரிய லட்சுமி!

வாழா வெட்டியாய் - பிறந்த
வீட்டுக்கு வந்தவரால்-
வாழ்வு பெற்றது
வெள்ளித் திரை; இது-
உயர்வு நவிற்சியல்ல;
உண்மைக் கதை!

●●●

தஞ்சைத் தரணியில் -
திருவையாறில்....

ஓர்
அந்தணர் குடும்பத்தில்
அவதரித்த பெண்;
அவளது
ஆடலை பாடலை-
சிலாகித்து
சிரக்கம்பம் செய்தது-
சினிமாவை நாடகத்தை
சினேகித்துக் கிடந்த செந்தமிழ் மண்!

பஞ்சாபகேச அய்யர்;
மீனாட்சி அம்மாள்;
தம்பதியின்-
திருமகள்;
வாழ்க்கைப்பட்ட இடத்தில்
வரதட்சனை காரணமாக -
விரட்டப்பெற்று-தாய்

## கவிஞர் வாலி

**சென்ற நூற்றாண்டில்,
தமிழ் மண் தரணிக்கு வழங்கிய
மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!**

ஜங்ஷன் 15.7.2003



வீடு திரும்பிய ஒருமகள்;
அவளை
ஆட்கொண்டாள் கலைமகள்;
பின்-
அவள்
ஆனாள்-
கலைத்தாயின்
தலைமகள்!

●●●

ஆண்டவன்
அருளிய -
சங்கீதமும்
சாரீரமும் - அவளை
சபையில் ஏற்றியது; ஜன -
சமுகம் போற்றியது!

நாடகங்களில்
நாயகி ஆனாள்;
அற்றை நாளில்
அமோகமாய் விளங்கிய...

கன்னையா
கம்பெனியில்
கால்பதித்து - ஒரு
கானக் குயிலாகிப் போனாள்!

டி.பி.ராஜலட்சுமி -
டிராமா நடிகையாயிருந்து...
செந்தமிழர்
செவிகளில் -
தேனை வார்த்தாள்; வறுமையைத்
தன் துணிவால் பேர்த்தாள்;
வி.ஏ.செல்லப்பாவுடன்
வள்ளியாகத் தோன்றி-
அரங்கம் தோறும்
அட்டகாசமாக ஆர்த்தாள்!

●●●

ஊமைப் படங்களில்-அவள்
உலாவந்த நாளில்...
பேசாப் படங்கள்
பேசின அவள் கீர்த்தியை;
மௌனத்தினாலேயே-அவள்
மாந்தரை -
அழவும்
ஆனந்திக்கவும் வைத்த நேர்த்தியை!

நவரசங்கள் ததும்பிய
நடிப்பை...
விழிகளால்
வெளிப்படுத்திய -
ராஜலட்சுமியை
ரசித்து ரசித்து...

உச்சி முகர்ந்தது
ஒண்டமிழ் நாடு;
பிறந்த குழந்தைகளுக்கு-அவள்
பேரை வைத்து-ஒருவகைப்
பெருமிதம்
பெற்றது...

அற்றை நாளில்
அனேகர் வீடு!

●●●

பிறந்தது-வாய்
பேசும் படம்;

அதிலும்
அந்த -
மாதரசிக்குத்தான்
முதல் இடம்!

உதடுகள் அசைத்து -
உரையாடல்களை உமிழ்ந்த...

முதல் தமிழ்ப்படம்-எனும்
முத்திரை குத்தப் பெற்ற-
'காளிதாஸ்'-அவளைக்
கதாநாயகியாய் ஏற்றது;
ஒரு
வாழா வெட்டியான
வேதியப் பெண்ணிடம்-தன்
வரிசையைக் காட்டமுடியாது
விதி தோற்றது!

●●●

தொய்ந்து -
துவண்டுபோன...
அற்றைய நாளைய
அபலைப் பெண்டிர்க்கு
அவள் ஓர்
ஆதர்சப் பெண்மணி ஆனாள்;
பாரதியின்
புதுமைப் பெண்ணுக்கு -
டி.பி.ராஜலட்சுமி-ஒரு
திருட்டாந்தமாகிப் போனாள்!

●●●

'சினிமாராணி' என
சிந்து பாடியது...

அவளைப் போற்றி
அருந்தமிழ் நாடு;
அவளது
அருமை பெருமைகளை-



எழுதி எழுதி
ஏற்றம் பெற்றது ஏடு!

●●●

அச்சம் தவிர்த்த -அந்த
ஆரணங்கு...

படத்துறையில்-பெண்
பங்குபற்றி-இந்நாளில்
ஆற்றும்-
அனேகத் திறமைகளுக்கு...

பிள்ளையார் சுழியைப்
போட்ட பெருமைக்கு-
உரியவள் ஆனாள்; மிகமிக -
அரியவள் ஆனாள்!

●●●

தமிழ்த்
திரையுலகின்...

முதல் கதாநாயகி;
முதல் கதாசிரியை;
முதல் இயக்குனர்;
முதல் தயாரிப்பாளர்;

என
எல்லாப் பரிமாணங்களையும்...

காட்டிய-முதல்
காரிகை;

டி.பி.ராஜலட்சுமியின்
திருவுருவத்தை -

மாந்தர்
மனங்களில்...

வண்ணம் போகாத ஓவியமாய் -
வரைந்து வைத்திருக்கிறது -
காலமகள்
கைக்கொண்ட தூரிகை!

●●●

'பெண்மை வென்றது' எனப்-
பாட்டுப் பாடி...
வானுலகில்
வாழும்-
பாரதிப்
புலவன்...
மீசையை முறுக்கினான்; தன்
முண்டாசை இறுக்கினான்!

## 72. ஜி.ராமனாதன்

பாரதியார்
பாட்டுக்கு...

ராமனாதய்யரை மிஞ்சி -
ராகம் அமைத்தார் இல்லை!'

இசைஞானி
இளையராஜா-முனம்
இசைத்தார் என்னிடம்
இன்னணம் ஒரு சொல்லை!

அவ்வாறு
அற்றை நாளில்...

ராமனாதன் - ஒரு
ராக ராஜாங்கமே நடத்தினார்;

இசை நறவத்தை
இருசெவிகளில் நிரப்பி-
இயக்கமற்ற நிலையில்
இருப்பது போல்...



அருந்தமிழரை - அவர் ஓர்
அவச நிலையில் கிடத்தினார்!

ராமனாதன் சொந்த ஊர்-
ராஜாமடம்;
அவரை-இவ்
அவனிக்கு அளித்து
அவ் வூர் ஏற்றது-வரலாற்றில்
அதற்கென ஒரு தனி இடம்!

நஞ்சை
புஞ்சை மட்டுமல்ல-
பண் விளையும்
மண்-
என
ஏற்றம் பெற்ற
தஞ்சை மாவட்டம்தான்
தந்த கலைஞர்கள் எத்துணை?
ராமனாதன் பிறந்த
ராஜாமடத்தையும்-
சேர்த்து எண்ணினால் - ஒரு கணக்கில்
சொலப்போமோ? அத்துணை!

●●●

பால்ய வயதிலேயே
பிதாவை இழந்தவருக்கு...
கான்மும்-அதுபற்றிய
ஞானமும்-
கைகொடுத்தது; அவரைக்
காலமும் கண்டெடுத்தது!

ராஜா மடத்து



ராமனாதன் - சங்கீத
ராஜா வானார்;
ரசிகர்களின் மனங்களுக்குள்
போனார்!

காலப் போக்கில்
கால் ஆர்மோனியத்தில் -
கரை கண்டார்; பெருங்
கீர்த்தி கொண்டார்!

அந்நாளைய -
அருமை பெருமைமிக்க -
நாடக -
நாயகர்களின் மேடைகளில் -
அவரது
மேன்மை விளங்கியது;
கறுப்பு வெளுப்பு
கட்டைகளில் - அவரது
விரல்கள்
விளையாடி...
அற்புதம் நிகழ்த்த
அரங்கமே குலுங்கியது!

பிர்க்கா சாரீரத்தில் -அவர்
பின்பாட்டுப் பாட...
ராமனாதன் துணையில்-அனேக
ராஜபார்ட்டுகள்-
பெற்றனர் பேர்; பாட்டால்-
புளகம் எய்தியது ஊர்!

●●●

சினிமா - அவரை
சுவீகரித்துக் கொண்டது;
அவரது இசையை -
அது -
வாங்கி வாங்கி
வயிறு முட்ட உண்டது!

அனேக
ஆண்டுகள் -
கோடம்பாக்கத்தில்-அவர்
கொடி பறந்தது;
அமுதமென-இசை
அருவி-அவரது
விரல்வழியும் குரல் வழியும்
வேளைக்கு வேளை பிறந்தது!

●●●

பாகவதர் படங்கள் - அவரது
பாடல்களால்...

மேலும் -
மேன்மை பெற்றன;
தொல்லிசையும்-
மெல்லிசையும்-
அவரால்
அழியாப் புகழை உற்றன!
பாகவதர் நடித்த
பழைய அம்பிகாபதி;
சிவாஜி நடித்த -
சமீபத்திய அம்பிகாபதி;
இரண்டும் - ராமனாதனின்
இசையில் வந்தவை;
பாபநாசம் சிவனின்
பாடல்களுக்கும்;
கண்ணதாசன்; கு.மா.பா.;
கே.டி.சந்தானம்; மருதகாசி;
முதலியவர்களின்
முத்தமிழ்ப் பனுவல்களுக்கும்;
ஜி.ராமனாதனின் விரல்கள்தான்-புதிய



ஜீவனைத் தந்தவை!

●●●

'வாராய்! நீ-
வாராய்!'
'உலவும் தென்றல்
காற்றினிலே!'
'யாரடி நீ மோகினி!'
'முல்லை மலர் மேலே'
'வசந்தமுல்லை போலே'
'காற்று வெளியிடை -
கண்ணம்மா'
'சிந்தனை செய் மனமே'
'ஜக்கம்மா வேறில்லை -
திக்கம்மா'
மற்றும்
மறக்க முடியாத...
'தூக்குத் தூக்கி'
திரைப்படப் பாடல்கள்;
ஒன்றா? இரண்டா?
ஒரு பட்டியல் போட?
காலத்தால் முடியுமா - இந்த
கானங்களைச் சாட?

●●●

டி.எம்.சௌந்தரராஜன்;
சீர்காழி கோவிந்தராஜன்;
இந்த
இருவர் மீதும்...

புகழ்வெளிச்சம்
பரப்பியவர்-
ராமனாதன்; சுக-
ராகங்களின் நாதன்!

எம்.ஜி.ஆர்.
சிவாஜி;
இந்த
இருவரும்-

பங்கு
பற்றிய
பல்வேறு
படங்களில்...

ராமனாதனின்
ராக முத்திரை-
பளிச்செனத் தெரியும்; இசைப்-
பிரியர்களுக்கு இது புரியும்!

எம்.ஜி.ஆரின் 'மதுரைவீரன்';
சிவாஜியின் 'கட்டபொம்மன்'
இவை
இரண்டும்-ராமனாதனின்
இசைவண்ணம் கொண்டவை ; நம்
இதயங்களை உண்டவை!

●●●

இத்தகு
இசை மேதை...

சொந்தப்படம் எடுத்தார்;
சுருண்டு படுத்தார்;

ஆயினும்-
அவர்போல்-பல
ஆண்டுகள்
ஆயினும்...
அழியாத ஓர் இசை மாலையை-
ஆர் தொடுத்தார்?

-இன்னமும் இருக்கிறார்கள்

## ப க் தி ச் சு வை

ஸ்ரீராமனின் பட்டாபிஷேக விழா கோலா கலமாக நடந்தது. அரண்மனையின் பிரதான அறையில், குடும்பத்திலுள்ள அனைவரும் பகல் உணவு முடித்துக்கொண்டு ஆசுவாசமாக அமர்ந்து உரையாடிக்கொண்டிருந்தனர்.

ஸ்ரீராமனின் பாதங்களை மென்மையாகப் பிடித்துக் கொண்டிருந்தாள் சீதை. அனுமன், வழக்கம்போல் பவ்யமாக தன் எஜமானனின் காலடியில் அமர்ந்திருந்தார்.

# விதைத்ததுதான்

"அன்பே, என் மனதில் பல நாட்களாக ஒரு சந்தேகம். அதைத் தாங்கள்தான் தீர்த்து வைக்க முடியும். ராவணன் ஏன் என்னைத் தூக்கிச் சென்றான்? நான் உங்களை ஏன் பிரிந்தேன்? நான் செய்த தவறுதான் என்ன?"

ஸ்ரீராமன் சில கணங்கள் மௌனமாக இருந்தார். பிறகு மெல்லக் கூற ஆரம்பித்தார்... "நான் கூறப் போகும் பதிலைக் கேட்டு நீ மனம் நோகக்கூடாது. புனிதமான லட்சுமண னின் மனதை நீ நோகடித்தாய். எப்படித் தெரியுமா? "லட்சமணா காப்பாற்று" என்ற குரல் என்னுடையதல்ல என்றும், நான் என்னைக் காப்பாற்றிக் கொள்ளும் அளவு பலசாலி என்றும் அவனுக்குத் தெரியும். அதனால்தான் அந்தக் குரலைக் கேட்டு அவன் என் ஆணைக்குட்பட்டு இடத்தை விட்டு நகராமல் இருந்தான். ஆனால், நீ அவனை நம்பவில்லை. நான் இறந்து விட்டால் உன்னை அடையலாம் என்ற கெட்ட எண்ணத்தில்



போனபோது நான் என் தாயாக நினைத்து வணங்கிக் கொண்டிருக்கும் அன்னை சீதா என்னை ஏன் அத்தனை கொடிய சொற்களால் கடிந்து என் மனதைப் புண்படுத்தினார்? இப்போது நினைத்தாலும் அந்த வார்த்தைகள்...." என்று நிறுத்தினார்.

ஸ்ரீராமன், லட்சுமணனை தன் அருகே அன்புடன் அழைத்து அணைத்துகொண்டார். பிறகு, "நம் தந்தை இறந்தவுடன் என்னை மீண்டும் அயோத்திக்கு அழைத்துச் செல்வதற்காக பரதன் காட்டிற்கு வந்த போது, நீ என்ன சொன்னாய், ஞாபகம் இருக்கிறதா? என்னையும், சீதாவையும் மற்றும் உன்னையும் கொல்வதற்காகத் தான் வந்திருக்கிறான் என்று கூறி, அவன் மனதைப் புண்படுத்தினாய் அல்லவா? அதைக் கேட்டு பரதன் மனம் எத்தனை புண்பட்டிருக்கும்? நாம் விதைத்தது தான் அறுவடையாகும். புரிந்ததா?"

# அறுவடையாகும்!

தான் அவன் அப்படிச் செய்வதாக அவனை நீ குற்றம்சாட்டினாய். இந்தக் கொடிய வார்த்தைகளின் விளைவுதான் ராவணனின் துன்புறுத்தலுக்கு நீ ஆளானாய். மற்றவர்களை நாம் சொல்லாலோ செயலாலோ துன்புறுத்தும்போது நாம் நம் மன நிம்மதியை இழக்கிறோம். நம் தீய செயலுக்கு நாம் கொடுக்கும் விலை தான் துன்பம்."

இவ்வார்த்தைகளைக் கேட்டதும், சீதையின் கண்களிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர் பெருகியது. லட்சுமணனிடம் மானசீகமாக மன்னிப்புக் கேட்டுக் கொண்டிருந்தது அவள் மனம்.

பின்புறம் நின்று கொண்டிருந்த லட்சுமணன் மெல்ல ஸ்ரீராமனின் அருகில் வந்து, "என்மேல் தாங்கள் வைத்திருக்கும் நம்பிக்கைக்கு நான் மிகவும் கடமைப் பட்டிருக்கிறேன். நீங்கள் மானைத் தேடிப்

லட்சுமணன் பரதனை நோக்கி மன்னிப்புக் கேட்டவுடன், இருவரும் தழுவிக் கொண்டனர். சகோதரர்களின் உண்மையான அன்பைக் கண்டு எல்லோரும் மனம் நெகிழ்ந்தனர்.

-கலாமூர்த்தி, சென்னை-4.

# இவர்கள் இன்னும் இருக்கின்றார்கள்

## 73. எஸ்.வி. சகஸ்ரநாமம்

கொங்குதமிழ் -
கொஞ்சுகின்ற...

சிங்காநல்லூர் - எஸ்.வி.
சக்ஸ்ரநாமத்தின் ஊர்;
வேதியர் பெருந்தகை
வெங்கட்ரமணன் -
பார்வதி அனைய
பார்வதி அம்மாள் -
ஆகிய இருவரும்
அவரைப் பிள்ளையாய்ப் -
பெற்றதால்
பெற்றனர் பேர்!

• • •

சமூகம்;
சரித்திரம்;
புராணம்;
புதினம்;
என -
ஏராளமான -
நாடகங்களை
நாட்டுக்கு -
நல்கிய
நல்ல மன்றம் தான்...

சகஸ்ரநாமத்தின்
'சேவா ஸ்டேஜ்';
அது -
ஆட்சிபுரிந்த காலம்தான்...

நாடும் ஏடும்
நாளும் போதும்
கொண்டாடிய
நாடகக்கலைக்கு-ஒரு
கோல்டன் ஏஜ்!

'பிரசிடெண்ட்
பஞ்சாட்சரம்'
'புதிய



பாத்தை'
'போலீஸ்காரன் மகள்'
'நாலுவேலி நிலம்'
'தேரோட்டி மகன்'
'மல்லியம்
மங்களம்'
'வடிவேலு
வாத்தியார்'
'பாரதியின்
பாஞ்சாலி சபதம்'
'பாரதியின்
குயில்'
என
எண்ணற்ற நாடகங்களை...

மேடையேற்றி -
மூன்றாம் தமிழைவாழவைத்தவர்;

நாடக ரசிகர்களை
நல்ல சிந்தனைகளில் -
ஒவ்வோர்
அந்திப் பொழுதும்
ஆழ வைத்தவர்!

• • •

பி.எஸ். ராமையா -
தி. ஜானகிராமன் -
கு. அழகிரிசாமி -
கோமல் சுவாமிநாதன் -

என - ஓர்
எழுத்தாளர் கூட்டமே -
சகஸ்ர நாமத்தை
சுற்றி யிருக்கும்;
அவரது சிந்தனையும்
அவர்களது -
புதிய கருத்துக்களைப்
பற்றி யிருக்கும்!

சிவாஜி கணேசன்;
பண்டரிபாய்;
முத்துராமன்;
தேவிகா;
குலதெய்வம் ராஜகோபால்;
கே.விஜயன்;
இத்தியாதி...
இத்தியாதி...

படவுலக
பிரபலங்களும் -
சேவா ஸ்டேஜில்
சேவை புரிந்தவர்களே;
ஆசானைப் போல் ஆசிரயித்து -
அவர்கள் அனைவரும் -
சகஸ்ரநாமத்தின் பால் -
செழுமமழைபோல்...
அளப்பரிய -
அன்பைச் சொரிந்தவர்களே!

• • •

எட்டமுடியாத உயரத்தை
எட்ட -
எத்துணையோ பேருக்கு - அவர்
ஏணியா யிருந்தவர்;
கவலைக் கடலில் விழுந்து
கரைசேர முடியாமல் -
தத்தளித்த பல கலைஞர்க்கு-அவர்
தோணியா யிருந்தவர்!

சினிமா - என்னும்
சாம்ராஜ்ஜியத்தில் நுழைய -
அனேக புதியவர்க்கு -
அவர் நாடகம்தான் பாஸ்போர்ட்;



புகழ்வானில் -
பறப்பதற்கு -
எஸ்.வி.எஸ். வீடுதான் - ஓர்
ஏர்போர்ட்!

● ● ●

சகஸ்ர நாமமும் -
சினிமாவில்...

பதாகை கட்டிப்
பறந்தவர் தான்;
பல்வேறு படங்களில்;
பல்வேறு பாத்திரங்களில்;

'மேனகா' காலம்தொட்டு -
முழங்கிச் சிறந்தவர்தான்!
ஆதியில்
அவர்...

டி.கே.எஸ். சகோதரர்களின்
டிராமாக்களில் நடித்தவர்;
படிப்படியாகப்
புகழிடத்தைப் பிடித்தவர்!

கலைவாணரின் -
கெழுதகை நண்பர்;
அவரைப்போல்
ஆருமில்லை -
என்.எஸ்.கே.யின்
எண்ணம் கவர்ந்த அன்பர்!

கலைவாணர் -
காராகிரகம் சென்றபின்...
என்னெஸ்கே நாடக மன்றத்தை
எடுத்து நடத்தியவர் -
சகஸ்ர நாமம்; அவரால்
சீவித்திருந்தது கலைவாணர் நாமம்!

● ● ●

'பைத்தியக்காரன்'
'பராசக்தி'
'மணமகள்'
'மர்மயோகி'
'வாழ்க்கை'
'உரிமைக் குரல்'
'போலீஸ்காரன் மகள்'
'பிரசிடெண்ட் பஞ்சாட்சரம்'
ஆகிய -
அனேக திரைப்படங்களில்...

எஸ்.வி.எஸ். - தான்
ஏற்ற பாத்திரங்களுக்கு -
உயிர் -
ஊட்டியவர்;
நாடக மேடையிலும்
திரையிலும் - தன்
நுண்மாண் நுழைபுலம்
காட்டியவர்!

● ● ●

எஸ்.வி.எஸ்.
ஏற்றிவைத்த விளக்கு...

இன்னும் - பல நடிகர்களின்
இல்லங்களில் -
ஒளிவீசிக் கொண்டிருக்கிறது;
அவரால் -
வெளிச்சம் கண்டிருக்கிறது!

கலைவாணரைப் போல்-அவரது
கையும் - ஓடிப்போய்
நலிந்தார்க் கெல்லாம் -
நன்மை செய்யும்; அவர் -
பார்வையிலே - ஒருவகைப்
பாசமழை பெய்யும்;
வாடிய ஒரு நடிகனின் -

வாழ்க்கைப்பயிர் அதில் உய்யும்!

சீவித்தவரை -
சகஸ்ரநாமம் - தன்
சக்திக் கேற்ப - வழங்கினார்
சகலருக்கும் சேமம்!

## 74. ஒய்.ஜி.பி.

'சில நேரங்களில் -
சில மனிதர்கள்!'
ஜயகாந்தனின் கதையைக்கொண்டு-
ஜயித்த படம்;
அதில்
அட்டியின்றி உண்டு -
ஒய்.ஜி.பி.க்கு
ஒரு தனி இடம்!

ஆதியில்
அவர் -
பயில்முறை நடிகராகப்
பிரவேசித்தார்;
பிறகு - ஒய்.ஜி.
பார்த்தசாரதி - ஒரு
தொழில்முறை நடிகராகவும்
தொடர்ந்து...
படத்துறையிலும் -
பிரகாசித்தார்!

●●●

ஒருமுறை
ஒருவரோடு பழகினால்...
சட்டென்று ஒட்டிக் கொள்ளும்
சுபாவம்;
ஆரையும் நினைவு கொண்டு
அன்பு ஒழுக ஒழுக -
அளவளாவுவதில் -
அவரது நினைவாற்றல் அபாரம்!

பொய்யாகப்
பழகத் தெரியாதவர்;
அகந்தை
அழுக்காறு;
ஆகியவற்றின்
அர்த்தங்கள் அறியாதவர்!

மனிதன் என்னும்
மகத்தான சொல்லுக்கு...

விரிவுரையாய்
விளங்கியவர்;
வஞ்சனையின்றி
வாத்சல்யத்தை -
வருவோர் போவோருக்கெல்லாம்
வழங்கியவர்!

●●●

மத்திய அரசில்
மிகப் பெரிய -
உத்தியோகத்தில்
உட்கார்ந்து இருந்தவர்;

ஆயினும்
அப்பழுக்கற்ற கையோடு -
ஒருவர் - ஓர்
ஒச்சம் சொல்லாதபடி -
ஒழுக்கத்தையும் நாணயத்தையும்
ஒருசேர ஓம்பிய அருந்தவர்!

படச்சுருள் கிடைக்காமல்
படவுலகம் -
திண்டாடியபொழுது -
தன் பதவியைக் கொண்டு -
ஒழுங்கான முறையில்-அதற்கு
உயிர்ப்பிச்சை அளித்தவர்;
தமிழ் சினிமா
தாழாதிருக்கத்
தன்னால் ஒல்லும்
வகையிலெல்லாம்-
தாங்கிப் பிடித்துக் களித்தவர்!

●●●

ஜூனியர் விகடன் 22.7.2003



சிங்கம்மாள் - எனும்
சிறந்த பெண்மணிக்கும்;
ராமானுஜம் - என்னும்
ரம்மியமான குணவானுக்கும்;

பிள்ளையாய்ப் பிறந்தவர்
பார்த்தசாரதி;
கல்வியறிவிலும் -
கலையறிவிலும் -
கரை கண்டவர் - என
காசினி மெச்ச...

அந்தம்வரை வாழ்ந்த - ஓர்
அறிவு வாரிதி!

● ● ●

பிள்ளைப்
பிராயத்திலிருந்தே...

நாடகத்தின் பால்
நெஞ்சை இழந்தவர்;
உத்தியோகம் பார்த்த
வேளைகள் போக...

நாடகம்
நாடகம் என்று
நாளும் பொழுதும் - அதே
நினைவில் உழன்றவர்!
சுருங்கச்
சொன்னால்...

பயில்முறை நாடகங்களின்
பிதாமகன் அவர்;
அவர்போல் -
அமெச்சூர் நாடகங்களின் -
உயர்வுக்கு
உழைத்தவர் எவர்?

பின்னாளில் -
படவுலகில் -
புகழ் மேவிய -
பல நடிக நடிகையர்...

ஒய்.ஜி.பி.யின்
உறுதுணையால் ஊக்குவிப்பால் -
உலகறியும்
உயரத்திற்கு வந்தவர்;
அனேகருக்கு
அவர் -
வரையிலாது
வாய்ப்புகளைத் தந்தவர்!

முதல்வர் ஜயலலிதா;
லட்சுமி;
நாகேஷ்;
சோ;
மௌலி;
என -
ஏராளமானோர் -
கலைத்துறையில்
கால்பதிக்க - ஒய்.ஜி.
பார்த்தசாரதி
பெரிதும் காரணம் ஆவார்;

தன்னால்
தலையெடுத்தோரைக் கண்டு-
அவர்
அகமகிழ்ந்து போவார்!



'கௌரவம்'
'பரிட்சைக்கு நேரமாச்சு'
என - புகழ்
எய்திய பல படங்கள்...

ஒய்.ஜி.பி. நடத்திய
ஒப்பற்ற நாடகங்களே;
அவர்
அரங்கேற்றிய
அவையெலாம் - நாடக
அறிவு கொளுத்தும் நூலகங்களே!

• • •

ஒய்.ஜி.பி.யே -
ஓர் அற்புதமான நடிகர்;
அநாயாசமாக -
அலட்டிக் கொள்ளாமல் -
எதார்த்தத்தை
எடுத்துக் காட்டும் விதமாக...

எவர் நடித்தாலும் -
அவருக்கு அவர் ரசிகர்!
'இளமை ஊஞ்சலாடுகிறது';
'மன்மத லீலை'; 'வடைமாலை';
'சில நேரங்களில் -
சில மனிதர்கள்';
என - அவரது
ஏரார்ந்த நடிப்புக்கு -
எடுத்துக் காட்டாக
எத்துணையோ படங்கள்;
அனைத்திலும் காணலாம் -
அவர்பதித்த தடங்கள்!

• • •

சிவாஜிக்கு
சிறந்த நண்பர்;
எம்.ஜி.ஆரின்
எண்ணம் கவர்ந்த அன்பர்!
ஆயினும்

அவர் -
நாடகத்தோடுதான்-நெருங்கிய
நட்பு பாராட்டினார்;
பயில் முறை நாடகங்களின் -
பாடுகளை; பீடுகளை; தன் -
பல்லாண்டு உழைப்பின்
மூலம்
பாரறியக் காட்டினார்!

• • •

நாடகம்
நடத்துதல் - அவருக்கு
CUP OF TEA அல்ல; அவர்-
காதல் அது! வேறென்ன
சொல்ல?

அவர்
ஆசைப்பட்டது
துட்டு அல்ல; கைத்
தட்டு!

• • •

ஒய்.ஜி.பி. - ஓர்
ஓவியம்போல் வரைந்தார்
அமெச்சூர் நாடகங்களின்
ஆதியை; இன்று -
அவரது
அன்பு மகன் - ஒய்.ஜி.
மகேந்திரன் வரைகிறார் -
அதன்
மீதியை!

- இன்னும் இருக்கின்றார்கள்.

ஜங்ஷன் 22.7.2003

''வரதட்சணை விஷயத்தில் ரொம்பப் பிடிவாதமாக இருந்துட்டோம்''

"அதனால் என்ன?"

"பெண் வீட்டார் அடித்த பத்திரிகையில் பையனின் பெயருக்குப் பக்கத்தில் பி.ஏ. ஃபெயில்னு போட்டு மானத்தை வாங்கிட்டாங்க.."

- எம். அசோக்ராஜா



''உங்க பொண்ணு ஒரு கொத்தனாரை லவ் பண்ணி கல்யாணம் பண்ணிக்கிட்டாளே! இப்ப எப்படி இருக்கா.

"லேசா பூசின மாதிரி இருக்கா"

- மா. தங்கரவி





"இன்னைக்கு நான் வச்ச ரசம் பிரமாதம்னு உங்கப்பாவும் அம்மாவும் ரெண்டு தடவை போட்டு சாப்பிட்டாங்க.."

"அடிச் சக்கை!"

"அதான் உங்களுக்குப் பாக்கி இருக்கு"

- சுரேஷ் கண்ணா

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

## 75. கொத்தமங்கலம் சுப்பு

உணவுக்கு எவ்வாறு
உப்பு? அவ்வாறு-
ஜட்டி யணிந்த
ஜோடிக் குழந்தைகள் -
குழலூதும் படங்களுக்கு
கொத்தமங்கலம் சுப்பு!

ஜெமினி ஸ்தாபனம்
ஜெயிக்க...

அற்றை நாளில்
அவர்தான் -
வாசனுக்கு
வலக்கரம்;
அவர்களுக்குள்
அவ்வளவு -
புரிதல் இருந்தது
பரஸ்பரம்!

●●●

மறக்க முடியுமா -
'மிஸ். மாலினி'யை?
நம் -
நினைவிலிருந்து -
தள்ளிவைக்க முடியுமா -
'தாசி அபரஞ்சி'யை?

கவனத்தை விட்டுக் -
களைய முடியுமா -
'கண்ணம்மா என் -
காதலி'யை?

கொத்தமங்கலம் சுப்புவின்
கைவண்ணமும் மெய்வண்ணமும்
ஒருசேரக் காட்டிய
ஒப்பற்ற படங்களல்லவா அவை?
அனைத்திலும் ஆண்டுநிற்கும் -
அவரது நகைச்சுவை!

ஆங்கில நாவலாசிரியர் -
ஆர்.கே. நாராயணனின்...

'மிஸ்டர் சம்பத்'தான் -
'மிஸ். மாலினி' ஆனது; அதில் -

**கவிஞர் வாலி**

**சென்ற நூற்றாண்டில்,**
**தமிழ் மண் தரணிக்கு வழங்கிய**
**மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!**



கதாநாயகன்
கொத்தமங்கலம் சுப்புவின் -
நடிப்புத்திறன்
நீள்விசும்பைத் தொடப் போனது!

●●●

நடுவயது
நாயகனாக வந்து - அவர்
நிகழ்த்திய
நையாண்டிகள்...

அங்கதவகை - என
அருந்தமிழ் நாடகம் சுட்டும்;

'மிஸ். மாலினி'
முழுவதும் -
அத்தகு
அங்கதம் கொடி கட்டும்!

எந்தப் பாத்திரம்
ஏற்றாலும்...

அந்தப் பாத்திரமாகவே
அவர் வாழ்வார்; அதில்
ஆழங்காற் படுமளவு
அவர் ஆழ்வார்!

'அவ்வையார்' படத்தில்
அவர்...

மனைவிக்கு பயந்த
மணாளனாக நடிப்பார்;
தான்
தரித்த வேடத்தை -
சுப்பு - ஒரு
சிற்பம் போல் வடிப்பார்!

●●●

'ரத்தக் கண்ணீர்' படத்தில்
ராதா...
ஒரு
தொழுநோயாளி வேடத்தில்
தெருவழியே பாடிக்கொண்டு வரும்-

'மன்னவ னானாலும்; மாடோட்டும் -
சின்னவ னானாலும்;
மண்ணில் பிறந்தாரே - முடிவில்
மண்ணுக்கிரை தானே!'

என்ற பாட்டை
எழுதியது எவர்?
சுப்பு - என்று
சொல்கிறேனே -
அந்த
அவர்தான் அவர்!

ஆம்!
அவர் ஒரு கவிஞர்;
அவர் ஒரு கதாசிரியர்;
அவர் ஒரு இசைவாணர்;
அவர் ஒரு இயக்குனர்;
அவர் ஒரு நடிகர்;
அனைத்திற்கும் மேலாக...

சுப்பு - ஒரு
சிறந்த மானுடர்;
மனத்தாலும் எண்ணார்
மற்றோர்க்கு இடர்!

●●●

'அவ்வையார்'
அவர் இயக்கிய படம்;
தமிழை;
தமிழிசையை;
தமிழ்ப் பண்பை;
தமிழ்ப் பாரம்பரியத்தை;

துலாம்பரமாகத்
துலக்கிய அந்தத் -
திரைச் சித்திரம்
தந்தது...



சுப்புவிற்கு
[illegible] தனி இடம்
ஆயினும்
அவர் நிறைகுடம்.
●●●
நாட்டுப்புறப் பாடல்களை - அவர்
நல்கியதுபோல்...

தானே கவனம் செய்து
தந்தவர் இல்லை;

பட்டிதொட்டிகளில்
புழக்கத்தி லிருந்த -
வழக்குச் சொற்களை
வார்த்தெடுப் பதில்...

ஏது - அவர்
எழுத்து எல்லை?
நாஞ்சில் சும்பிபோர்;
நாற்று நடுவோர்;
குலவை இடுவோர்;
குறம் பார்ப்போர்;
இத்தியாதி -
இத்தியாதி -

தொன்மைத்
தமிழ்க் குடியின் -
உதடுகளில்
உட்கார்ந்த தமிழை...

உருவி -
உள்வாங்கி -
சுப்பு பாடிய - கிராமிய
சிந்துகள் ஏராளம்;
அவர்போல்
ஆர்கண்டார் -
ஸைய மிசை
வட்டாரத் தமிழின் சீராழம்?
●●●
'தில்லானா மோகனாம்பா'ளைத்
தந்தது....
கொத்தமங்கலத்தாரின்

கைப்பேனா;

காலத்தால் அழியாத - ஒரு
காவியமாய் -
சிவாஜியின் -
சிறந்த நடிப்பை
உலகறியப் பதிவு செய்த - ஓர்
ஒவியமாய் -

வழங்கிய - சுப்புவை
வாழ்த்தாதோ செந்தமிழ் நா?
●●●
காந்தி மகான்
கதையை...

வில்லுப் பாட்டில்
விளம்பிய பெருமகனை;

மறையவர்
மகாலிங்கம் அய்யருக்கும் -
குலமாது
கங்கா அம்மையாருக்கும் -

தவப்பேறாய்த்
தோன்றிய திருமகனை;

தமிழ்;
தெய்வம்;
தேசம்;
மூன்றையும் - ஒருசேர
மோகித்த ஒருமகனை;

காலன்
கொண்டாலும் - அவனது
உயிரை
உண்டாலும் -

தமிழ்ப் பாக்களில் - நாம்
தரிசிக்கலாம் - கொத்தமங்கலம்
சுப்பு எனும் கவிஞனை;
சுயமாகப் பிரகாசித்த கலைஞனை!

## 76. எஸ்.டி. சுந்தரம்



வொன்புகழ்
விசிஷ்டாத்வைதத்தை -
வையமிசை
விகசிக்கச் செய்த...

உடையவர் சித்தாந்தத்தில்
ஊறிய சந்ததியில் -
கண் மலர்ந்தவர்
கவிஞர் எஸ்.டி. சுந்தரம்;
அவர் போன்ற
அரிய தியாகிகள்
தந்ததுதான் - நம்
தேசம் பெற்ற சுதந்திரம்!
●●●
துரைசாமி என்பவரின்
திருக்குமாரராக...

ஆத்தூரில்
அவதரித்தவர்;
கடைசி வரை
கதர் தரித்தவர்!
ஆற்றொழுக்கான நடையில் -
அற்புதமான...

கதைகள்;
காவியங்கள்;
நாடகங்கள்;
நற்கவிதைகள்;

யாத்தவர்; புகழ்
பூத்தவர்; பூந்தமிழ்
அன்னை
அணிய -
கோதறு சொன்மாலைகள்
கோத்தவர்!
●●●

வேளாண்மைக் குடும்பத்தில்
விளைந்தாலும்...

பிள்ளைப்
பிராயத்திலேயே -
நாடகத்திற்குத் - தன்
நெஞ்சைத் தந்தவர்;
பள்ளிப் படிப்பைப் -
பாதியில் விட்டுவிட்டு
நவாப் கம்பெனியை
நாடி வந்தவர்!

குருவருள் இல்லாமலேயே -
குறைவற்ற தமிழ்ஞானத்தை -
திருவருள் கூட்டி வைத்தது -
திருவாளர் சுந்தரத்திடம்;

பின்னாளில் -
பசுந்தமிழை -
திருவையாற்றில்
திகழ்ந்த அரசு கல்லூரியில் -

முறையாகப் பயின்று - தன்னை
முழுவதுமா யிழந்தார் -
மணித் தமிழ்
மந்திரத்திடம்!

வண்ணத் தமிழ் - அவருக்கு
வசப் பட்டது;
அது
அவரது
கலையார்வம்
கடுதி வளர...
ஒரு
முகாந்தரமாயிருந்து - அவரை



முடக்கி விட்டது!

நாடக நடிகராகவும்;
நாடக ஆசிரியராகவும்;
நாட்பட -
நாட்பட -
சுந்தரம் -
சோபிக்க லானார்;
இடைக்காலத்தில்
இந்திய சுதந்திர வேள்வியில்...
பங்கு பற்றி -
பாரத மாதாவுக்கு 'ஜே' போட்டு-
'வெள்ளையனே -
வெளியேறு' இயக்கத்தின் மாட்டு-

காதலாகிக் -
காராகிரகம் போனார்!

நாட்டு நினைப்பும்; தமிழ்ப்
பாட்டு நினைப்பும்;
நெஞ்சு பூராவும்
நிறைந்திருக்க...

போராட்டத்தின் மேல் -
போராட்டம் நடத்தி -
புகுந்தார் சிறை -
பன்முறை!

நைந்தது சரீரம்;
நையவில்லை சுந்தரம்;
வைத்தியமும் -
வண்ணத் தமிழ் வாஞ்சையும் -
உதவ -
உயிர் பிழைத்து...
எழுந்தவர் -

எழுத்தாளர் சுந்தரம்!

அவர்
ஆக்கியருளிய -
அநேக நாடகங்களில்
அற்புத மானது...

'கவியின்
கனவு';
அதில் அப்பட்டமாய்த் தெரிந்தது.
விடுதலை வேண்டும் - ஒரு
வித்தகனின் உள்ளத் தினவு!

சக்தி கிருஷ்ணசாமியும்;
சுந்தரமும்;
இணைந்து வழங்கிய - அந்த
இனிய நாடகம் -
இலட்சக்கணக்கான - தமிழர்
இதயங்களை...

இடைவிடாது
இருபத்தைந்து வாரங்கள் - ஒரு
பரவச நிலையில்
பிணித்தது; அது -
காய்ந்து
கிடந்த -
தமிழ் நாடகக் கலையின்
தாபத்தைத் தணித்தது!

●●●

எஸ்.டி. சுந்தரம் -
எல்லோரும் சிலாகிக்கின்ற -
நாடக ஆசிரியராய் -
நாட்டிடை மலர்ந்தார்;
உண்மையை
உரைக்கப் போனால்...

வெள்ளை இருட்டில்
விழுந்து கிடந்த - மண்
விடுதலை வெளிச்சம் பெற - புது
விடியலாகவே புலர்ந்தார்!

ஆம்;
அந்த அளவு...



கவியின் கனவு - எனும்
கவின்மிகு நாடகம் -
உறங்கிய தமிழரை
உசுப்பிவிட்டது; ஒரு
கவிஞன் வாயிலிருந்து
கனல் கக்கும்-
வசனங்கள்
வெளிப் போந்து -

சூடு
சொரணையற்றுக் கிடந்த -
சமூகத்தைச்
சுள்ளென்று சுட்டது!

● ● ●

எஸ்.டி. சுந்தரத்தின்
எழுதுகோல்...

திரையுலகிலும்
தலைநிமிர்ந்து நின்றது;
அவருடைய -
அபாரமான -
உரையாடல்களும், மனத்தை -
உருக்கும் பாடல்களும் -
ஊரார் -
உள்ளங்களை உலுக்க...

அநாயாசமாக -
அவர் புகழ் உச்சம் சென்றது!

பி. பானுமதியின்...
'லைலா மஜ்னு'
'விப்பிர நாராயணா'

இவை
இரண்டும் -
எஸ்.டி. சுந்தரத்தின்
எழுத்து வன்மைக்கு -
இன்றளவும்
இருக்கின்றன சாட்சியாய்;
தற்காலத் -
திரைப்படங்களில் -
காணக்
கிடைக்காத காட்சியாய்!

● ● ●

'கள்வனின் காதலி'
'மனிதனும் மிருகமும்'
முதலிய படங்களில் - அவரது
முத்தமிழ் மின்னி -
சிவாஜிக்கு -
சேர்த்தது பெரும்புகழ்;

எஸ்.டி. சுந்தரத்தின்
ஏரார்ந்த கலைஞானம் -
அவ்வளவு சுலபமாக
ஆழங்காண ஆகாத அகழ்!

● ● ●

தமிழ்நாடு இயலிசை நாடக மன்றத்
தலைவராகப் பணிசெய்தார்;
வளரும் கலைஞர்களின்
விழிநீர்ப் பூக்களைக் கொய்தார்!

நல்ல கவிஞனாகவும் -
நல்ல மனிதனாகவும் -
பண்பும் அன்பும்
பரிமளிக்க...

விளங்கிய சுந்தரம்
விழிமூடினார் ஒருநாள்;
ஆயினும்
அவர் ஜனித்த தேதி -
தமிழுக்கும்
தமிழர்க்கும் திருநாள்!

- இன்னமும் இருக்கின்றார்கள்

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

## 77. சின்னப்பாத் தேவர்

வெள்ளித்திரை உலகில் -
வெறுமனே...

தேவர் என்றால்
திட்டவட்டமாக - அது
சின்னப்பாத் தேவரைத்தான்
சுட்டும்;

சட்டையைப் போல் -
சந்தனத்தையே - அவர்
சூடிக் கொள்ள - அதன்
சுகந்தம்...

எட்டூருக்கு -
எட்டும்;
திருநீறு
தீற்றிய நெற்றியைப் -
பார்த்தாலே
பக்திரசம் சொட்டும்;

ஒழுக்கத்தை
ஓம்புபவர் - என்பதை
எல்லோர்க்கும்
எடுத்தோதும் உடற் கட்டும்!

ஆம்;
அவர் ஐயர் -

சாண்டோ
சின்னப்பாத் தேவர் - எனச்
சகலரும் சொல்வது
சாலப் பொருந்தும்;
தேவரின்
திடகாத்திரமான
தேகம் கண்டு
தேக்கே வருந்தும்!

வாலிப -
வயதில்...

அனுமான் பெயரில்
அவர் - ஓர்
உடற்பயிற்சிக் கூடம்
நடத்தியதை -
ஊரறியும்;
எம்.ஜி.ஆர். -

## கவிஞர் வாலி

**சென்ற நூற்றாண்டில்,
தமிழ் மண் தரணிக்கு வழங்கிய
மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!**

ஜூனியர் விகடன் 5.8.2003



எம்.என். நம்பியார் -
ஆகியோரெல்லாம்
அங்குவந்து பயின்று -
ஆக்கையின்
ஆரோக்கியம் பேணியதை...
சில்லெனப் பாயும் -
சிறுவாணி நீரறியும்!

●●●

ஆண்டகை
அய்யாவுத் தேவருக்கும்;
அருள்சால்
அன்னை ராமாக்காளுக்கும்;

தனயனாய்ப் பிறந்தவர்
தேவர்;
உழைப்பால்
உயர்ந்தவர் வரிசையில் -
தேவர் போல்
தரணியில் ஒருசிலரே ஆவர்!

ஆலைத் தொழிலாளியாய்
ஆரம்பித்து...

பின்
படத்துறை புகுந்து -
சிறுசிறு வேடங்களை
சிரத்தையோடு செய்து -

படிப்படியாக
படிப்படியாக -
வாழ்வில்
வெளிச்சம் கண்டவர்;

முனை
முறியாத
முயற்சியையே
மூலதனமாய்க் கொண்டவர்!

●●●

காலம்
கனிந்தது;
காரியம் யாவும்
கைகூடி வந்தது!

சாண்டோ
சின்னப்பாத் தேவர்...

பெரிய
படாதிபதி யானார்;
எம்.ஜி.ஆரை வைத்து
ஏகப்பட்ட படங்கள் எடுத்து -
வெற்றி மீது
வெற்றியைக் குவித்து -

செல்வமும்
செல்வாக்கும்
சேர - கீர்த்தியின்
சிகரம் போனார்!

பசுந்தமி ழல்லால்
பிறமொழி யறியாத -
இந்தத் தமிழர்
இந்திப் படங்கள் எடுத்தார்;

வடநாடு - மூக்கின் மேல்
விரல்வைக்கும்படி...

இன்னொரு வாசன்போல்;
இன்னொரு ஏவி.எம். போல்;
தமிழர்க்குப் - பெரும்
தகவு தேடிக் கொடுத்தார்!

துதிக்கை
தூக்கி -
பிள்ளையானை - முன்வந்து
பிளிறும் சின்னம்...

வடக்கை

வென்றது;
வரலாறு காணாத
வாகைசூடி நின்றது!

●●●

தேவர் -
தெய்வநம்பிக்கை மிக்கவர்;

புராணம்
புகலும் -
அருளார்ந்த
அடியார்களின்...

வரிசையில்
வைத்து எண்ணத் தக்கவர்!

முற்றிய -
முருக பக்தியின் காரணமாக...

ஆறெழுத்து
அண்ணலின் நாமத்தை
அனவரதமும் - தன்
அதரங்களில் -
உட்கார்த்தி வைத்தவர்;
உண்மையில் அவரொரு
மெய்த்தவர்!

பழனியம்பதி வாழ்
பரம் பொருளாம் -
பன்னிருகைப் பெருமானின்
புகழ் பேசும்...

தெய்விகப் படங்களைத்
திரையில் புனைந்தவர்;
கந்த வேளின்
கருணைப் புனலில் -
நாளும் போதும்
நெஞ்சுகுளிர நனைந்தவர்!

வாரியார் சுவாமிகள்;
பித்துக்குளி முருகதாசர்;
மதுரை சோமு;
மற்றும் பல ஆத்திகர்களை...

திரைப்படங்களில்
தோன்றச் செய்து -



பக்திமணம்
பரப்பியவர்; நம்
நெஞ்சங்களை யெல்லாம்
நன்னெறியால் நிரப்பியவர்!

●●●

தன்
தொழிலகத்தில் -
உழைத்தவர்க்கான
ஊதியத்தை...

தவணை சொல்லாமல்
தந்தவர்;
கடைசி வரையில்
கொடுத்த வாக்கைக்
கண்ணெனக்
காத்து வந்தவர்!

●●●

அவர் ஆற்றிய
ஆலயப் பணிகள் ஏராளம்;
ஆருக்கு வரும்
அவரது தாராளம்?

திருச்செந்தூரும்;
திருவாவினங்குடியும்; மந்த -
மாருதம் தவழும்
மருத மலையும்;

தேவர் பெருமை
தினம் பேசும்; ஒரு
பக்த சிகாமணியைப்
பெற்றெடுத்ததற்காகப் -
பெருமைப் படலாம்
பசுந்தமிழ் தேசம்!

## 78. விந்தன்



சிவாஜி; எம்.ஜி.ஆர்;
சேர்ந்து நடித்த படம்...

ஒன்றே ஒன்று; அதை -
ஊரறியும் 'கூண்டுக்கிளி' என்று;
அற்றை நாளில் - அது
அவ்வளவாக -
வெற்றி பெறாது போயினும்
வெகுவாகப் பேசப் பட்டது...

உஷ்ணமான - அதன்
உரையாடல் - பலர்
நெஞ்சங்களில்
நெடுங்காலம் நிலைத்து நின்று!

காரணம் - அது
கம்யூனிசக் கருத்துகளைத்
தன்னுள்
தாங்கி யிருந்தது;
பொதுவுடைமைத் தோழர்க்கு -
பெரும் விருந்தது!

●●●

'மயக்கும் மாலைப்
பொழுதே! நீ போ! போ!
இனிக்கும் இன்ப
இரவே! நீ வா! வா!'

எனும் பாடலை -
எவர் மறக்கக் கூடும்?

'கூண்டுக்கிளி' யிலிருந்து -
'குலேபகாவலி'க்கு -
இடம் பெயர்ந்த
இந்தப் பாடல் -
இன்று செவி மடுத்தாலும்
இதயத்தை வருடிவிட்டு ஓடும்!

●●●

'கல்கி'யின் -
காவியங்களில் ஒன்றான...

'பார்த்திபன் கனவு'
படமாக வந்த பொழுது - அதன்
திரைக்கதையும்;
தீந்தமிழ் வசனங்களும்;

சினிமா நேயர்களை
சரித்திர காலத்திற்கே
இட்டுச் சென்றன; 'கல்கி'யின்
இதயத்தைப் பிரதிபலித்து
நின்றன!

●●●

மேற்சொன்ன -
மூன்று விஷயங்களும்...

'விந்தன்' நிகழ்த்திய
விந்தைகள்;
ஆயினும் -
அவரது எழுத்தை -
வியாபார ரீதியில்
வரவேற்க வில்லை...

சினிமாச் -
சந்தைகள்!

●●●

தமிழ் எழுத்தாளர்களிடையே -
தனியிடம் பெற்று...
வாசகர்களின்
வசீகர எழுத்தாளராகி -
விந்தன்
விடுவிடு என மேலேறினார்;

சமூக அவலங்களை -



சகட்டு மேனிக்குச்
சாடிச் சாடி - தன்
சிறுகதைகளில்...

அவர் - ஓர்
அடலேறுபோல் சீறினார்!

தன்
தார்மீகக் கோபத்தை -
தமிழ்கொண்டு - அவர்
தெரியப் படுத்தினார்;

உள்ளத்தாலும்
உடலாலும் -
ஊனமுற்றிருந்த தமிழன்
உடுத்தியிருந்த...

கந்தல்களைக்
களைந்து - அவனுக்குப்
பகுத்தறிவு என்னும்
புத்தாடையை உடுத்தினார்!

அவன்
அதை -
அணிந்தானா?
அவிழ்த் தெறிந்தானா?
என்பது பற்றியெல்லாம்
எட்டுணையும் -
கவலை கொளாது - அவர்தன்
கைப் பேனாவால்
காகித வயலை உழுதார்;
கீழ்த்தட்டு மாந்தருக்காக
அழுதார்;

ஊருக்கு உதவாததை -
ஒருபோதும் அவர் எழுதார்!

●●●

'விந்தன்' - பெயருக்கேற்ப
விந்தன் தான்;
சதா - சமூக
சிந்தன் தான்;
வழிமறித்து நின்ற -
வறுமை யெனும்...

நந்தியை
நகர்த்தி -
நற்றமிழ்
நிருத்தத்தை -
நன்கு தரிசித்த
நவீன நந்தன்தான்!

●●●

வேதாசலம்; ஜானகி; - என
விளங்கிய தம்பதியின்...

வாரிசாய்
வந்தவர்;
நெஞ்சம் -
நினைத்தபடி...

கல்வியை -
கலையை -
கற்க முடியாத
கவலையில் -
ஆதி நாள்களில்
அகம் நொந்தவர்!

அச்சுக் கூடத்தில்
அச்சுக் கோக்கும் தொழிலாளியாக -
ஆரம்பித்தது
அவரது வாழ்வு;
எத்தொழிலுக்கும் - அவர்
எண்ணத்தில் இல்லை தாழ்வு!

கல்கிதான்



கண்டுபிடித்தார் -

தன்னிடம்
தொழில் புரியும்
விந்தன் - ஒரு
விசேஷப் பிறவி என்று;

ஊக்கமும்
உள்வலியும் தந்து -
இயல்பாக - விந்தனிடம்
இருந்த -

எழுத்துத் திறமைக்கு
ஏற்றம் தந்தார் அன்று!

பேராசிரியர் கல்கி
பச்சைக் கொடி காட்டியதும்...

விந்தன் -
விரைந்து தள்ளினார்; தன்
எழுத்து வன்மையால்
எல்லோர் நெஞ்சையும் அள்ளினார்!

சிறுகதை;
தொடர்கதை;
என
எழுதி எழுதி...

தமிழ்கூறும் நல்லுலகைத்
தன்பால் திருப்பி -
விந்தன் -
வாசகர்களின்

பிரிய எழுத்தாளர் ஆனார்;
புகழின் முகடு போனார்!

'பாலும் -
பாவையும்!'
இந்த -
இனிய தொடர்தான்...

நாட்டிடை - ஒரு
நட்சத்திர எழுத்தாளராக -

அவரை -
ஆக்கியது;

மேலும் -
மேலும் -
காலமும் -
கைகொடுத்து ஊக்கியது!

●●●

சினிமா - அவரை
சுவீகரித்தது; பின்னாளில்
அதுவே -
அவருக்குக் கரித்தது!

சொந்தப் படம்;
சொந்தப் பத்திரிகை;
என -
ஏதேதோ ஆரம்பித்து...

விந்தன்
விழுந்தார் கவலையில்;
கசிந்து கடலான -
கண்ணீர் திவலையில்!

●●●

அகவை -
அறுபதைத் தொடுமுன்...
அந்தகன் -
அவரைத் தொட்டான்;
புகழுடம்பை மட்டும் -
புவிமிசை தொடாது விட்டான்!

-இன்னமும் இருக்கிறார்கள்

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

## 79. பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர்

'போற்றிப்
பாடடி பெண்ணே!
தேவர்
காலடி மண்ணே!'

எளியேன்
எழுதிய பாட்டு;
இதை
இன்றளவும் -
எண்டிசை தோறும்
ஏந்திச் செல்கிறது காற்று!

படப் -
பாடலா யிருந்தாலும் -
அந்தப் பாடலில் - என்
ஆன்மாவைப் பெய்தேன்;
அப்பழுக்கற்ற - ஓர்
ஆத்திகப் பெருமகனுக்கு -
அடியேன் என் ஆராதனையை-
அன்னணம் செய்தேன்!

●●●

ஆண்டாள் - பாவையில்
அருளிச் செய்த...
ஓங்கி
உலகளந்த உத்தமன்போல் -
அவரது
ஆகிருதி; அந்தம் வரை -
பிரமசரியம்
பேணி நின்ற -
மற்றொரு
மாருதி!

நெற்றியில் - திரு
நீறு;
ஆகத்தில் -
அப்பியிருக்கும்-
சந்தனச்
சாறு;
தலை
தாழாது-

**கவிஞர் வாலி**

**சென்ற நூற்றாண்டில்,**
**தமிழ் மண் தரணிக்கு வழங்கிய**
**மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!**



நிமிர்ந்து நடக்கும்
நேரிய நடையில்...

அவர் - ஓர்
அடல் ஏறு;
சுருங்கச்
சொன்னால் -
தமிழர்க்கு வாய்த்த
தனிப் பேறு!

செவ்வேளை - தன்
சிந்தையில் வைத்தவர்;
நாவிலும் -
நெஞ்சிலும்
அங்கிங்கு அகலாதபடி - அவ்
ஆறெழுத்தைத் தைத்தவர்!

பக்திமான்;
சக்திமான்;
எனினும் -
எஞ்ஞான்றும் -
வீரமும் விவேகமும்
விலகாத புத்திமான்!

மனையில்
மயில் வளர்த்தார்;
மனத்தில் -
மயில்வாகனனை வளர்த்தார்;

அருள்வலி கொண்டு
அநீதியை எதிர்க்க -
அவர்
அவ்வப்போது கிளர்த்தார்!

அச்சத்திற்கு -
அச்சத்தைத் தந்தார்;
உயரிய நெறிகளுக்கு -
உச்சத்தைத் தந்தார்!

●●●

பிள்ளைப்
பிராயத்திலேயே...
சிலம்பம்
சுழற்றக் கற்றார்;
மல்யுத்தத்தில்
மாற்றானை -
மல்லாத்தும் அளவு
மகா வல்லமை உற்றார்!

நெருப்பைத் துப்பும்
நயனங்கள்;
அவற்றை -
அண்டியதில்லை;
கண்ணீர் -
கம்பலை ஆகிய சலனங்கள்!

ஒருவரும்
ஓர் -
ஒச்சம் சொல்ல
ஒண்ணாத குணம்;

தேக்கு நிகர்-
தேகம் ஆயினும்...

இம்பரில்
இன்னலுறும் எவர்க்கும்-
இளகும்
இலவம் பஞ்சனைய மனம்!

●●●

முக்குலத்தாரும்;
எக்குலத்தாரும்;
தினம் -
தமது...

உதட்டிலும்-
உளத்திலும்
உட்கார்த்திவைத்துத் தொழும்-
உயரிய பெருந்தகைக்கு-

ஊரும் பசும்பொன்;
உற்ற மனமும் பசும்பொன்;



புடம் போட்டே
பூமிக்கு அனுப்பிவைத்தான்-
ஆண்டவன்
அந்த...
மாசறு பொன்னை; மா-
மானுடன் தன்னை!

தேவர்-
திருமகனார்...

மண்ணில் விளையாது - குல
மாதரசாய்ப் பிறங்கிய - ஒரு
பெண்ணில் விளைந்த தங்கம்; இரு
பாதம் முளைத்த சிங்கம்!

●●●

ஊர்ப் பெரியவர் -
உக்கிரபாண்டித் தேவருக்கும்;
அவரது
அன்புசால் -
இல்லத்தரசி
இந்திராணி அம்மைக்கும்;

ஆண்டாண்டு காலம்
அவர்கள் இருவரும் -
ஆற்றிய
ஆகூழாய்...

வந்து பிறந்த
வேந்து;
காலம் - ஒரு
கொடையாய் -

அவரை - நம்
அருந்தமிழ் நாட்டுக்கு -
அனுப்பி வைத்தது - அவருக்கு
அரும்பண்புகளை ஈந்து;
அவர்
ஆற்றிய பணிகள்
ஒன்றா? இரண்டா? இவ் -
உலகுமிசை போந்து?

பட்டியலிட்டாலும் - என்
பாட்டில் அடங்காது - அந்த
நாயகன் சிறப்புகள்
நிற்கும் மீந்து!

●●●

பெற்ற தாயை - அவர்
பிறப் பெய்திய -
ஆறிரு மாதங்களுக்குள்
அந்தகன் கூட்டிச் சென்றதால்...

இளகிய உளம் படைத்த - ஓர்
இசுலாமியப் பெண்மணி -
தேவர் பெருமானுக்குத்
தாய்ப்பால் ஊட்டினாள்;
அந்த
அரிவையர் குல திலகம் -
சமயப் பொறைக்கு - தானொரு
சான்று எனக் காட்டினாள்!

●●●

தேசுமிக்க
தேவர் பெருந்தகை...

இந்திய விடுதலை; தன் -
இன விடுதலை; இவை
இரண்டையுமே - தனது
இருகண்கள் என எண்ணினார்;

அவற்றிற்கான
அனைத்து முயற்சிகளையும் -
அவர்
அறவழியில் பண்ணினார்!
கொத்தடிமைத் தனத்திலிருந்து;
குற்றப் பட்டியலிலிருந்து;



முத்துராமலிங்கத் தேவர் -
மறவர் இனத்தை மீட்டார்;
தாழ்த்தப்பட்ட ஓர்
இளைஞனைத்
தன்னுடன் தங்க வைத்து -
அரிசிச் சோறும் அறிவுச்சோறும்-
அவன் பசிக்கு அவர் போட்டார்!

●●●

விடுதலை
வேள்வியில் ஈடுபட்டு...

பெருமான்
புகுந்தார் சிறை;
நேதாஜியின் -
நெருங்கிய நண்பராகி -
தேர்ந்தார்
தேவர் -
தேச விடுதலைக்குத்
தீவிரவாத முறை!

●●●

மாபெரும் மனிதரை -
மறலி...

ககனம்
கூட்டிப் போனான்;
அந்தகன் - நிஜ
அந்தகனாகவே ஆனான்!

தேவர்பெருமான்-
துயில்கின்ற இடத்தில்...

வருடா
வருடம் -
நடக்கிறது குருபூஜை; அது-
நலங்களையெல்லாம் தருபூஜை!

## 80. குன்றக்குடி அடிகளார்

ரங்கனாதனுக்கும்-
ரஜினிகாந்துக்கும்
ஓர்
ஒற்றுமை உண்டு;
இவ்-
இருவரும்...
பஸ் கண்டக்டராகப்
பணிபுரிந்து - பின்
மாந்தர்
மனங்களில்
கோலோச்சலாயினர்- புகழ்க்
கோலம் கொண்டு!

அரசியல்வாதிகள்
ஆகாமல் - தூய
ஆத்திகவாதிகள்
ஆயினர்;
வல்லான்
வகுத்த வழி-
எவ்வழியோ-
அவ்வழி போயினர்!

●●●

காலம்
கணித்தது-
ரங்கனாதனை மடாதிபதியாக;
ரஜினிகாந்தை படாதிபதியாக!

அருள்மிகு-குன்றக்குடி
அடிகளாரின்...

பூர்வாசிரமப்
பெயர்தான் ரங்கநாதன்;
அடிகளார்-
அவை தோறும்...

சைவத்தை;
தெய்வத்தை;



எஞ்ஞான்றும்
ஏத்திப் பேசி-

செந்தமிழ் முழக்கம்
செவ்வனே செய்த சங்கநாதன்!

●●●

அடிகளார்- ஓர்
அபூர்வப் பிறவி;
கறுப்பும்-
காவியும்-
கைகுலுக்கும்-எனக்
காட்டிய துறவி!

நாத்திகத்தோடு-
நட்பு பாராட்டிய-
ஆத்திகப் பெருந்தகை; பெரியாரின்
அன்புக்குரிய அருந்தகை!

மாற்றுக் கருத்துக்களுக்கும்
மதிப் பளித்தவர்;
யாதும் ஊரே-
யாவரும் கேளிர்- எனப்
பூங்குன்றனார் புகன்றபடி
பலரோடும் பழகிக் களித்தவர்!

அன்பே சிவம் - என
ஆற்றினார் தவம்;
வேண்டுதல்-
வேண்டாமை இன்றி - தூய
வாஞ்சையைக் கொண்டு
வென்றார் பவம்!

●●●

சீலர்-
சீனிவாசப் பிள்ளைக்கும்;
நிறையும் பொறையும்
நிறையப் பெற்றிருந்த-
சொல்லரும் குணவதியாம்
சொர்ணத்தாச்சி அம்மாளுக்கும்;
மகவாகப் பிறந்தார்; தமிழர்-
தகவாகப் பிறந்தார்!

ஆதியில்-
அருந்தமிழ் அறிஞர்களின்-
வீட்டுக்கு
வீடு...

ஆவின் பால் வார்த்த
அவர் - பின்னாளில்
ஞாலம் முழுமைக்கும்
ஞானப்பால் வார்த்தார்;

வகுப்பை-
வர்ணத்தை-
விட்டு
விலகி நின்று...

ஆரும் உய்ய
அன்பு நெறியை ஆர்த்தார்;
தருமபுர ஆதீனத்தில்
தமிழ் பயின்று...

எல்லாத் திருமுறைகளையும்-
எழுத்தெண்ணிப் படித்து;
சைவ
சித்தாந்தத்தில்-
அல்லும் பகலும்
ஆழங்கால் பதித்து;

தம்பிரானாகித்-
தவக்கோலம் பூண்டார்;
அறம்சார்ந்த
அருளுரையால்-
ஆத்திக அன்பர்களின்
அகங்களை...

அகவை எழுபது வரை-



அன்பொழுக ஆண்டார்!

●●●

அடிகளார்-
அக்கிராசனம் ஏற்று...

பேசாத
பட்டிமன்றம் உண்டா?

சிறந்த
சிலேடைகளை;
உயரிய
உவமைகளை;
சரித்திரம் காட்டும்-
சான்றுகளை;
மறைநூல்களிலிருந்து-
மேற்கோள்களை;

எடுத்து
எடுத்து- அவர்
இயம்பாத
இலக்கிய விழாக்கள் உண்டா?

கம்பர்-
கழகங்களில்...
வழக்காடு மன்றத்தின்
வாதப் பிரதிவாதங்களை
உள்வாங்கி; அவற்றை
உட்செவியில் தாங்கி...

நடுமுள்
நடுங்காத
தராசுபோல் - தன்
தீர்ப்பை வெளியிட்ட -
அடிகளாரை - தமிழ்
அன்பர்கள் மறக்கப்போமோ?
ஆயிரம்பேர் வரினும்-
அடடா! அவர்போல் ஆமோ?

●●●

மக்கள் பணியே
மகேசன் பணி-
என
எண்ணியவர் அவர்;
குன்றக்குடியைச் சுற்றியுள்ள -
குக்கிராமங்களை...

தன் பொறுப்பில்
தத்தெடுத்து - அங்கெலாம்
தொழிற் பேட்டைகளைத்
தொடங்கி -
புரட்சி
பண்ணியவர் அவர்!
எத்துணையோ
ஏழைக் குடும்பங்களில்-
அற்றை நாளில்
அடிகளார்...

ஏற்றி வைத்த தீபம்
எரிகிறது இன்னும்;
மண் உள்ளவரை-
விண் உள்ளவரை -
பசுந் தமிழ்ப்
பண் உள்ளவரை -

அடிகளார் புகழ்
அம்புவியில் மன்னும்!

●●●

'சாமியும்-
சமயமும்-
மன்பதையின்-
மேம்பாட்டிற்காகத்தான்!'

எனும்
ஏரார்ந்த கருத்தை...

குவலயத்தில் தாபித்தவர்-
குன்றக்குடி அடிகளார்;
அவர்போல்-சமூக
அக்கறை கொண்ட அடிகள் ஆர்?

-இன்னமும் இருக்கின்றார்கள்...

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

## 81. எம்.எல். வசந்தகுமாரி

சூடிக்கொடுத்த
சுடர்க்கொடி பாடியருளிய...

திருப்பாவை முப்பதையும்
திதிக்கத் திதிக்கத் தந்தவர் -
இசைத் தட்டுகளில்;
இனிய மெட்டுகளில்!

மார்கழி
மாதம்...
எம்.எல்.வி.
எல்லோர் நினைவிலும் -

சூடிக்கொடுத்த
சுடர்க் கொடியின் - பாசுரங்களைப்
பாடிக் கொடுத்த
பாவையாகத் தோற்றுவார்;
ஆண்டாளை

அவர்போல் -
அவ்வளவு பக்தி பூர்வமாக
ஆர் அரங்கம் ஏற்றுவார்?

●●●

ஏழிசையை
எஞ்ஞான்றும்-
வாழிசையாய்
வைத்துப் போனவர்...

வசந்தகுமாரி; அவர் -
வானமாரி போல் ஒரு கான மாரி!

தொல்லிசையிலும்
துலங்கினார்;
மெல்லிசையிலும்
முழங்கினார்;
சாஸ்திரீய
சங்கீதத்தையும் -
சராசரி



சங்கீதத்தையும் -

பிரத்தியேகமான - தன்
பிர்க்கா சாரீரத்தில் -
புரட்டிப் புரட்டி எடுத்து -
பூமிக்கு வழங்கினார்!

ஒரே நேரத்தில் - அவர்
ஓஹோ வென்று...

கோடம்பாக்கத்திலும் -
கொடி கட்டினார்;
வித்வத் சபைகளிலும் -
வெளுத்துக் கட்டினார்!

●●●

'எல்லாம் இன்ப மயம்'
'இமயமலைச் சாரலிலே'
'கொஞ்சும் புறாவே'
'நந்த கோபாலனோடு-
நான் ஆடுவேன்'
'ஆலையின் சங்கே நீ -
ஊதாயோ?'
'ஆடாத மனமும் உண்டோ?'
'சின்னஞ்சிறு கிளியே!'
'செந்தமிழா!
எழுந்து வாராயோ?'
'ஆடல் காணீரோ'

இன்னணம் - அவர்
இனிய சாரீரத்திலிருந்து -
வெளிப் போந்த
வெள்ளித்திரைப் பாடல்கள்...
பசுந்தமிழர் நெஞ்சில்
பச்சைகுத்தப் பட்டிருக்கின்றன,
அந்த அளவு
அவை -
அருந்தமிழர் தம்
ஆழ்மனத்தைத் தொட்டிருக்கின்றன!

●●●

அய்யாசாமி அய்யரும்;
அன்னை லலிதாங்கியும்;
ஆற்றிய -
அருந்தவத்தால்...
வையமிசை -
வந்து பிறந்தவர்;
பாலிய வயதிலேயே -
பாட்டில் சிறந்தவர்;
இறுதிவரை - தன்
இசைச் சிறகுகள் -
படபடக்கப்
புகழ்வானில் பறந்தவர்;

தியாகையர் -
தீட்சதர் -
சியாமா சாஸ்திரிகள் -
புரந்தர தாசர் -
பாபனாசம் சிவன் -

இவர்கள்
இயற்றிய கிருதிகளில்-
ஆழங்காற்பட்டு
அனுபவித்துப் பாடிப்பாடி...

பல சந்தர்ப்பங்களில்
புற உலக நினைவைத் துறந்தவர்;
துறக்கத்தின் வாசலைத் - தன்
தூயகுரலால் திறந்தவர்!

ரவைஜாதி சாரீரம்;



ராஜஹம்சம்போல் கூவுவார்;
ஆதார சுருதியில் -
ஆணி அடித்தாற்போல் -
ஆடாது
அகலாது நின்றுகொண்டு -

மேல் ஸ்தாயிகளை
மேனி நோகாமல் மேவுவார்;
சாஹித்தியத்தைச்
சிதைக்காமல் -
சொற்களைச்
சாப்பிடாமல் -

மெல்லினம் வல்லினம்
மாத்திரை கெடாமல் -
உரிய ஓசை கொடுத்து
உச்சரித்து -
இசை எனும் - மயில்
இறகு கொண்டு - நம்
நெஞ்சங்களை - புளகம்
நாம் எய்துமாறு நீவுவார்!

வசந்தகுமாரியின் - குரல்
வளைக்குள்...

சங்கீத
சாம்ராட்-
தான்சேன் உட்கார்ந்துகொண்டு -
தம்புரா மீட்டினான் எனலாம்;
ஆம் -
அவரது -
பாடல் ஒவ்வொன்றும்
பன்னீர்ப் புனலாம்!

●●●

ஜகம் புகழ்ந்த -
ஜி.என்.பாலசுப்பிரமணியத்தின்...
பிரதான சிஷ்யையாகப்
பிறங்கியவர்;

பாலசுப்பிரமணியத்தின்
பிர்க்காக்களைக் -
கேட்டுக் கேட்டுக்
கிறங்கியவர்!

பாடிவந்த
பாணியை வைத்து -
புடவை கட்டிய ஜி.என்.பி. -
எனப்
பத்திரிகைகள்...

வசந்தகுமாரியை -
விமர்சித்தது உண்டு;
அவர்
அன்னணம் விளங்கினார் - தன்
ஆசிரியப் பிரானை
அச்சு அசலாய்க் கொண்டு!

●●●

எம்.எல்.வி.
எனும்...
முன்றெழுத்தை
மோகிக்காத செவி இல்லை;
அவர்
மோகனக் குரல்
முழங்காத புவி இல்லை!

அவரது
அற்புத கானம் -
கடல்
கடந்திருக்கிறது;
ஒவ்வொரு நாடும் - அவர்

ஒப்பற்ற இசையில் -
கட்டுண்டு
கிடந்திருக்கிறது!
வசந்தகுமாரி -
வாங்காத விருது இல்லை; அந்த - -
விருதுகள் இருக்கின்றன -
வசந்தகுமாரிதான் இல்லை!

பூமிவிட்டுப்
போனது - அவரது
சரீரம்தானே தவிர;
சாரீரம் அல்ல! மாணவி -
சுதா ரகுநாதனிடமும்; மகள்
-ஸ்ரீவித்யாவிடமும்;
வாழ்கிறது அது - எம்.எல்.
வசந்தகுமாரி பேர் சொல்ல!

## 82. மதுரை மணி அய்யர்



மதுரை மணிஅய்யர் ஈவார்!

●●●

'தில்லானா மோகனாம்பாள்'
திரைப் படத்தில் -
சிவாஜி
சண்முகசுந்தரமாக வந்து -

இசைக்கிறாரே - ஓர்
இங்கிலீஷ் நோட்...

அதன்
ஆதிமூலம்.
மும் மூர்த்திகளில் ஒருவரான
முத்துசாமி தீட்சதர் ஆவார்;
அதன் -
அடியொற்றி...

இங்கிலீஷ் நோட்டை - தன்
இசைக் கச்சேரியில் -
மக்கள் மயங்குமாறு -

மகாத்மா காந்தி -
மனம் விரும்பிப்
பார்த்த - ஒரே
படம் 'ராமராஜ்யா' ஆகும்;
வடமொழியிலிருந்து - அதை
வண்ணத் தமிழுக்கு -
மொழிபெயர்த்த பெருமை - ஏவி.
மெய்யப்பருக்கே போகும்!
அந்தப் படத்தில் வரும் - ஓர்
அருமையான பாட்டின் -
வர்ணமெட்டை - அப்படியே
வாங்கி...

'கந்தன் -
கருணைபுரியும் வடிவேல்!' -
என்று - 'குகன்'
எழுதிய பாட்டை...

மதுரை
மணி அய்யர் -
அற்றை நாளில்
அகம் உருகப் பாடுவார்;
ரசிகர்கள் - அந்த
ராக வெள்ளத்தில் - ஓர்
அவசநிலை எய்தி
ஆனந்த நீச்சல் போடுவார்!
மணித்தமிழ் மட்டுமல்ல;
மணி அய்யரும் -



மதுரைக்கு
மாண்பு சேர்த்தவர்;
தொல்லிசையின்
தொன்மைச் சிறப்பைத்
தரங்கெடாது சுரங்கெடாது
தமிழர் செவிகளில் வார்த்தவர்!

ராமசாமி அய்யர் - இந்த
ராகதேவனைப் பெத்தப்பா;
புகழ் வாய்ந்த - மதுரை
புஷ்பவனம் சித்தப்பா!

சங்கீதக் குடும்பத்தில்
சனித்தவர்;
இளமையி லிருந்தே
இசையின் பால் - தன்னை
இழந்து -
இருவிழிகள் பனித்தவர்!

மகாவித்வான் - அரிகேசநல்லூர்
முத்தையா பாகவதரிடம் -
முறையாய் -
முழுமையாய் - இசைக்
கலையைக் கற்றவர்; ஞானம்
கைவரப் பெற்றவர்!

●●●

மதுரை
மணி அய்யரின் -

ராகம்;
தானம்;
பல்லவி;
ஜகத் பிரசித்தம்;
ஜனங்களுக்கு வெகுபிடித்தம்;
மணி அய்யர் -
மனோதர்மமாய் -
ஸ்வரம் பாடுகையில் - இவருக்கு
'ஸமானம் எவரு?' - எனக்
கேட்கும்படி இருக்கும்;
கேட்போர் ஊனை உருக்கும்!

மூன்று காலங்களிலும்
முச்சிரைக்காமல் -
சர்வ லகுவாய்
சஞ்சாரம் செய்வார்,
கோர்வை
கோர்வையாய் -
ஸ்வரங்களைக் கொண்டு - ஒரு
ஸ்வர்ண ஆடை நெய்வார்;
அந்த வித்தையில் -
அவரை விஞ்ச -
ஆளில்லை என்று ஆனது;
அது அவரோடு போனது!

●●●

படம் 'மங்கையர்க்கரசி'யில்
பி.யூ.சின்னப்பா...

கவிஞர் பெருமான் -
கம்பதாசன் இயற்றிய -
'காதல் -
கனிரசமே!' எனும்...

பாடல் ஒன்றைப்
பாடுவார்; அதைக் -
கேட்க - இசைப்பிரியர் கூடுவார்!

மதுரை
மணிஅய்யர் -
பாடிப் பாடிப்
பிரபலப்படுத்திய -
'நாத -

தனு மனிசம்' எனும்
அற்புதக் கிருதியின்
அப்பட்டமான நகல்தான் -
அந்தப் படப் பாட்டு;
ஆம்!
ஆர்க்கும் - மணி
அய்யர் நினைவு வரும் -
அதைக் கேட்டு!

அந்த -
அளவு...
தியாகராஜரின் மெட்டை -
திரைவரைக்கும் -
கொண்டு சென்றவர் -
'கான கலாதர' மணி அய்யர்;
தாளத்தைக் கனவிலும்
தப்பாமல் போடும் திருக்கையர்!

●●●

காஞ்சிப் பெரியவரின்
காதலுக்கு உரியவர்;
இசையையே - தன்
இல்லறத் துணையாய் ஏற்று
கடைசி வரை -
கல்யாணமே பண்ணாமல்...

நாளும் -
நாதோபாசனை செய்த அரியவர்!

கதர்தான் -
கட்டுவார்;
தேசப் பற்றும் -
தெய்வப் பற்றும்
வெகுவாக
விளங்க...

பாரதி
பாடல்களைப்
பாடிப் பாடி
பழ ரசத்தை -



குரல்வழி -
குடம்குடமாய்க் கொட்டுவார்!

●●●

சமகால -
சங்கீத வித்வான்களால்...

பெரிதும் -
போற்றப் பட்டவர்;
புகழ்ச் சிகரத்தை - அதிகப்
பிரயாசை இன்றித் தொட்டவர்!

சபைகளும்; மத்திய
சர்க்காரும்...

மணிஅய்யருக்கு
மகத்தான -
விருதுகள்
வழங்கி மேன்மை பெற்றன;

உரியவரை
உரிய காலத்தில் -
போற்றாது விடுவதால் - வரும்
பழி பாவங்கள் அற்றன!

●●●

மணிஅய்யர் - ஒருநாள்
மரித்தார்; அன்றுமுதல் -
பொய்யுடம்பை விடுத்துப்
புகழுடம்பை தரித்தார்!

- இன்னமும் இருக்கின்றார்கள்...

"அர்ச்சுனா, தர்மம் மிக நுணுக்க மானது. உண்மை பேசுவது நல்லது தான். ஆனால், அதனால் நன்மை விளைகிறதா, தீமை விளைகிறதா என்று பார்க்க வேண்டும். பொய் பேசு வதால் நன்மை விளைந்தால், அந்தப் பொய்தான் உண்மை. உண்மை பேசுவதால், தீமை விளைந்தால், அந்த உண்மைதான் பொய்'' என்று விளக்கினார் கண்ணன்.

## எல்லாம் நன்மைக்கே!

**பு**த்தரை வணங்கிய சீடன் ஒருவர், "பெருமானே! புத்தமதப் பிரச்சாரத்திற் காக நான் செல்கிறேன். எனக்கு அனுமதி தாருங்கள்" என்று வேண்டி னார்.

"எந்தப் பகுதிக்குச் செல்வதாக எண்ணம்" என்று கேட்டார் புத்தர்.

"சூனா பகுதி மக்கள், மிகுந்த அறியாமையில் உள்ளனர். அங்கே செல்வதாக எண்ணம்" என்றார் சீடர்.

''அந்தப் பகுதி மக்கள், உன் கொள்கையை ஏற்றுக் கொள்ளாமல், திட்டினால் என்ன செய்வாய்?"

"இவர்கள் எவ்வளவு நல்லவர்கள். என்னை அடிக்காமல் விட்டு விட்டார்களே என்று மகிழ்வேன்."

''அவர்கள் உன்னை அடிப்பதாக வைத்துக் கொண் டால், அப்பொழுது என்ன செய்வாய்?"

''ஆயுதம் கொண்டு தாக்கி என் னைக் கொல்ல வரா மல் வெறுமனே விட் டார்களே'' என்று மகிழ்வேன்.

''ஆயுதம் கொண்டு உன்னைத் தாக்கினால் என்ன செய்வாய்?."

''பிறவித் தளையில் இருந்து விடுபட பலர் பலவித முயற்சி செய்கின்றனர். இவர்கள் எனக்கு மிகவும் எளிதில் முக்தி தருகிறார் களே என்று மகிழ்வேன். புகழ்வேன்".

சீடரின் கூற்றைக் கேட்ட புத்தர், அவரை வாழ்த்தி அனுப்பினார்.

- சரஸ்வதிபஞ்சு



## பெண்ணறிவு - நுண்ணறிவு

**து**ஷ்யந்தன் சகுந்தலையை மனைவியாக ஏற்றுக் கொண்டான். குழந்தை பரதனோடு வந்த அவளை உடனே ஏற்றுக் கொண்டால் பின்னால் பரதனுக்குப் பழி வரு மென்று அஞ்சினான். ஏற்க தாமதித் தால் சாபம் வரும். எனவே பின்வரும் வினாக்களைக் கேட்டான்.

"பெண்ணே நீ யார்?"

"உன் கணவன் யார்?"

"இந்தப் பையன் யார்?"

"ஏன் வந்தாய்?"

சகுந்தலை கூறினாள்.

''மகனே! பரதா! உன் தந்தையை வணங்கு!"

அவன் கேட்ட அத்தனை வினாக் களுக்கும் ஒரே வரியில் பதில். அதனால்தான் 'பெண்ணறிவு - நுண் ணறிவு' என்கிறார்கள்.

- வாரியார் கூறியது.

தகவல்:
நெ. இராமன்

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

**83.மேயர்**
**ம.ராதா கிருஷ்ணபிள்ளை**

அகவை முப்பத்து மூன்றில் -
ஆனார்...

மதராஸ் என்னும் -
மாநகரத்தின் தந்தையாக;

ஏழை
எளியவர்க்கு - அவர்கள்
இருக்குமிடம் தேடிச்சென்று
இலவசமாக....

பால் வழங்கப்
பணித்ததால் -
'மில்க் மேயர்' என்று
மக்களால்-

விளிக்கப்பட்டார் - முன்பின்
வரலாற்றிலில்லா விந்தையாக!

பால் -
போலவே...
அவருக்கு -
அமைந்திருந்த
மனமும் வெள்ளை; அவர்தான்-
ம. ராதாகிருஷ்ண பிள்ளை!

●●●

எம்பெருமானார்
எதிராஜர் -
எஞ்ஞான்றும் ஒளிரும்படி
ஏற்றி வைத்த -

வசிஷ்டாத்வைத
விளக்கின் -
வெளிச்சத்தில்
வாழ்ந்திருந்த -

## கவிஞர் வாலி

சென்ற நூற்றாண்டில்,
தமிழ் மண் தரணிக்கு வழங்கிய
மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!



வித்தகர் -
வேங்கடரத்தினம்
பிள்ளைக்கும்;
அஷ்டலட்சுமி அனைய -
அலர்மேல் மங்கைத்
தாயார்க்கும்;

யாதவர் குலத்துதித்த
மாதவர் எனும்படி...

புகழ்சால் மகனாகப்
பிறந்தவர் -
ராதாகிருஷ்ண பிள்ளை; சதா-
ராமன் நாமம் கூவிய கிள்ளை!

●●●

பரம்பரை -
பரம்பரையாக...

மதிப்புமிக்க
மணியக்காரர் குடும்பம் -
என
எல்லோரும் ஏத்தியதால் -

மணியம் என்பதைச் சுட்டும்
'ம' எனும் எழுத்தே - அந்த
வமிசத்தில்
வந்தவரின்...

இனிஷியலாய்
இலங்கியது; அவர்களின் -
தொழில் நேர்மை - அதில்
துலங்கியது!

●●●

பி.ஏ. என்றும்;
பி.எல். என்றும்;
பட்டங்கள்
பெற்றவர்; பிள்ளை -
உயரிய கல்வியறிவு
உற்றவர்;
ஆயினும்
அவர் -
அகந்தை
அறவே அற்றவர்;
தீவிர வைணவராய்த்
திகழ்ந்து...

'நாராயணா' எனும்
நலந்தரும் சொல்லை -
நாவில் நெஞ்சில் பொறித்த
நற்றவர்!

●●●

தமிழ்;
ஆங்கிலம்;
சமஸ்கிருதம்;

மூன்று
மொழிகளிலும் - அவர்
முக்குளித்து
முத்தெடுத்தவர்;

முப்பதுக்கும்
மேற்பட்ட -
நூல்கள் படைத்து
நமக்குக் கொடுத்தவர்!



சங்கப் பாடல்கள்;
சீவக சிந்தாமணி;
மணி மேகலை;
கம்ப ராமாயணம்;

ஆகிய
அருந்தமிழ்ச் செல்வங்களை...
ராதாகிருஷ்ண பிள்ளை -
ராப்பகலாக ஆய்ந்தவர்;
ஆழ்வார்களின்
அருளிச் செயல்களில் -
அவாவுற்று
அவற்றில் ஆழத் தோய்ந்தவர்;

அற நூல்களை -
ஆன்மப் பசி தீர மேய்ந்தவர்;

பிரவசனம்
பண்ணும் அளவு -
வைணவ சித்தாந்தத்தில்
விழுமிய ஞானம் வாய்ந்தவர்!

●●●

விடுதலை
வேள்வியில் -
முழுநேர அரசியல்வாதியாக
முனைந்து ஈடுபட்டவர்;
காந்தியடிகளின்
கொள்கைகளைக் -
கல்வெட்டாய்த் - தன்
கருத்தில் நட்டவர்;

தேசப் பற்றிலும்;
தமிழ்ப் பற்றிலும்;
சித்தம் வைத்து -
சுயநலப் பற்றை விட்டவர்;

பொதுவாழ்வில் -
பரிசுத்தமாய் விளங்கி,
புகழெனும்
பொருப்பின் உச்சம் தொட்டவர்!

●●●

அவர்
ஆக்கிய நூல்கள்...

கல்லூரிகளிலும்; பள்ளிக் -
கூடங்களிலும்;
பாடப்
புத்தகங்களாக இருந்தன -
மாணவ
மாணவியர்க்கு -
அறிவு கொளுத்தும்
அமுதனைய விருந்தென!

ஏகப்பட்ட நூல்களை
எழுதிக் குவித்தார்;
ஞானமழை பெய்து
ஞாலத்தின் கண் -
அப்பிக் கிடந்த
அறியாமைத் தீயை அவித்தார்!

என்றும்
எவராலும் -
வாசிக்கப் பட்டார்;
நேசிக்கப் பட்டார்;
பன்மொழிப் புலமை
பழுதறப் பெற்ற -
பெருமகனார் என்று



பூசிக்கப் பட்டார்!

●●●

எளிய மனிதராக வாழ்ந்த -
பெரிய மனிதர் அவர்; ஓர் -
உவமை
உரைக்க -
அவர் போல்
அம்புவிமேல் எவர்?

ராதாகிருஷ்ண பிள்ளை போல் - ஜன
ரஞ்சகமானவர் என்று -
இந்தியன் வங்கி இயக்குநராக
இருந்த - அவர் மகன்
கோபால கிருஷ்ணனை -
மன்பதை
கொண்டாடுகிறது இன்று!

## 84.கா.ம. வேங்கடராமையா

'சிவ நெறிச் செல்வர்' - என்று
சிலாகித்தது மதுரை ஆதீனம்;
'செந்தமிழ்க் கலாநிதி' - என்று
சிறப்பித்தது தருமை ஆதீனம்;

தகைசால் 'சைவத் -
தமிழ் ஞாயிறு' - என்று
ஆராதித்தது -
அருள்நெறித் திருக்கூட்டம்;

அரிய 'கல்வெட்டு -
ஆராய்ச்சிப் புலவர்' - என்று
தொழுதது - காஞ்சி
தொண்டை மண்டல ஆதீனம்;
மாண்புமிகு 'தமிழ் -
மாமணி' - என்று
போற்றியது -
பெங்களூர்த் தமிழ்ச் சங்கம்!

●●●

இன்னும் -
இதுபோல்...

விருது
விருதாய் -
வாங்கி
வாங்கி...

விருதுகள் பெறும்
விருதாகப் பிறங்கியவர் - கா.ம.
வேங்கட ராமையா எனும்
வாலறிவர்; சொல்லில் -
நுவலவொண்ணாப் -பெரும்
நூலறிவர்!

பூந்தமிழ்ப் -
புலவர்;
வடமொழி
வித்தகர்;
ஆங்கில
அறிஞர்;

என
எத்துணையோ
ஏற்றங்கள்
ஏற்றிருந்தும்...

தருக்கேறி
செருக்கேறி
குறை குடம் போல்

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

## 85. பாலசரஸ்வதி

பெயர்தான்-
பாலசரஸ்வதி;
வாய்த்த கலைத்திறனை
வைத்துப் பார்ப்போமாயின் -
வானம் விட்டு
வையம் இறங்கிய...
சாட்சாத்
சரஸ்வதி;
சதங்கை கட்டி
சபையேறி நின்று-
சதிர் புரிந்த
சங்கீத நதி;
அடவுகளின்
அர்த்தங்கள்-
அனைத்திற்குமான
அகராதி;
ஆடற் கலையின்
அந்தம் ஆதி!

●●●

பரதநாட்டியப்
பேரரசி-
பாலசரஸ்வதியைப்
பற்றி-
சிலாகித்துப் பேச
சொற்கள் போதாது;
அவர்-
அவனியின் மிசை
அபூர்வமாய்
அவதரித்த புகழ்மாது!

●●●

அலரும் பூப்போல்-அவரது
அலாரிப்பு; நம்-
விழிகளில்
வானவில்லின்
வர்ணம் காட்டும்-அவரது
வர்ணம்; சப்த-

**கவிஞர் வாலி**

சென்ற நூற்றாண்டில்,
தமிழ் மண் தரணிக்கு வழங்கிய
மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!

ஜூனியர் விகடன் 2.9.2003



ஜாலங்களின்
ஜாஜ்வல்யம் விளக்கும்-
ஜனரஞ்சகமான-அவரது
ஜதிஸ்வரம்; சொற்-
கட்டுகளைத்-தேன்
சொட்டுகளாய்த்
தெறிக்கும்-அவரது
தில்லானா; முத்து-
ரதங்கள்
ராஜவீதியில்
பவனி வருதல் போல்-பார்க்கப்
பரவசமூட்டும்...

அவர்
ஆடிக்காட்டும் பதங்கள்;
தலை
தாழாது நிற்கும்-வெகு
நேர்த்தியான- பாலாவின்
நிருத்தியத்தால்...

முத்துத் தாண்டவரும்;
மாரிமுத்தாப் பிள்ளையும்;
இயற்றி யருளிய
இனிய பதங்கள்!

●●●

'கிருஷ்ணா! நீ-
பேகனே பாரோ!' என...

புரந்தரதாசர்
புனைந்த-
கன்னடக்
கிருதி-
பாலாவின்
பரதத்தால்-
உலகப் புகழ்
உற்றது;
அது ஓர் உவமை-
அற்றது!

அதை-
அவர் அபிநயிக்கையில்...
வெண்ணெயை
வைத்துக் கொண்டு-
ஆயர்குல மடந்தை
அசோதை-

கருங்
குழலில்-
மயிற் பீலியைச் செருகிய
மாதவனை;
'யாண்டும் குறும்பு செய்யும்
யாதவனை;

அருகில் வருமாறு-கெஞ்சி
அழைக்கின்ற அவலம்-
நம்
நெஞ்சைத் தொடும்; நம்
கண்கள்-
கண்ணீர்க் கோலம் இடும்!

●●●

பாலாவின்-
பரதத்தை...

வரி வரியாய்-
வரி வரியாய்-
தாள்களில்
தீட்டியவர் டி.கே.சி.;

ரசித்து ரசித்து-புதிய
ரசானுபவத்தில்-தனை
முற்றும் இழந்தவர்
மூதறிஞர் ராஜாஜி;

'ஆடுவது-



அடவி வாழ்-
மயிலா?
மானா?' எனக்
கேட்டது-
கல்கியின் பேனா!

●●●

'ஆடற் கலைக்கு-அழகு
தேடப் பிறந்தவள்!' என்று-

பாரதிதாசனார்
பாட்டொன்று உண்டு;
அதை
அவர்-
பாடியிருக்கக் கூடும்...
பாலசரஸ்வதி நடனம் கண்டு!

புரட்சிக் கவிஞர்
புனைந்த கவிதை- ஒரு
புடவை கட்டிப்
புவிமிசை போந்தாற் போல்...

பிறங்கியவர்-
பாலா என்னும் வனிதை!

●●●

பிறரிடம்
பார்க்க வொண்ணாது-
பாலாவின்
பரதத்தில் உள்ள நேர்த்தி;

அதற்குக் காரணம்-
அவர்-
வீணை தனம்மாளின்
வாஞ்சைமிகு பேர்த்தி!

தனம்மாளின்-
திருமகள் ஜெயம்மாள்;
ஜெயம்மாளின்-
திருமகள் பாலா;

'பாலாவுக்குப்
பெற்ற தாய் புகட்டியது-
முலைப் பாலா?
கலைப் பாலா?'

என-
எவரும் வினவக் கூடும்;
அந்த அளவு
அற்புதமாய்-
அவரது
அழகிய பாதங்கள் ஆடும்!

●●●

புகழ்சால்-
பாலசரஸ்வதி...
கந்தப்பப் பிள்ளையை-
குருவாய்க் கொண்டவர்;
குருவின்
குறைவற்ற
கடாட்சத்தால்
கலையின் உச்சம் கண்டவர்!

●●●

உலகம் சுற்றிய
உதயசங்கரையே-
பிரமிக்க வைத்தது
பாலாவின் நடனம்;
பன்மொழிப் புலமை பெற்றது-
பாலாவின் நயனம்!

●●●

பாலாவின் நடத்தைப்-
பதிவு செய்திருக்கிறார்-
படச்சுருளில்-
பெரும் இயக்குனர் சத்யஜித்ரே;
மூப்பை வென்று
முக பாவங்களை-
அழகுறக் காட்டும்

ஆற்றல் வாய்த்தவர்...

படிமிசை-
பாலசரஸ்வதி ஒருவரே!

●●●

'பத்ம பூஷண்'
பாலசரஸ்வதி...
பெண்ணாய்ப் பிறந்த
பரதமுனி; அந்த-
பாலாபோல்-
பார்க்கக் கூடுமோ இனி!

## 86.எம்.எம்.தண்டபாணி தேசிகர்

**'தா**மரை பூத்த-
தடாகமடி!'

திருச்சி
தியாகராஜன் அவர்கள்-
இயற்றிய
இந்தப் பாடலை...

செந்தமிழர்
செவியெங்கும்-
சிந்தாமல் சிதறாமல்
சேர்த்த பெருமகனார்;

'துன்பம் நேர்கையில்-
யாழெடுத்து நீ...'

பாவேந்தர்
பாரதிதாசன் அவர்கள்-
புனைந்த-இப்
பாடலை...

தேஷ் ராகத்தில்-
தோய்த்தெடுத்து-
'பேஷ்' என்று-இசைப்
பிரியர்கள்...

சிரக்கம்பம் செய்து
சிலாகிக்கும்படி-
தமிழ் கூறும் நல்லுலகிற்குத்
தந்த திருமகனார்;

'இசை அரசு' என-
இசைக்கப் பெறும்-
தண்டபாணி
தேசிகர் ஆவார்; அவரது
இசையைத்-தம்
இருசெவியால் பருகும்-எவரும்
'இந்தா' என்று-தம்
இதயங்களை ஈவார்!

●●●

அழுத்தந் திருத்தமாக-
அருந்தமிழ் உச்சரிப்பு;
அழகு
அழகான-
ரவைஜாதி சங்கதிகளுடன்-
ராகங்களின் விஸ்தரிப்பு;

அவரது-
ஆலாபனையில்...
மூன்று காலத்திலும்
மூச்சு வாங்காமல்-அவரது
சாரீரம்-
செய்யும் சஞ்சரிப்பு;

பனுவலின்
பொருள் புரிந்து கொண்டு-
வல்லினம் மெல்லினம்
விளங்க-

தேசிகர் பாடுகையில்-அவையோர்
தேகத்தில் எழும் புல்லரிப்பு!

●●●

வெண்கலக் கடையில்
வேழம் புகுந்தாற்போல்...

கணீரென்று-அவரது
குரல் வளம்;
ஓர்
ஒலிபெருக்கியின்
தயவு இன்றியே-அது போய்த்
தொடும் பலர் உளம்!



அதிக
அங்க அசைவுகள் இன்றி...
அமைதியாக
அமர்ந்து பாடுவார்;

நல்லிசை
நறவமாகி-ரசிகர்களின்
நாடி
நரம்புகளுள் ஓடுவார்!

●●●

ஓதுவார் குலத்தில்
உதித்தவர்;
தேவாரம் திருவாசகம்-முதலிய
தெய்வப் பனுவல்களைப்-

பிள்ளைப்
பிராயத்திலேயே-தன்
நெஞ்சில்;
நாவில் பதித்தவர்!

அவரது
அருவியனைய இசை...
பக்தி
பூர்வமாக இருக்கும்;

வெயிலில் வைத்த
வெண்ணெயாய்-
செவிமடுப்போர்
சிந்தையை அது உருக்கும்;

தொல்லிசை;
மெல்லிசை;
இவை
இரண்டிலும்...

பெரும் ஞானம்
பெற்றிருந்த போதும்-
தேசிகர் வளர்த்ததில்லை
தருக்கும் செருக்கும்!

●●●

மகா
மேதைகளை;
தமிழிலும்-
தமிழிசையிலும்-
பேரறிவு பெற்ற
பெருமக்களை;

உலகுக்கு
உதவிய-
தஞ்சைத்
தரணிதான்...

தேசிகரையும்-நமக்குத்
தந்தது;
இந்த
இனிய தமிழரின்-
பிறப்பால்-புதுப்
பொலிவு இசைக்கு வந்தது!

முத்தமிழ் இசை வித்தகர்-
முத்தையா தேசிகரும்;
பெண்ணரசியார்
பாப்பம்மாள் எனும்-
பெரும்
பத்தினித் தெய்வமும்;

நெடு
நாள்கள்-
ஆற்றிய
அருந்தவப் பயனாய்...

மண்மிசை
முகிழ்த்தவர்-
தண்டபாணி



தேசிகர்; கருவிலேயே-
திருவுடைய
தெய்விகர்!

●●●

மதுரை
மாரியப்ப சுவாமிகளால்...

படவுலகில்
பங்கு பெற்றவர்;
தனக்கு வந்த வாய்ப்பை
தேசிகருக்குத் தந்தார்-
அருள்மிகு
அந்த நற்றவர்!

●●●

ஜன்மத்திற்கும் போதுமே-
ஜெமினி 'நந்தனா'ரில்...

தேசிகர் பொழிந்த
தேன்மழை;
அந்தப் பாடல்கள்
அனைத்துமே -
அருந்தமிழ்த் தாய்க்கு
அவர் அணிவித்த இழை!

●●●

'பாவ மன்னிப்பு'
படப்
பாடல்களுக்குப்-
போட்டி வைத்தாற் போல்...

'நந்தனார்' படத்தின்
நல்லிசைப் பாடல்களுக்கும் -

பரிசு
பத்தாயிரம் ரூபாய் என்று...

அன்றை நாளில்
அறிவிக்கப் பட்டது;
விமர்சனக் கடிதங்கள்
வந்து குவிந்து-
எண்ணிக்கையில்
எண்ணாயிரத்தைத் தொட்டது!

●●●

'பட்டினத்தார்'
'தாயுமானவர்'
'மாணிக்கவாசகர்'
'திருமழிசை ஆழ்வார்'
என-
ஏராளமான படங்களில்...

தேசிகர்
தோன்றினார்;
ஒவ்வொன்றிலும்-தன்
ஒண்டமிழ் முத்திரையை-
அவர்
ஆழ ஊன்றினார்!

●●●

அண்ணாமலைப் பல்கலைக்
கழகத்தில்

அவர்-இசைத்
துறையின் - ஏற்றமிகு
தலைவராக...

பல்லாண்டு
பணி யாற்றினார்;
அருந்தமி ழிசையை
அரியாசனம் ஏற்றினார்!

●●●

எமனோடு-ஒருநாள்
ஏறினார் வானம்; ஆனால்-

அவரோடு-
ஆகாயம் ஏறாமல்-
வையகத்தில் நிற்கிறது-அவர்
வழங்கிய கானம்!

(இன்னமும் இருக்கின்றார்கள்)

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

## 87. சுகி. சுப்பிரமணியம்

ரேடியோ நாடகம் என்பது -
ஒரு
ரசவாத வித்தை;
ஆராலும்
அவ்வளவு சுலபமாக -
ஆற்ற
ஆகாது அத்தகு சித்தை!

ஆம்!
அது...
நேயர்களின்
நெஞ்சத் திரையில் -
வார்த்தைத் தூரிகையால்
வடிவங்களைத் தீற்றுவது;
வானொலிப் பெட்டிமுன்
வீற்றிருப் போரின் -
காதுகளைக்
கண்களாக மாற்றுவது!

இடம் பொருள் ஏவல் -
இன்னோரன்ன விஷயங்கள்...

அவர்களுக்கு - ஓர்
அரூபமாய்த் தெரியும்படி;
அதே நேரத்தில் -
அவற்றின் -
ஆழம்
அகலம் புரியும்படி;

ஒலிகளால் வரையப்பெறும்-
ஓவியம் அது;
காற்றில் புனைகின்ற -
காவியம் அது!

●●●

அந்த
அரிய கலையில்...
சுகி.
சுப்பிரமணியம் -
ஆழங்காற் பட்டவர்; நேயர்களை

## கவிஞர் வாலி

**சென்ற நூற்றாண்டில்,**
**தமிழ் மண் தரணிக்கு வழங்கிய**
**மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!**



அழ சிரிக்க விட்டவர்;
கோதறு அக் கலையின் -
கொடுமுடி தொட்டவர்; அதில் -
தன் வெற்றிப் பதாகையைத்
தகத்த காயமாய் நட்டவர்!

●●●

சுகி அவர்கள் -
சென்ற நூற்றாண்டின் -
அம்பதுகளில் - திருச்சி
ஆல் இந்தியா ரேடியோவில்...

பணிபுரிந்த
பொழுதுகளில் -
அவரது
அற்புதமான -
ஒன்பான் சுவை
ஒருசேரப் பிறங்கிய
பல நாடகங்களில்
பங்கு பற்றி -
நிலையான புகழ் பெற்ற
நிலையக் கலைஞர்கள்...

திரு. டி.வி. கிருஷ்ணமூர்த்தி;
திருமதி. சந்திரகாந்தா;
திருமதி. டி.எம். கமலா;
திருமதி. வீரம்மா;

ஆகியோர்
அற்றை நாளில் -

சினிமா நடிகர்களுக்குச்
சமமாக -
வானொலி நேயர்களிடையே
விளங்கியது உண்டு;

சுகி.

சுப்பிரமணியத்தின் -
தமிழ் உரையாடல்களைத்
துணையாகக் கொண்டு!

●●●

நாடகம்;
நாவல்;
சிறுகதை; என -
செந்தமிழின்...

சகல கூறுகளிலும் - அவர் பேனா
சென்று கொடி கட்டியது;

'அவர் பாணி -
அலாதியானது!' என -
வாசகர்
வட்டம்...

சுகியின் பேனா
சிந்திய -
ஒண்டமிழ்த் தேனை
உண்டு சப்புக் கொட்டியது!

●●●

அவர்
ஆதிநாள்களில்...
திருநெல்வேலியில்
திரு. டி.கே.சி.யின் -
வட்டத் தொட்டியில்
வளர்ந்தவர்;

பாட்டுக் கனிகளைப்
பிழிந்து பிழிந்து -
ரசமெடுத்து
ரசிக மணி வார்க்க வார்க்க -

பருகிப் பருகி - மனம்
பெரிதும் கிளர்ந்தவர்!
சுகி; மீ.ப.
சோமசுந்தரம்;
இருவரும்
இளமையில் -
ஒருசாலை மாணாக்கர்;
இருவருமே -
ஒண்டமிழ் உட்கார்ந்த மா நாக்கர்!

●●●



சுகி.
சுப்பிரமணியம் அவர்கள்...
தாமிரபரணி
தீரத்தில் -
தோன்றிய
தமிழ் ஊற்று;
வரகவி பாரதியும் -
வ.உ.சி.யும் -
உலவிய
ஊராம் -

திருநெல்வேலியில்-
திருக்கண் மலர்ந்த தமிழ்நாற்று;
நல்ல தாயும் -
நல்ல தந்தையும்
நோன்பிருந்து பெற்று -
நமக்களித்த -

நல்ல மனிதன்; மனிதத்தின் -
நற்பொருளாய் நின்ற புனிதன்!

●●●

ஆரம்ப காலங்களில்
அடியேனை...

ஊக்குவித்த
உத்தமர் அவர்;
நிற்க
நிழலில்லாமல் தவித்த-
எனையொத்த
எத்துணையோ எழுத்தாளர்க்கு -

சுகிதான் -
சாயக் கிடைத்த சுவர்!

●●●

'கலைமக'ளில் - அவரது
கதைகள் வெளியானவுடன்...
வாசித்து
வாசித்து -
கதையெழுதக்

கற்றோர் -

அற்றை நாளில்
அனேகர் உண்டு;
அந்த வகையில்
அடங்காது சொல்லில் -
அவர்
ஆற்றிய தொண்டு!

●●●

அவரது
அற்புத எழுத்துகள்...

பிற மொழிகளில்
பெயர்க்கப்பட்டு -
தமிழின்
தகவை -

வடக்குக்கும்
விளங்க வைத்திருக்கின்றன;
அவரது
ஆக்கங்களை -
மராட்டி; இந்தி - முதலிய
மொழிகள் மொய்த்திருக்கின்றன!

●●●

சுயநலம் கொண்டு - தான்மட்டும்
சுகிக்கும் உலகில்...
'சுகி! சுகி!' என்று - தமிழை
சுகிக்கப் பிறருக்கும் தந்தவர் -
சுகி; அஃதே போல் -
சுகிக்கு வாய்ந்த சகி!
ஆம்;
அவரது மனைவியார்...
கோதை நிகர்த்த
கோமதியம்மையாரும் -

தமிழுக்குத் தகவு சேர்த்தவர் ;
தேர்ந்த படைப்புகளை வார்த்தவர்

●●●

சமய ஒற்றுமையைச்
சாற்றும் -
அவர்
பிள்ளைகளுக்கு - இட்ட
பெயர்களான...
பெருமாளும், சிவமும்! அப் -
பெயர்கள் சுட்டும் -
திருமண்;
திருநீறு;
ஒன்று -
என்று!

●●●

சுகி.
சுப்பிரமணியம்..
ஆயுள் முழுதும்
ஆற்றினார் -
அருந்தமிழ்த்தவம்;
அதைத் தொடர்கிறார் சுகி.சிவம்!

## 88. இளங்கோவன்

தொண்டை மண்டலத்தில்
தோன்றிய -
தணிகாசலம் எனும்
தமிழ்த் திருமகன்தான் -
தரித்துக் கொண்டான்
தனக்கொரு -
புனை
பெயராக -
'இளங்கோவன்' எனும் -
இசைமிகு பேரை;
அந்த இளங்கோவன்போல்
இந்த இளங்கோவனும் -
கவினுற இசைத்தான்
கண்ணகி சீரை;
இசைத்து - தன்பால்
இழுத்தான் -
உலகம்;
ஊரை!

●●●

சேரன் தம்பி
சிலம்பை இசைத்தது -
பதப் படுத்தப்பட்ட
பனை ஓலையில்;
இவன்
இசைத்தது-
நிழற்படம்
நின்றாடும் திரைச்சீலையில்!
முன்னதுபோல் -
பின்னதும்...
இருந்தமிழின்
இருப்பைக் காட்டுகிறது;
முன்னதுக்குப்
பின்னது -
மேலும்
மாண்பு கூட்டுகிறது!

●●●

இளங்கோவனின் -
இனிய வசனங்களை...
அம்புவியில் ஆர்
அறியாதாரே?
அவ்வாறு
ஆரேனும் இருப்பின் -
அவர்
அறியாதாரே!

●●●

பியூ. சின்னப்பாவும்;
பி.கண்ணாம்பாவும்;
இளங்கோவன்
இயற்றிய -
வண்ணத்தமிழ்
வசனங்களை...
தங்கள்
தங்கக் குரலால்



தமிழ்கூறும் நல்லுலகெங்கும்
தெளித்தனர்;
செந்தமிழர் - தம்
செவிகளே வாய்களாகி -
அவற்றை
அருந்தி அருந்திக் களித்தனர்!
'கண்ணீரைத் துடைக்கலாம்;
களங்கத்தைத் துடைக்க
முடியுமா?'
'வைகையைத் தாண்டலாம்;
வாழ்க்கையைத் தாண்ட
முடியுமா?'
'அத்தான்! தங்களுக்கு
அளிக்க முடியாத -
அழகையும் இளமையையும்
அந்தக் -
காலத்திற்குக்
கொடுத்துவிட்டேன்!'
என்பவை போன்ற
ஏரார்ந்த வசனங்கள் -
எம்மனோர்
எண்ணத்தில் ...
வாடாது இன்னமும்
வீற்றிருக்கின்றன;
இளங்கோவனை
இதய சிம்மாசனத்தில்
எழுத்து வேந்தாக
ஏற்றிருக்கின்றன!

●●●

பேரறிஞர் அண்ணா -
பாராட்டியதுண்டு;
கலைஞர் பெருந்தகை
களித்துப் போற்றியதுண்டு;
இளங்கோவன் பேனாவில்
இருந்து இறங்கிய -
உயரிய
உரையாடல்களை;
அவர்
அருமையாய்க்
கையாண்டிருக்கும்
கவின்மிகு சொல்லாடல்களை!

●●●

தமிழ்த்
திரையுலகில்...
வான்புகழ்பெற்ற
வசனகர்த்தாவாக -
இளங்கோவன்
இலங்கினார்;

தூய
தமிழின்,
தூதுவனாகத்
துலங்கினார்!
அவரது
அற்புத
உரையாடல்களாலேயே -
உச்சத்தைத் தொட்ட-
படங்கள் பல; இதோ! அந்தப் -
படங்களில் சில!

●●●

பாகவதர் -
பங்கு பற்றிய...
'அம்பிகாபதி'
'அசோக்குமார்'
'சிவகவி'
'ஹரிதாஸ்'
'சிந்தாமணி'
இத்தியாதி;
இத்தியாதி;
இவைபோல்



இசை மேவிய -
பிரபல நட்சத்திரம்
பி.யூ. சின்னப்பா -
பங்கு
பற்றிய....

'கண்ணகி'
'குபேர குசேலா'
'கிருஷ்ணபக்தி'
'மஹாமாயா'
இத்தியாதி;
இத்தியாதி!

●●●

புராணத் தமிழிலிருந்து -
புதுமைத் தமிழுக்கு -
தமிழ்த்
திரையுலகம் -
இடம்பெயரக் காரணம்
இளங்கோவன்;
சுருங்கச்
சொன்னால்...
அவன் -
ஆகாயம் விட்டு
அம்புவி இறங்கிய
அபூர்வ ஜீவன்!

●●●

காஞ்சீபுரத்தில் -
'கதர்' -
என்றோர்
ஏட்டை -
விலை 'காலணா' என
வைத்து...

அற்றை நாளில்
ஆர்வமொடு நடத்தினார்
இந்தப் பெருமகன்; தமிழன்னை
ஈன்றளித்த திருமகன்!

●●●

கனத்த சரீரம்;
கனிவான சாரீரம்; சற்றே-
வழுக்கை
விழுந்த தலை;
விழியில் - ஒரு
வெளிச்ச அலை!
இதுதான் -
இளங்கோவன் உருவம்;
கடுகளவும்
காண முடியாது - அவர்
தலைக்குள்
தானெனும் கருவம்!

●●●

வீட்டில் - அவர்
வைத்திருந்தார்...
நுவலுதற்கரிய - பெரிய
நூலகம்;
அதன் நூல்களை -
அவரிடமிருந்து -
யாரும் பெற இயலாது
யாசகம்!

●●●

இளங்கோவடீ.. என்னும் -
இலக்கிய மேதை...
வாழ்வின் பிற்பகுதியில் -
வசதியா யில்லை;
வறுமைத் தொல்லை;
அந்த -
அவமானம் -
அருந்தமிழ் நாட்டுக்கன்றி -
அவருக்கு இல்லை!

- (இன்னமும் இருக்கின்றார்கள்)

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

## 89. எஸ்.எம்.சுப்பையா நாயுடு

'தூங்காதே! தம்பி-
தூங்காதே!'

'காடு விளைஞ்சு என்ன மச்சான்-
கையும் காலும் தானே மிச்சம்!'

'எத்தனை காலம்தான்-
ஏமாற்றுவார் இந்த நாட்டிலே?'

'சிங்கார வேலனே!
தேவா!"

'அன்னையைப் போல் - ஒரு
தெய்வமில்லை!'

'நீ எங்கே? என் -
நினைவுகள் அங்கே!'

'காசேதான்
கடவுளப்பா!'

'திருடாதே! பாப்பா!
திருடாதே!'

'எண்ணமெல்லாம் - ஓர்
இடத்தையே தேடுதே!'

'தங்க நிலவில்-
கெண்டை இரண்டு!'

காற்றும் -
ககனமும் -
கனலும் -
புனலும் -
வாழுநாள் மட்டும்
வாழும் பாடல்கள் இவை;

எஸ்.எம்.சுப்பையாநாயுடு -
எனும் இசை மேதை...
ஆர்மோனியப் பெட்டியிலிருந்து-
அள்ளி அள்ளி எடுத்து -
தமிழ்கூறும் நல்லுலகிற்குத்

**கவிஞர் வாலி**

**சென்ற நூற்றாண்டில்,
தமிழ் மண் தரணிக்கு வழங்கிய
மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!**

ஜூனியர் விகடன் 16.9.2003



தந்த அமுதச் சுவை!

●●●

தமிழ்த்-
திரையுலகின்-
மூத்த இசையமைப்பாளர்களில்-
முன் வரிசையில் நிற்பவர்...

எஸ்.எம்.எஸ்.
என்று-
எல்லோராலும்
ஏக மரியாதையுடன்
விளிக்கப்பெற்ற-

சுப்பையா நாயுடு-ஒரு
செங்கோட்டைச் சிங்கம்,
எஸ்.ஜி.கிட்டப்பாவை -
எந்த மண் தந்ததோ -
அதே மண் -
அவனிக்களித்த தங்கம்!

அவர்-ஓர்
ஆல விருட்சம், அந்த -
விருட்சம்
விட்ட விழுதுகளாக -
வெள்ளித் திரையில்
விளங்கி...

பலரது வாழ்வு
பெற்றதுண்டு வெளிச்சம்!

அவர் உள்ளம்-
அப்படி;
அது

அனேகருக்கு -
அற்றை நாளில்
அளந்திருக்கிறது படி!

●●●

'மலைக்கள்ளன்'
'நாடோடி மன்னன்'
என-
எம்.ஜி.ஆர். படங்களும்;
'அன்னையின் ஆணை'
'மரகதம்'
என-
எத்துணையோ சிவாஜி படங்களும்;

சுப்பையா நாயுடுவின் புகழைச்
சுட்டும்;
நாயுடு பாட்டில்-
நறவம் சொட்டும்!

●●●

கூடுவிட்டுக்
கூடு பாய்வது போல்...

பின்னணிப்
பாடகர்களின்
குரலுக்குள்-தானே
குடி புகுந்து...

எஸ்.எம்.எஸ். பாடுவார்; அவர்போல்-
எவர் சங்கதிகள் போடுவார்?

அவர்
அமைத்த
வர்ண மெட்டுகள் அனைத்தும் -
வழிவழி வந்த...

தொல்லிசையைத்
துல்லியமாய்க் காட்டும்;
எந்த ராகத்தை
எடுத்து
அவர் ஆண்டாலும் -
அந்த ராகத்தின்



ஆரோகணம் அவரோகணம்-
உள்ளது
உள்ளபடி நின்று நமக்கு
உவகை
ஊட்டும்;

நாபிக் கமலத்திலிருந்து
நாதத்தைக் கிளப்பி-
வெண்கலக் கடையில்
வேழம் புகுந்தாற்போல்...

நாயுடு பாடிக் காட்டுவார்
நல்ல நல்ல மெட்டுகளை;
கேட்கக்
கேட்க -
அந்த மெட்டுகள்
அலர்த்தும் -
நம்
நெஞ்ச மொட்டுகளை!

●●●

எம்.ஜி.ஆரும் -
எஸ்.எம்.எஸ்.நாயுடுவும்...

மிக-
மிக-
நெருக்கமான
நண்பர்கள்;

ஆரம்பகாலம் தொட்டு,
அவர்கள்...

ஒருவருக்குள்
ஒருவர் போய் -
உட்கார்ந்து விட்ட
உத்தம அன்பர்கள்!

●●●

சுப்பையா நாயுடு -
சிறந்த-
இசைமேதை மட்டுமல்ல;
இன்னும் எவ்வளவோ
உண்டு சொல்ல;

'பில்லியர்ட்ஸ்' என்னும்-
பணக்காரர்களின் ஆட்டத்தில் -

ஆராலும்
ஆகாது -
அவ்வளவு சுலபமாய்
அவரை வெல்ல!

●●●

அவரது தொழில் நேர்மை-
அப்பழுக்கு அற்றது;

டி.எம்.எஸ்.ஆகட்டும்
பி.சுசீலா ஆகட்டும்-
அவர்கள்-
அவர் நினைத்தது போல்...

கமகங்களும்-
கார்வைகளும்-
கன
கச்சிதமாக-

தொண்டையில்
துளிர்க்கும் வரை -
விடமாட்டார் நாயுடு என்பது-
உலகமே அறியப் பெற்றது!

அவரது
அருந்தமிழ் உச்சரிப்பும்
வல்லோசை மேல்லோசை
விளங்க நிற்கும்;

பிரபல
பாடகர்க ளாயினும் -
அவர்களது சிந்தனை



அவரிடம் மாணவன்போல்
கற்கும்!

●●●

சுப்பையா நாயுடுவின்
சீர்த்திமிகு சீடர் என்று -

வையமிசை
விளங்குகிறார் -
மெல்லிசை மன்னர்
எம்.எஸ்.விசுவநாதன் இன்று!

●●●

புத்திர
பாக்கியம் இல்லாத...

எஸ்.எம்.எஸ்.நாயுடுவிற்கு
எம்.எஸ்.வி.தான் -
இறுதியில்
இட்டார் கொள்ளி; வாய்க்கு -
அரிசியும் இட்டார்
அங்கையில் அள்ளி!

## 90. எம்.பி.சீனிவாசன்

'திரைத்
துறையில் உள்ள-

இசைக்கலைஞருக்கெல்லாம்
இவர்தான் -
இன்றைக்கும்
இதய தெய்வம்; நாங்கள்-
வாழுநாள் வரை-இவரை
வணங்குதல் செய்வம்!'

என்று -

என்னிடம்-

படத்துறையில்
பணிபுரியும்-
அனேக இசைக்கலைஞர்கள்
அந்தரங்க சுத்தியாக-

இவரைப் பற்றி-
இயம்பியது உண்டு;

அன்னணம்
அவர்கள் -
கூறிய
கூற்றை...
வழிமொழிகிறேன் நானும் - அது
வாய்மை என்பதைக் கண்டு!

●●●

நெருங்கிய-
நண்பர்களால்...

'வாசு' என்று
விளிக்கப் பெற்ற -
எம்.பி.சீனிவாசன்
எளியவர்களின் தந்தை;

சிவப்புச்
சிந்தனைகள்
மேலோங்க நின்றது - அந்த
மாமனிதனின் சிந்தை!

நால் வருணத்தில் -
மேல் வருணம் எனப்படும் -
குலத்தில் பிறந்தும்-அவர்
குலம் கோத்திரங்களை -
வெறுத்தவர்; கொள்கை
வாளால் அவற்றை ஒறுத்தவர்!

●●●

ஜயகாந்தனின் சிந்தனையில்-
ஜனித்த...

'தென்னங்கீற்று
ஊஞ்சலிலே...'
என்ற



ஏரார்ந்த பாட்டும்;

பொதுவுடைமைக் கட்சியின்-
புகழ்சால் கவிஞர்-
கண்ணியம் மிகுந்த
கே.சி.எஸ்.அருணாசலம்
ஆக்கி
அளித்த...

'சின்னச்சின்ன
மூக்குத்தியாம்;
சிகப்புக்கல்லு
மூக்குத்தியாம்!'

எனும்
ஏற்றமிகு பாட்டும்;

'பாதை தெரியுது பார்' எனும் -
படத்தில் இடம் பெற்று-
பட்டி தொட்டியெல்லாம்
பரவி நின்றது;

அந்த
அற்புதப் பாடல்களுக்கு-

இனிய
இசை-
ஏழை பங்காளன்
எம்.பி.சீனிவாசன் தந்தது!

●●●

கம்யூனிஸ்ட்
கட்சியின் பால்-
எஞ்ஞான்றும் காதல் கொண்ட
எம்.பி.சீனிவாசன்...

இணையற்ற
இசை விற்பன்னரும் கூட;

பல
படங்களில்-

அவரது
அளப்பரும் இசைஞானம்...

வெளிப்போந்து
வருடியிருக்கிறது -
நம்
நெஞ்சங்களை-

நாடி
நரம்புகளில் -
உவகைப் பெருக்கொன்று
ஊற்றெடுத்து ஓட!

●●●

இன்றும்-
இன்தமிழிலும் மலையாளத்திலும்...

எத்துணையோ படங்கள்
எம்.பி. சீனிவாசனின் -

மெல்லிசை
மேதைமையை-

நமக்கு
நினைவூட்டி மகிழ்விக்கும்;
அவரது இசை
ஆர்நெஞ்சையும் நெகிழ்விக்கும்!

●●●

படத்துறையில்
பங்குபற்றும் எவரும்...

தனக்கென வாழ்கையில்-
தோழர் சீனிவாசன் மட்டுமே-
ஊர்க்கென
வாழ்ந்தார்;
உதிரத்தில்
ஊறியிருந்த-
பொதுவுடைமைச் சித்தாந்தத்தில்
பொழுதும் ஆழ்ந்தார்!

விரல் வலிக்க -
வயலின் வாசிப்பவர்களுக்கும்;
குரல்வலிக்க



கானம் இசைப்பவர்களுக்கும்;

உடனுக்குடன்
ஊதியம் வழங்கப்படாத-
அவல நிலையை
அவர்தான் மாற்றினார்;

இருந்த
இசைக் கலைஞர்களையெல்லாம்...

ஒன்று சேர்த்து
ஒரு சங்கம் நிறுவி-
சங்கீத
சிற்பிகளின் -

வாழ்வில் -
விளக்கு ஏற்றினார்!

அதனால்-
அவர்...

பல
படாதிபதிகளின் -

அர்த்தமற்ற கோபத்திற்கு
ஆளானார்; அவருக்கு -
வருகின்ற
வாய்ப்புகள்-அவர்களால்
குறைந்தபோதும்- அதுபற்றிக்
கிஞ்சித்தும் கவலைப்படாது...
வாடிய கலைஞர்களின் -
வறுமையைச் சாய்க்கும் வாளானார்!

●●●

எம்.பி.எஸ்.
என்னும்...

மா மனிதன்
மதங்களைக் கடந்தவர்;
ஏற்ற கொள்கைவழி-சிங்க
ஏறென நடந்தவர்!

ஷைபுதீன் கிச்சுலூ-எனும்
சுதந்திரப் போராட்ட வீரரின்...
மகளை-

மணம் முடித்தார் -
மறையவர் குலத்தில்
முளைத்த சீனிவாசன்;

அவரினும்
ஆர் உளர்
அனைத்து உயிர்க்கும்
அன்பு காட்டும் சிறந்த நேசன்!

●●●

எம்.பி.சீனிவாசன்
ஏற்றிவைத்த விளக்காக...

இன்றும்
இசையோடு-

வடபழனியில்
விளங்குகிறது-

வலிவும்
பொலிவும் -
மிக்க
மாபெரும் சங்கமாக...

திரைப்பட -
இசைக்கலைஞர்களின் சங்கம்-
தகத்தகாயமாக; கோடையிலே-
தண்ணிழல் தரும் தருவாக!

●●●

அந்தமான் சென்றிருந்தபோது-
அங்கேயே...

எம்.பி.எஸ்.உயிரை
எமன் உரித்தான்;
வானுலகுக்கும் அவர் சேவை-
வேண்டுமென வரித்தான்!

-இன்னமும் இருக்கின்றார்கள்

## 91. கிருஷ்ணன் பஞ்சு



தமிழ்த்
திரையுலகில்...

இவர்கள்தான்
இரட்டையராக - முதன்முதல்
இணைந்து தொழில்புரிந்த
இயக்குநர்கள்...

எனும்
ஏற்றம் பெற்றவர்கள்;
சாதி -
சமயம் -
குலம் -
கோத்திரம் -

இத்தகைய
இடைத் தடைகளைத்
தங்கள்
தோழமையால்...

பெயர்த்தெறிந்த
பெருமையை உற்றவர்கள்!

●●●

படவுலகில் - தன்
பணியால் -
பெரும்
பெயர் படைத்து -

ராஜாபோல் விளங்கிய
ராஜா சாண்டோவிடம் -
இவர்கள் -
இருவரும்...

உதவியாளராய்
ஊழியம் புரிந்து -

# கவிஞர் வாலி

## சென்ற நூற்றாண்டில், தமிழ் மண் தரணிக்கு வழங்கிய



# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!

30.9.2003



சினிமாக் கலையைச்
செவ்வனே கற்றவர்கள்;

அனைத்தும்
அறிந்தும் -
அனைத்தும் அறிந்த
ஆணவம் அற்றவர்கள்!

●●●

படவுலகில் - பெரும்
பிரக்கியாதி பெற்ற...

கிருஷ்ணன் பஞ்சுவை - நேரில்
காணும் எவரும் -
அவர்களது
ஆடம்பரமற்ற எளிமைகண்டு -
ஆச்சரியப் படுவர்;
அங்கைகள் கூப்பிடுவர்!

●●●

ஆதிநாளில்...
'ஆராய்ச்சிமணி' படத்தில்...

உதவி இயக்குநர்களாக
ஊழியம் புரிந்த இவர்கள் -

பின்னாளில்
பிரமிக்கத்தக்க -
வெற்றிப்படங்களை
வழங்கியவர்கள்;
இயக்குநர் துறையில்
இசைமிக கொண்டு -
கோடம்பாக்கத்தில்
கோலோச்சி முழங்கியவர்கள்!

சினிமாத் துறையின்
சகல நுணுக்கங்களையும்
விரல் நுனிகளில் - இவர்கள்
வைத்திருந்ததால் தான்...

ஏவி. மெய்யப்பர் போன்ற
ஏராந்த படாதிபதிகள் -
கிருஷ்ணன் பஞ்சுவுக்கு - தனி
கவுரவம் தந்தனர்;
இந்த
இரட்டை இயக்குனர்கள் - தாம்
வடித்த
வேர்வை -
வழியே
வெற்றிப் பாதைக்கு வந்தனர்!

●●●

'நடிப்பிசைப் புலவர்' என -
நாடு போற்றிய...

கே.ஆர்.ராமசாமி
கதாநாயகன் ஆனது -
இவர்கள்
இயக்கிய -

'பூம்பாவை'
படத்தில்தான்;
அதுவரை
அந்த -
இசை விளக்கு - அடங்கி
இருந்தது நாடகக் குடத்தில்தான்!

●●●

அறிஞர் பெருந்தகை
அண்ணாவின்...

உயரிய - தமிழ்
உரையாடல்களைத்
தாங்கிவந்த
தரமான படம் 'நல்லதம்பி'...

கிருஷ்ணன் பஞ்சுவின்
கைவண்ணத்தில்தான் - ஓர்
உயிரோவியமாக
உருவானது; இன்றைய
எத்துணையோ
எழுச்சிப் படங்களுக்கு - அன்று
எடுக்கப்பட்ட அந்தப் படம் -
எருவானது!

●●●



பி.யூ.சின்னப்பா;
பி.பானுமதி;
இருவரும்
இணைந்து நடித்த - ஜி.
ராமனாதன் இசையில் வந்த
'ரத்னகுமார்' ...

கிருஷ்ணன் பஞ்சுவின்
கீர்த்தியைப் பேசிய படம்;
அதுதான்
அவர்கள் மீது -
பெரும்
புகழ்வெளிச்சம் வீசிய படம்!

●●●

தமிழ்த்திரையின் போக்கைத் -
தலை கீழாகத் -
திருப்பிப் போட்ட -
திரைப் படம் ...

பெருமாள் தயாரித்த -
'பராசக்தி'
கலைஞரின்
கற்கண்டுத் தமிழால் -
வெள்ளித்திரைக்கு
வந்தது அதுவரை வராசக்தி!

சிவாஜியை
செகம் மெச்சும்.
சிறந்த நடிகராகச்
செதுக்கியது...

இருவரான கிருஷ்ணன் பஞ்சுவின்
இயக்கம்தான்;
அதன்பிறகு -
அவர்கள் இயக்கத்தில் -
மக்களுக்கு ஏற்பட்டது - ஒரு
மயக்கம்தான்!

●●●

நாடறிந்த
நாடகங்களை -
நல்ல படங்களாய்
நல்குவதில்...

கிருஷ்ணன் பஞ்சு -
கீர்த்தி மிக்கவர்;
அவர்கள் - நாடக
ஆசிரியர்களால் -
பெரிதும்
போற்றத் தக்கவர்!

இரட்டையர்
இயக்கத்தில் -
படமாய் வந்த
புகழ்சால் நாடகங்கள்...

'பராசக்தி'
'ரத்தக் கண்ணீர்'
'திலகம்'
'சர்வர் சுந்தரம்'
'கலியுகக் கண்ணன்'
என -
எத்துணையோ உண்டு;
வெற்றிபெற்றன - ஒருசில
வெள்ளிவிழா கண்டு!

●●●

காலத்தால் அழியாத
காவியங்களாக...

'புதையல்'
'குலதெய்வம்'
'குழந்தையும் தெய்வமும்'
'உயர்ந்த மனிதன்'
'அன்னை'
'தெய்வப்பிறவி'

அம்மவோ! பட்டியல் -
அதிகம் நீளும்;
எடுத்த படங்கள்
எல்லாவற்றிலும் -

கிருஷ்ணன் பஞ்சுவின்
கவித்துவம் ஆளும்!

இந்தியிலும் -
இந்த இரட்டையர்கள்...

பெருஞ் சாதனை
புரிந்தனர்;
இவர்கள்
இயக்கிய -
'பாபி'
'தோ கலியான்' -
ஆகிய
அவ் வடமொழிப் படங்கள் -
குடும்பக்
கதைக ளானதால்-அவற்றைக்
கண்ட வட நாட்டார்
காட்சிக்குக் காட்சி...

கரைந்து -
கண்ணீர் சொரிந்தனர்!

●●●

மேதையர் கிருஷ்ணன் பஞ்சு -
மறைந்து விட்டனர்;
மறைந்தும்
மாந்தர்தம் -
நெஞ்சங்களில்
நிறைந்துவிட்டனர்!

●●●

தந்தை கிருஷ்ணனின் -
தகவைக் காத்து - சிறந்த
இயக்குநராக
இலங்குகிறார் - மக்கள்
'சபாஷ்' எனும்படி - அவர்மகன்
சுபாஷ்!

## 92. அவ்வை துரைசாமி பிள்ளை

'உண்டா
உரைவேந்தை -
வாழ்த்தாத
வாய்!'
என பாரதிதாசனால் -
ஏத்தப் பெற்றவர்;
ஏரார்ந்த தமிழை -
எழுத்தெண்ணிக் கற்றவர்;

சைவ சித்தாந்த -
சாகரத்தில் -
கைவலிக்க நீச்சிட்டு - அதன்
கரைகண்ட நற்றவர்;

ஒல்லும் வகையெலாம்
ஒண்டமிழுக்காக உழைத்து -
ஓடாய்ப் போனதில் - அவருக்கு
ஒப்பாமோ மற்றவர்?

●●●

ஊர்
ஊராய் -
ஊர்ந்த
உ.வே.சா. போல்...

ஏடு தேடியவர்; தமிழுக்குப் -
பீடு தேடியவர்;
நீளுலகில்
நிரந்தரமாய்த் - தமிழ்
வாசம் செய்ய
வீடு தேடியவர்!

அந்த
அரிய மனிதர்தான்;
அருங் குணங்கள்
அமைந்த புனிதர்தான்;

நூல்
நூலாய் -
நுண்ணறிவால்
நுகர்ந்து...

உரையெழுதி -
உரையெழுதி -
'உரைசாமி!' என - ஊர்கொண்டாடிய
துரைசாமி!

●●●

எங்கணும்
ஏடுகளைத் -



தேடித் தேடித்
திரட்டி...

பதிப்பித்த
பெருமகனார் துரைசாமி;
அதன்பொருட்டு
அவரை - மற்றொரு
தமிழ்த் தாத்தா - எனத்
துதித்தது பூமி!

●●●

'புறநானூறு'
'பதிற்றுப்பத்து'
'ஐங்குறுநூறு'
'நற்றிணை'
'மணிமேகலை'

ஆகிய நூல்களில்
ஆழங்காற்பட்டு -
அவர்
ஆக்கி யளித்த -

உரைமூலம் -
உயர்ந்தது மூலம்!

●●●

அவர் -
அடியேன்...

உரைகொண்டு உரைக்கவொணா-
உரைவேந்து; நான் -
உரைக்க உரைக்க நிற்கும் - என்
உரை மீந்து!

அவர்
ஆரம்பத்தில் எழுதிய -
நாடக
நூல்...

'மருள் நீக்கியார்'; அந்த -
மருள்நீக்கியார் மூலம் - அவரை நம்
மருள் நீக்கியார் எனலாம்; மன -
இருள் நீக்கியார் எனலாம்!

●●●

உ.வே.சா. அவர்களை
உலகு -
'தாட்சிணாத்ய கலாநிதி' எனத்
தகவுற அழைத்ததுபோல்...

அவ்வை துரைசாமி
அவர்களை -
'சித்தாந்த கலாநிதி' என
சிலாகித்து விளித்தது; அதைச் -
செவியுற்று
சைவ சமயமே களித்தது!

'ஞானாமிர்தம்'
'சிவஞான போதம்'
'சிவஞான சித்தியார்'
ஆகிய -
அரிய நூல்களுக்கு...

அவ்வை துரைசாமி
அருளினார் உரை; அது -
ஆன்மப் பசி எடுத்தோர்க்கு
அருந்தக் கிடைத்த இரை; அவர் -
வழங்கிய விளக்கம்
வாழும் - இமய
வரை - வாழும்
வரை!

●●●

பொன்னார்க்காடு - எனப்
புன்செய்நிலம் பொலிய நின்ற -
தென்னார்க்காடு மாவட்டத்தில்;
திண்டிவனம் வட்டத்தில்;

அமைந்திருந்தது
அந்த ஊர்;
'அவ்வையார் குப்பம்' - என்பது
அதன் பேர்!

அவ்வையார் குப்பத்தில்
அவதரித்த - ஆண்
அவ்வையார் - நமது

ஆராதனைக்குரிய...

அவ்வை துரைசாமி பிள்ளை; தமிழ் -
அனையின் தோள் தொத்திய கிள்ளை!

பொற்பில்;
கற்பில்;
பொறையில்;
நிறையில்;

சாட்சாத் - அந்த
சந்திரமதி அனைய - மாது
சிரோமணி -
சந்திரமதி அம்மையாரும்;

அவரது மணாளர்;
அளப்பரும் குணாளர்;
சுத்த ஆத்மா - திரு.
சுந்தரம் பிள்ளையும்;

நோற்ற - பெரு
நோன்பின் பயனாய்த் -
தோற்றினார் புவிமிசை
துரைசாமி; ஒரு -
நிறைகோலால்
நிறுக்க வொண்ணா - குண
நிதிகள்
நிறைசாமி!

●●●

பள்ளிப்
படிப்பு முடித்து விட்டு -
சிலகாலம்
'சானிட்டரி இன்ஸ்பெக்ட'ராக...

பண்பார்ந்த துரைசாமி -
பணிசெய்தார்; பிறகு -
கரந்தைக்
கல்லூரியில் பயின்று -
வித்துவான் பட்டம்
வாங்கி -

அருந்தமிழுக்கு ஆயுள்வரை -
அணி செய்தார்!

●●●

பல்கலைக் கழகப்
பேராசிரியராக இருந்து...



அனேகருக்கு
அறிவு கொளுத்தினார்;
அவர்தம்
அறியாமையைக் கொளுத்தினார்!

எத்துணை பேர்களை
ஏற்றிவிட்ட ஏணி;
எனினும்
எவரேனும் புகழ்ந்தால் -
நின்றிடுவார்
நாணி!

●●●

ஆலவாயில் நடந்த -
அஞ்சாம் -

உலகத் தமிழ் மாநாட்டில்
'உரையாசிரியர் திலகம்' எனும் -
இசைமிகு விருதை
இந்திராகாந்தி வழங்கினார்;
இறுதிவரை - துரைசாமி
இருந்தமிழ்ச் சீரை முழங்கினார்!

அருட்பா -
ஆறாயிரத்திற்கும் -
அவர் - பேருரையை
ஆக்கி அளித்ததும்...

உழைத்து உழைத்து -
உடல் மெலிந்தது போதுமென்று-
அழைத்துக் கொண்டான் -
தில்லையில்
ஆடும் நடராசன்;
அத்தன் அடியொற்றி
அருந்தமிழ்ப் பணியை - நாளும்
ஆற்றுகிறார் அவர்மகன்
அவ்வை நடராசன்!

(இன்னமும் இருக்கின்றார்கள்)

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

## 93. புத்தங்கோட்டகம் ஸ்ரீனிவாசாசார்ய ஸ்வாமி

'விசிஷ்டாத்வைதம்' எனும்
விழுமிய தத்துவத்தை...

உலகெலாம்
உய்யும் வகைக்கு - தான்
உளநாள் மட்டும்
உணர்த்தி உபசரித்த -

எம்பெருமானார்;
எதிராஜர்;
என்றெலாம் -
ஏத்தப் பெறும்...

இசைமிகு - ஸ்ரீ
இராமானுஜரும்;

அவர்க்குப் பின்
அவதரித்து -
அதே விசிஷ்டாத்வைதத்தை
அனுசரித்து -

வண்ணத் தமிழிலும்;
வட மொழியிலும்;
மற்றும் -
மணிப்பிரவாள நடையிலும்;

'சங்கல்ப
சூர்யோதயம்;
எனும்
ஏரார்ந்த நாடகத்தையும்...

'பாதுகா சஹஸ்ரம்' எனும்
பனுவல் தொகுப்பையும்...

யாத்து -
யாங்கணும் -
'சீர்த்திமிகு - கவிச்
சீயம்' என -

வழுத்தப் பெற்ற - ஸ்வாமி
வேதாந்த தேசிகரும்;

பரமபதம்
போய்ச் சேர்ந்து -
பலநூறு ஆண்டுகள்

## கவிஞர் வாலி

சென்ற நூற்றாண்டில்,
தமிழ் மண் தரணிக்கு வழங்கிய
மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!



போன பின்பு...

காலம் வழங்கிய
கொடையாய் -

அவ்விருவரும் - ஒருசேர
அவனிமிசை - ஒருருவாய்ப்
போந்தனர் - உ.வே.
'புத்தங்கோட்டகம் ஸ்வாமி' என்று;

இருபதாம் நூற்றாண்டில் -
இந்தப் பெருந்தகையால்...

விடுவிடுவென
விரைந்தேறியது -
வையம் தொழும்
வைணவம் புகழ்க்குன்று!

●●●

புகழ்சால்
புத்தங் கோட்டகம் -
ஸ்ரீனிவாசாசார்ய ஸ்வாமி
ஸ்ரீரங்கத்தில்...

ஆண்டுகள் நாற்பதுக்கும்
அதிகமாக வாசம் செய்தவர்;
அனுதினமும்
அற்புதமாக
அறிவுரைகள்
ஆற்றி...

அடியார்களின் -
அக அழுக்குகளைக் கொய்தவர்!

சர்வ
சாஸ்திரங்களும் -
குடியிருந்தன - அவரது
குரல் நுனியில்;

வடமொழி
வியாகரணமும் -
வியாக்கியானமும் - அவரது
விரல் நுனியில்!

தர்க்கித்துத்
தர்க்கித்து - பல
வித்வான்களை
வென்றவர்;
தேசிக
தர்சனத்தைத் -
தாழாது
தாங்கி நின்றவர்;

அவரது -
அருள்மிகு...

நாக்கின்மேல் நின்ற
நல்லறிவுச் சுடர் கண்டு - தமது
மூக்கின்மேல் விரல் வைத்து
முகமன் கூறியது...

வித்துவான்கள் உலகம்; ஸ்வாமி -
வித்துவான்களில் திலகம்!

●●●

அவர்
'ஆக்கியருளிய -
அற்புத கிரந்தங்கள்
அனேகம்;

ஆரணங்களோடும்;
அவற்றின் உள்ளீடுகளோடும்;
அவருக்கும் - அவர்
அறிவுக்கும் -
அப்படியோர் -
அத்தியந்த சினேகம்!

'தர்பங்கா மகாராஜா' -
தந்தார் -
மகத்தான விருது ஒன்று;
'மஹோபதேசகர்' என்று!

'வேதாந்த கல்பதரு' எனும்
விருதும்;
'தேசிக தர்சன -
விஜயத்வஜர்' எனும் விருதும்;



அவருக்கு
அளிக்கப் பெற்றன;
அவ் விருதுகள்
அவரால் பெருமை உற்றன!

●●●

அவர் -
அஹோபில மடத்தின் -
ஆஸ்தான வித்வான் பதவியை -
அலங்கரித்தவர்;
ஆழி அனைய
அறிவாற்றல் இருந்தும் - அவர்
அடக்கத்தை
ஆபரணமாய் தரித்தவர்!

●●●

வைணவ சிரோமணியாய்
விளங்கிய -

பாபு ரெட்டியாரின்
பிரார்த்தனையின் பேரில் -

திருச்சி மாவட்டம் -
துறையூர் பக்கத்தில் உள்ள -

ஊர்கள்தோறும் சென்று
உபதேசித்து உபதேசித்து -
சகலருக்கும் - வைணவ
சித்தாந்தத்தை வழங்கியதில்...

இன்னோர்
இராமானுஜராகவே -
புத்தங்கோட்டகம் சுவாமி
பிறங்கினார்;
ஒருநாளைக்கு -
ஒருசில நேரமே உறங்கினார்!

●●●

ஈழதேசம் வரை - கொடிபறந்த
சோழதேசம் தன்னில்...

'ஸதாசார
ஸம்பன்னர்'
என்பதற்குரிய
எல்லாவிதமான -

லட்சணங்களுமுடைய - ஸ்ரீ
லட்சுமி நரசிம்மாசார்யாருக்கு -

புத்திரராய்ப் பிறந்தவர்
புத்தங்கோட்டகம் ஸ்வாமி; சிறு-
பிராயத்திலேயே
பிரம்மோபதேசம் ஆகி - அவரது
திருத்தோள்களில் சொலித்தன
திருச்சங்கம்; நேமி!

அதன்பின்
அவர் -
பல்வேறு ஆசார்யர்களிடம்
பழுதறக் கற்றார் - இரு
பிறப்பாளர் கற்க வேண்டிய
பகவத் விஷயங்களை;

அவரது - திரு
ஆனனத்தில் -
அருக்கனின் சோதிபோல்
அமர்ந்திருந்தது வைணவக்
களை!

●●●

'ஸ்திதப் பிரக்ஞன்' எனில் - அது
ஸ்வாமிகளுக்கே பொருந்தும்;
அவரது மனம்
அமுதத்தையும் ஆலத்தையும் -
ஊழ்வினையால்
உண்ண உற்றதென...

உவப்போ;
உலைப்போ;
எதுவுமின்றி
எதார்த்தமாய் அருந்தும்!

சொந்த வாழ்வில் - அவர்



சந்திக்க நேர்ந்த
சோக சம்பவங்கள் -
சொல்லி மாளாது; ஆயினும் -
நெஞ்சை வைத்திருந்தார்
நாராயணனை விட்டு மீளாது!

●●●

புத்தங்கோட்டகம் ஸ்வாமியே -
புகல் என...

வாழ்ந்தார் - எந்தை
வாங்கல் ஸ்ரீனிவாச அய்யங்கார்;

எந்தை ஆசியும் -
எந்தை ஏத்திய ஆசான் ஆசியும்-
தந்ததுதான் - என்னுள்
தழைத்திருக்கும் தமிழ்ச்சீர்!

## 94. முக்கூர் லட்சுமி நரசிம்மாச்சாரியார்

புத்தி கூர்;
பார்வை கூர்;
பேச்சு கூர்;

என -
எல்லோரும் ஏத்தும்படி....

முக்கூர் வாய்த்தவர் -
முக்கூர் ஸ்வாமி;
ஆர்க்கும் வாய்த்ததில்லை
அன்னணம் - என
ஆராதித்து நின்றது
ஆத்திக பூமி!

முக்கூர் ஸ்வாமியின் -
முழுத் திருநாமம்...

லட்சுமி நரசிம்மாச்சாரியார்; மா -
லோலனை நேசித்த ஞான வாரியார்;
உவமித்து -
உரைக்க
உலகுமிசை - அவர்போல்
உபயகவி வேறு யார்?

●●●

பன்னிரு திருமண்
பளிச்சிடும் திருமேனி;

வெள்ளை
வேழம் ஒன்று - அமர்ந்து
வேள்வி
வேட்கிறதோ...

என
எவரும் -

இறும்பூதெய்து மாறு
இரட்டை நாடியான ஒருமேனி;

அரிய
அறவுரைகளை -
அருளி
அருளி...

அநேகருக்கு
அறிவு கொளுத்திய குருமேனி;

உபவீதமும் -
உத்தரீயமும் -
திருமார்பில்
தவழத் தவழ -

அரிமா நடைபோட்டு -
அவைக்கண் வருமேனி!

●●●

இசைமிகு திரைப்பட
இயக்குநர் மணிரத்தினத்தின்
இனிய தந்தையார் - அமரர்
இரத்தினம் அய்யர்...



ஆழ்வார் பேட்டையில் நடத்திய-
ஆஸ்தீக சமாஜத்தில்...

முதறிவாளர்
முக்கூர் ஸ்வாமிகளின் -
உபநியாசம் நடக்கும்; நாளும் -
ஊரே அங்கு கிடக்கும்!

உபமான -
உபமேயங்களோடு
உபநிடதங்களுக்கு - அவர்
உரை சொல்லுகையில்...

மாந்தர் - விழிநீர்
மல்கக் கேட்பதுண்டு;

பாமரர்க்கும்
பண்டிதர்க்கும் -
புரியுமாறு - அவர் நிகழ்த்தும்
பிரவசனம்...

கேட்போர் செவிகளுக்குக் -
கன்னல் துண்டு!

●●●

'விஷ்ணு' என்னும் - ஒரு
வார்த்தைக்கு...

முக்கூர் ஸ்வாமி
மாதக் கணக்கில்
பொருள் விரிப்பார்; விரித்து நம் -
பழவினைகளை எரிப்பார்;

இடை
இடையே -
வேண உபகதைகளை
வழங்கி...
அவையோரை

ஆனந்தப் படுத்தித் -
தானும்
தொந்தி குலுங்கச் சிரிப்பார்;

சகல
சாதியினரும் -
சேமமுற வேண்டி
செழுமறைக் கருத்துகளை -

போதிப்பதையே
பெரும் பணி என -
ஆன்மீகப் பிரசங்கம்
ஆற்றுவதை...

முக்கூர் ஸ்வாமி -
முப்பொழுதும் வரிப்பார்!

●●●

வடமொழி; தெலுங்கு;
வண்ணத் தமிழ்...

மூன்றிலும்
முக்கூரார்க்குப் -
பெரும்
புலமை உண்டு;

கம்பனை;
காளிதாசனை;
வேமனாவை;
வால்மீகியை;
முப்பால் அருளிய -
முனிவனை;

பிரபந்தங்கள்
பாடிய -
ஆழ்வார்கள்
ஆறிருவரை;

கசடறக்
கற்று - தன்
காலட்சேபத்தில்
கருணை கூர்ந்து...

வந்திருப்போர்
வெவ்வினை தீர - அவற்றை
வாரி வாரி வழங்குவார் - தனது

வார்த்தைச் செம்பில் மொண்டு!

அந்த -
அரிய மனிதரின்...

நாவிலும் -
நெஞ்சிலும் -
நட்ட கல்லாய்
நின்றிருந்தது நரசிம்மம்;

அது
அவ்வப்போது -
அவர் மீது
ஆவேசித்து -

நல்வாக்கு
நவில - அதனால்
நலம் பெற்றிருக்கின்றன
நலிவுற்ற பல ஜன்மம்!

●●●

தெலுங்கு
தேசத்தில் -
கீர்த்திமிகு
கிருஷ்ணாநதி தீரத்தில் -

கொலுவமர்ந்து
கோலோச்சும் -
மாலோலனாகிய

'மட்டப் பல்லி நரசிம்மன்'தான்...

முக்கூர் ஸ்வாமியின்
மூச்சும் பேச்சுமாய்ப்
பிறங்கிய இறை; அதன்
பிரபாவமே அவருக்கு இரை!

ஆம்;
அவர் -
வேள்விகள்
வேட்கையில்...

நரசிம்மன்
நாம மல்லால் -
அன்ன பானம்
அருந்தி அறியார்;



அவர் -
அத்தகு சுத்த நெறியார்!

●●●

குறையொன்றுமில்லை' என -
குளிர் தமிழில் -
அவர்
ஆக்கி யளித்த
அருள்மிகு
அற்புதக் கட்டுரைகளை...

பத்திரிகையில்
படித்து -
மகிழ்ந்தது; மகிழ்ந்து -
மன்பதை நெகிழ்ந்தது!

●●●

வடார்க்காடு - மா
வட்டத்தில் உள்ள -
முக்கூர் என்னும் - சிறிய
மூதூர் தன்னில்...

சீலம் மிகு -
சீனிவாசாச்சாரியாருக்கும்;
அருங்குணவதி -
அமிர்தவல்லியாருக்கும்;

வைணவம் பெற்ற
வரமாய் -
முகிழ்த்தவர்
முக்கூர் ஸ்வாமி;

வையம் பயனுற
வாழ்ந்த பெருந்தகையை...

அநியாயமாக
அவசரப்பட்டு - தன்பால்
அழைத்துக் கொண்டான்
அந்த அந்தரியாமி!

-இன்னமும் இருக்கின்றார்கள்

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

## 95. எஸ்.டி. சுப்புலட்சுமி

'திரையில்
தோன்றிய -
ஸ்ரீகிருஷ்ணன் வந்ததும் -
ஸ்ரீவைகுண்டத்திலிருந்து தான்;
திரையில்
தோன்றிய -
ஸ்ரீகிருஷ்ணன் வந்ததும் -
ஸ்ரீவைகுண்டத்திலிருந்து தான்!'

ஆம்;
அந்நாளில் -
ஊர் - இன்னணம்
உவமித்துப் பேசியது...

'பக்த குசேலா' எனும்
படத்தில் -
ஸ்ரீவைகுண்டம் ஊரைச் சேர்ந்த-
ஸ்ரீமதி -
எஸ்.டி. சுப்புலட்சுமி -

எழில் கொஞ்சும் -
கிருஷ்ணனாய்த் - திரையில்
காட்சியளித்த போது;
அவர்தான் - ஓர்
ஆண்வேடம் ஏற்றும் -
அந்த உணர்வே
ஆருக்கும் தோன்றாவண்ணம்...

தன்நடிப்பால் - கண்ணனாகித்
தத்ரூபமாக நின்ற மாது!

●●●

'பகவான் கிருஷ்ணன் வேடத்தை- -
பெண் போடுவதா?'
என்று ஆட்சேபித்தார்
எழுத்தரசர் கல்கி;
பின் -
படத்தைப் பார்த்துவிட்டு - தன்
எண்ணத்தை மாற்றிக் கொண்டு -
எஸ்.டி. எஸ்.ஸை. . .

வியந்து பேசினார் - நல்

## கவிஞர் வாலி

சென்ற நூற்றாண்டில்,
தமிழ் மண் தரணிக்கு வழங்கிய
மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!

ஜூனியர் விகடன் 14.10.2003



வாழ்த்துகள் நல்கி!
எஸ்.டி. சுப்புலட்சுமி
ஏற்றிருந்த. . .
கிருஷ்ண வேஷம் - பலர்
கிரகங்களில் -
நவராத்திரி பொம்மையாய் -
நின்றது; ஒருசாராரின் -
வசைகளைப் பெண்மை - தன்
வாய்ச்சிரிப்பால் வென்றது!

'பக்த குசேலா'
படத்தில் -

கண்ணனாகவும்;
குசேலரின் மனைவியாகவும்;
இருவேடங்களை
இசையொடு -
ஏற்றார்
எஸ்.டி.சுப்புலட்சுமி;
ஆரும் இல்லை -
அவருக்கு ஓர் ஒப்பு லட்சுமி!

●●●

அழகு என்றால் -
அப்படியோர் அழகு;
அவர்
அரங்கம் ஏறி -
ஆடிப் பாடினால்
ஆர்நெஞ்சும் அனல்வாய் மெழுகு!

சுப்புலட்சுமி -
சிறு வயதிலேயே. . .
தனது
தந்தையார் -
நடித்துக் கொண்டிருந்த
நாடகக் குழுவில் -
பங்கு
பற்றி -
படிப்படியாகப்
புகழேணியில் ஏறியவர்;

தங்கு
தடங்கலற்ற -
வசன
உச்சரிப்பாலும் -

தேனைப் பிலிற்றும்
திதிப்பான சாரீரத்தாலும் -

நினைத்த மாத்திரத்தில்
நவரசங்களையும் - விழிகளால்
உமிழ வல்ல -
உயரிய நடிப்பாற்றலாலும் -

எந்தப் பாத்திரம்
ஏற்றாலும் -
அந்தப் பாத்திரமாகவே
அச்சு அசலாக மாறியவர்;

அந்த
அளவு -
நாளும் பொழுதும் -
நுண்கலையில் ஊறியவர்;
ஆக மொத்தம் -
அவர் -
மூன்றாம் தமிழில்
முற்றாகத் தேறியவர்!

●●●

எம்.கே.டி. பாகவதரும்;
எஸ்.டி. சுப்புலட்சுமியும்;

பார்த்திபனாகவும் -
பவளக் கொடியாகவும் -
நாடகத்தில் தோன்றி -
நல்லிசையை முழங்கி...

ஊரவர்க்கெல்லாம்
உன்மத்தமும் -
உரோமாஞ்சனமும்
உண்டாகும்படி -



ஏழிசையில்
எட்டாத கட்டைகளையெல்லாம்
எதார்த்தமாக
எட்டிப் பிடித்தனர்;

எட்டூருக்கு
எட்டும்படி -
பிராசம் மிக்க வசனங்களைப்
பேசி நடித்தனர்!

●●●

'ஸ்பெஷல் நாடகம்' என்று
சொல்லப் படும் -

அந்த
அரிய கலை -

குன்றேறி நின்றிருந்த
காலமது;

எஸ்.டி. எஸ்ஸுும் -
எம்.கே. டீயும் -
பாட்டுத்திறத்தால் - புவியைப்
பாலித்த நேரமது!

அந்த
அபூர்வ ஜோடியை -
காலம் - சினிமாவிற்குக்
கொண்டு வந்தது;
பெரும் புகழைப்
பெற்றுத் தந்தது!

'பவளக் கொடி' நாடகம்
பட மானது;
பிறகு -
படத்துறையே -
எஸ்.டி.எஸ்ஸுக்கு
ஏற்ற இடமானது!

●●●

எஸ்.டி. சுப்புலட்சுமி
எல்லோரும் கொண்டாடும் -
திரைத்
தாரகை யானார்;

புகழெனும்
பொற்குன்றின் உச்சம் போனார்!

'கல்கி எழுதிய -
காலத்தை வென்று நிற்கும்...

'தியாக பூமி' என்னும்
திரைப்படம் - எஸ்.டி.
சுப்புலட்சுமியை - மேலும்
சுடர்விடச் செய்தது;
ஆங்கில
அரசின் -
தூக்கத்தை - அந்தத்
திரைப்படம் கொய்தது!

பெண்விடுதலையும் -
மண் விடுதலையும் -

பெறற்கரிய
பேறுகள் என்று
பேசிய -
படம் 'தியாக பூமி';

வெள்ளையன்
விதித்த -
தடையைத்
தகர்த்து...

அது வெளிவர -
ஆர்த்தது தமிழர் பூமி!

●●●

கணவர் -
கே. சுப்பிரமணியத்தோடு...

அந்நாளில்
அமெரிக்காவிற்குச் -
சென்று வந்த
சுப்புலட்சுமி -



பசுந்தமிழ் மக்களால்
பெரிதும் பாராட்டப் பெற்றார்;
அவர்
அதிகப் படங்களில்
நடிக்கா விடினும் -
நிலையான புகழை உற்றார்!

●●●

கதா காலட்சேபம் செய்யும்
கலையிலும் -
சுப்புலட்சுமி
சிறந்து விளங்கினார்; பின் -
வெள்ளித் திரையிலிருந்து
வெகுவாக விலகினார்!

●●●

வாழ்ந்த நாள் -
வரையினில்...
எஸ்.டி.சுப்புலட்சுமி
ஏழிசையை -
எங்கணும்
ஏற்றமுறப் பரப்பினார்;
தமிழர் செவிகளைத் -
தண்டமிழ்த்
தேனால் நிரப்பினார்!

அவர் -
ஆகாயம் சென்றபின்...

அவரது புதல்வர்
அபஸ்வரம் ராம்ஜி -
சின்னஞ்
சிறார்கள் மூலம் -
இயற்றுகிறார்
இசைத் தொண்டு; எஸ்.டி.எஸ்.
வாழ்த்துகிறார்
வானில் இருந்து கொண்டு!

## 96. என்.சி. வசந்தகோகிலம்

பத்திரிகை;
பணம்;
ஆன்மீகம்;
அரசியல்;

என -
எந்தவிதமான...

பின்பலம் இன்றி -
பயின்ற இசையறிவை மட்டுமே -
தன்பலம் என்று -
தலையெடுத்து எங்கணும் -

அம்பலம் ஏறி
அரும்புகழ் எய்தியவர் -
ஏழிசையில் வல்ல
என்.சி. வசந்தகோகிலம்;

அவரது
அமுத கானத்தில் -
அமிழ்ந்து கிடந்தது
அன்றைய வண்ணத் தமிழ்நிலம்!

●●●

'தந்தை தாய்
உமக்கிருந்தால் - இந்தத்
தாழ்வெல்லாம்
வருமோ அய்யா?'

'அந்தநாள்-
இனிவருமோ? - சொல்லடி!
அம்பலப் பசுங்கிளியே!'

'அந்தரங்கம் எல்லாம்
அறிவாயோ?'

'கருணாலய நிதியே! உனது-
சரணாம்புஜம் கதியே!'

இப்படி
இருந்தமிழ்ப் பாடல்கள்...

சுத்தானந்த பாரதியாரின்
சாஹித்தியங்களாகவும்;
அருணாசலக் கவிராயரின்



அற்புதக் கிருதிகளாகவும்;
என்.சி.வசந்த கோகிலத்தின்
ஏராா்ந்த குரலை -
ஏந்திவந்த இசைத்தட்டுகள்
எத்துணையோ உண்டு;

அத்துணையும்
அருந்தமிழர் -
காதுகளுக்குக்
கற்கண்டு!

●●●

வசந்த கோகிலம் - எனும்
வண்ணக் குயில்...

சனித்தது
சேர நாட்டில்;
புகுந்தது
புகழ்சால் சோழநாட்டில்!

சந்திரசேகர அய்யரின் -
செல்வப் புதல்விதான் -
கடைக்குட்டியாய்ப் பிறந்த -
காமாட்சி; அந்தக்
காமாட்சிதான் - வசந்த
கோகிலமாக மாறி - தமிழர்
இதயம் புகுந்து - புரிந்தாள்
இறுதிவரை ஓர் இசையாட்சி!

மும்
மூர்த்திகளும் -
அவதரித்த - திரு
ஆரூரில் தான்...

அகவை - பதினைந்து
ஆகும் வரை -
வசந்த கோகிலம்
வாழ்ந்து வந்தார்; அந்த -
மும் -
மூர்த்திகளும் - இசையறிவை
வசந்த கோகிலத்திற்கு - நல்
வரமாகத் தந்தார்!

●●●

பின் - சென்னைப்
பட்டணம் வந்ததும்...

அவரது கச்சேரிகளுக்கு
அமோகமாய்க் கூட்டம் வந்தது;
பிறகு என்ன?
பட முதலாளிகளுக்கு...

வசந்த கோகிலத்தின்
வண்ணத் தமிழிசைமேல் - 'இது
உலகெங்கும் விலை போகும்' - என
ஒரு நாட்டம் வந்தது!

●●●

கீர்த்திமிகுந்த -
கர்நாடக சங்கீத வித்வான்கள்...

படங்களில்
பிரபல நட்சத்திரங்களாகப் -
பிரகாசித்த
பொற்காலம் அது;
சாஸ்த்திரீய
சங்கீதம் -
தமிழ் சினிமாவின்
தலையாய அம்சம் ஆனது!

எம்.எஸ்.;
ஜி.என்.பி.;
மகாராஜபுரம்;
முசிறி;

டி.என்.ராஜரத்தினம்;
தண்டபாணி தேசிகர்;
வி.வி. சடகோபன்;
கே.பி. சுந்தராம்பாள்;

என-
ஏகப்பட்ட -

தொல்லிசைப் பாடகர்கள்
திரையிலும் புகுந்தனர்;



பொருள் -
புகழ் மிகுந்தனர்!

●●●

என்.சி. வசந்த கோகிலமும்
ஏற்றார் -

வெள்ளித் திரையில்
வேடங்களை;
தன்
தேன்குரலால் -
திக்குமுக்காடச் செய்தார்
திரைக் கூடங்களை!

'சந்திரகுப்த
சாணக்யா'
'கங்காவதார்'
'குண்டலகேசி'

என-
ஏராளமான
படங்களில் - அவர்
பங்குபற்றி யிருப்பினும்...

தியாகராஜ பாகவதரின்
துணைவியாக -
'ஹரிதாஸ்' படத்தில் தோன்றி -
அற்புதமாகப் பாடினார்;
நடிப்பிலும்
நல்லபெயர் சூடினார்!

அந்த -
'ஹரிதாஸ்' படம் . . .

மூன்று ஆண்டுகள் ஓடி -
மூன்று தீபாவளிகளைக் -
கடந்து நின்றது; எந்தப்படம் -
காலத்தை அதுபோல் வென்றது?

●●●

'கிருஷ்ண விஜயம்'
'வால்மீகி'
ஆகிய - ஜூபிடரின்
அற்புதப் படங்களில். . .

வசந்த கோகிலம் - நாரத
வேடம்தாங்கி வந்ததை - தமிழர்
கண்ணும் மறக்காது;
காதும் மறக்காது!

●●●

பிரபல -
பட இயக்குனர் ஒருவருக்கு -
வசந்த கோகிலம்
வாழ்க்கைப் பட்டார்;
இல்லற வாழ்க்கை -
இனிதாய் அமையாது -
கவலையில் வீழ்ந்து -
காசநோய் வந்து -

முப்பதாம் வயதில் -
மூச்சை விட்டார்!

●●●

சம்பாதித்த
செல்வம் அனைத்தையும். . .
காசநோய் மருத்துவ மனைக்குக்
கொடையாகக் கொடுத்துவிட்டு-
வசந்த கோகிலம்
வானம் சென்றார்;
இறவாப் புகழுடம்போடு
இப் படிமிசை நின்றார்!

கொஞ்ச காலம்தான் - அந்தக்
குயில் கூவியது;
ஆயினும் -
அதன் -
நேர்த்தியான சாரீரம் -
நித்தியத்துவத்தை மேவியது!

-இன்னமும் இருக்கின்றார்கள்.

# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

## 97. கம்பவாணர் அருணகிரி

'சோழ... திருச்சபையில்
சோபித்த கம்பனுக்குத் -
தோழன் என்றே நீ
தோன்றினையோ முற்பிறப்பில்?

அல்லது -
அற்றை நாளில்...

கம்பன் பாட்டினிலே
கருத்திழந்து போனானே -
அன்பன் சடையப்பன்;
அவனோ நீ இப்பிறப்பில்?'

என்றெலாம்
எம்மனோர் -

விடை
வேண்டி -
வினா எழுப்பு
வண்ணம்...

கம்பன் மாட்டு -
காதல் மலிய; அக்
காதலில் - அவனது
கற்புநெறி பொலிய;

வாழுநாள் மட்டும்
வாழ்ந்தான் -
புதுவையில் ஒரு
புலவர் பெருந்தகை;

தெய்வமாக் கவி
திருநாமம் கேட்டாலே - அவன்
திருமுகத்தில்
திகழும் ஒரு பேருவகை!

●●●

அவனது பேர்
அருணகிரி;
அவனது
அடி நா - கம்பன்
அமர்ந்து உலாப்போந்த
அழகுபரி;

**கவிஞர் வாலி**

**சென்ற நூற்றாண்டில்,
தமிழ் மண் தரணிக்கு வழங்கிய
மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!**

ஜூனியர் விகடன் 21.10.2003



அவனது
ஆகாரமே - கம்பன்
அருளிய
அமுத வரி;
ஆக - கம்பனை
ஆரா திப்பதில் -
அவனுக்கு
அவனே சரி!

●●●

வேதபுரி - என
விளங்கும் -
புதுவை மாநகரில் -
புகழ்சால் நிலக்கிழாராகவும்;

அரசு சபையில் -
அங்கத்தினராகவும்;
இரும்புகழொடு -
இருந்த....

ஆண்டகை -
அண்ணாமலை நாயக்கரும்;
அவர்தம்
அன்பு மனையாள் -
குணவதி
குப்பம் மாளும்;

நோற்ற
நோன்பின் பயனாகத் -
தோற்றிய
திருமகன்...

அருணகிரி எனும்
அரிய குணாளன்;
சகலரும் ஏத்தும்
சரஸ்வதி மணாளன்!

●●●

தமிழாசிரியராகத்
தொடங்கினான்...

தகவுமிக்க
தன் வாழ்வை;

பிறகு -
புலவர் பட்டம் -
கைவரப் பெற்று -
கண்டான். . .

கம்பநாடனின் -
கவிதா விலாசத்தின் ஆழ்வை!

கங்குலும் பகலும் -
காலையும் மாலையும்...

காற்றில் வைத்த
கற்பூரமாய்க் -
கம்பன் பாட்டில்
கரைய லானான்;
கரைந்து -

கரைந்து
கடைசியில் -
'கம்பவாணன்' ஆகிப் போனான்!

அவன்
அன்பார்ந்த - தனது

குடும்பம்
குழந்தைகளை விட -
கூடுதலாய்க்
கூடினான் கம்பனை;
கம்பன்
கண்டிருக்க மாட்டான் -
அவன் வாழ்ந்த நாளில்
அருணகிரிபோல் ஓர் அன்பனை!

●●●

அருணகிரி
அருந்தியது கம்பன் கூழ்;
அவன் பெயரனுக்கு
அவன் வைத்தது கம்பன் பேர்;
அவன்
ஆற்றிய பணியால் -

அதிகம்
ஆனதென்பேன் கம்பன் ஏர்!

தமிழ் அன்பர்களைத் -
திரட்டி; கம்பன்
விருத்தத்தை -
'வாசி! வாசி!' என - ஒரு
வாத்தியார் போலவே - பலரையும்
விரட்டி;

ஊண் இன்றி -
உறக்கம் இன்றி -

நாளும் பொழுதும்
நெடிய பாடுபட்டு -
கம்பன்
கழகத்தை நிறுவினான்;

உயிர்
உளநாள் மட்டும் -
உழைப்பேன் கம்பனுக்கு - என
உளத்துள் கறுவினான்!

●●●

பாரதியும்
பாரதிதாசனும் -
பாதம் பதித்த
பவித்திர பூமியாம் புதுவையில்...

வருஷந் தோறும்
வலிவும் பொலிவும் மிக்கதாய் -
வான்புகழ் கம்பனுக்கு
விழா எடுக்க -

புலவன் அருணகிரிதான் -
போட்டான் பிள்ளையார் சுழி;

இடையறாது - அந்த
இனிய விழா
இன்றளவும் -
இசைபெற நடக்கிறது ...

கம்பவாணன் அருணகிரி-
காட்டிப் போனவழி!

●●●

கம்பன் பக்தியும்;



கடவுள் பக்தியும்;
தேச பக்தியும்;
தமிழ் பக்தியும்;

அருணகிரியிடம்
அமோகமாய் உண்டு;
அவன்
ஆக்கிய நூல்களை -
ஆர் படித்தாலும்
ஆராதிப்பர்...

நுவலர்க்கரிய - அவனது
நுழைபுலத்தை இனங்கண்டு!

●●●

குகனைப் பற்றி;
கும்ப கருணனைப் பற்றி;
தேசிய நீரோட்டத்தில்
தமிழ்க் கவிஞர் பங்குபற்றி;
தாய்த் -
திருநாட்டின் -
விடுதலை
வேள்வி பற்றி;

புத்தகங்கள் வழி - நமக்குப்
புரிய வந்த அவன் புலமை -
வற்றாத
வானதி; அவற்றை -
வெளியிட்டதும்
வானதி!

●●●

'இனிக்கிறது!
இனிக்கிறது!' என்று -
விடாது - கம்பன்
விருத்தங்களைத் தின்றான்; பாட்டுச்-
சக்கரையைத் தின்று தின்று -



சக்கரை நோய்வந்து நின்றான்!

அப்படியும்
அவன் -
கம்பனை உண்டான்; கடைசியில்
கம்பனே அழைத்துக்
கொண்டான்!

●●●

வானம் ஏறினாலும்
வையத்தில் வாழ்கிறான் -
அருணகிரி என்னும்
அருந்தமிழ் நேசன்;
அவனுக்கு
அமைந்த -
வேறொரு பெயர்தான்
வக்கீல் முருகேசன்!

உயர்வு நவிற்சியல்ல; இது -
உண்மையான காட்சி; என் -
கூற்றுக்குக் -
கம்பன் கழகமே சாட்சி!

## 98. திருலோக சீதாராம்

பாரதி -
பித்தர்;
பாரதி -
பத்தர்;
பாரதி -
சித்தர்;
பாரதி -
வித்தர்!
[illegible]து சொன்னாலும் - அது
[illegible] தாகும் -
அந்த -
அரிய மனிதருக்கு;

பாரதியின்
பாடல்களைப் -
பட்டி தொட்டியெல்லாம்
பரப்பிய...

திருலோக சீதாராம் - எனும்
திருநாமமுடைய புனிதருக்கு!

●●●

அவரே -
அருங் கவிஞர்;
தமிழைத் தேனில் குழைத்துத் -
தருங் கவிஞர்;
வெற்றிலையால்
வாய் சிவக்க -
வீதி உலா
வருங் கவிஞர்;

அற்றை நாளில்
அனைவராலும் -
அறியப் பெற்ற
ஆராதிக்கப் பெற்ற...

பேறுடைய -
பெருங் கவிஞர்!

ஆயினும் -
அவர்...

மகாகவி பாரதியின்
மாணிக்கப் பனுவல்களை -
மனனம் செய்து
மனனம் செய்து...

மேடை தோறும்
முழங்கினார்; அவற்றைப்
பூஞ்சணம் பிடிக்காதபடி
புழங்கினார்!

●●●

மகாகவி பாரதியின் -
மறைவுக்குப் பின்...

திருமதி செல்லம்மாள் பாரதி -
திருச்சியில் -
தில்லை நகரில் வசிக்கையில் -
திருலோக சீதாராம்தான்...

பாரதி குடும்பத்தின் -



பாதுகாவலரா யிருந்தார்; அதை -
பாக்கியமாக நினைத்துப் -
பணிசெய்த நாளில் -

அவர்களது நலம்
அல்லால் -
பெரும்பாலான பொழுது - அவர்
பிறநினைவுகளில் பொருந்தார்!

●●●

திருலோக சீதாராம் -
திறம்பட நடத்தினார்...

'சிவாஜி' என்றொரு
செந்தமிழ் ஏடு;

பின்னாளில்
பிரபல எழுத்தாளர்களாகப் -
பரிணாமம் பெற்ற
பலருக்கு...

அந்த -
அர்த்தமுள்ள பத்திரிகைதான் -
நாற்றங்கால் - என்பதை
நன்கறியும் நாடு!

ரசிகமணி டி.கே.சி.யின் -
ராஜ்ஜியத்தில்...

வட்டத்தொட்டி - ஒன்று
விளங்கியது போல் -
திருலோக சீதாராமனின்
தமிழ் தேசத்தில் -

'தேவசபை' ஒன்று
துலங்கியது;

புதினம்
படைப்போர்;
கவிதை
கவனம் செய்வோர்;
கதை -
கட்டுரைகள் -
வண்ணமுற
வனைவோர்;

வைகலும்
வந்து கூடும் -
இல்லமாய் - அது
இலங்கியது!

●●●

அகிலன்;
சுகி;
துறைவன்; வித்துவான் -
துரைசாமி;
துறையூர்த்
தமிழறிஞர் -
திருலோகத்தின் - உயிர்த்
தோழர் எனப் பிறங்கிய...

கீர்த்திமிகு - அ.வெரா.
கிருஷ்ணசாமி ரெட்டியார்;

திருவரங்கம் சக்திசரணன்;
திருவானைக்கா கலைவாணன்;
என -
ஏராளமான...

அறிஞர் பெருமக்கள்
அலங்கரித்த சபை அது;
அங்கு
அருந்தக் கிடைக்கும் தமிழ் -
அறிவைக் கெடுக்காத
அற்புத மது;

விருட்சமாய் -
வளர்ந்தவர்க்கும்;
சின்னச்சின்னத் துளிர்விட்ட -
செடிகளுக்கும்;

அது -
பொது!

●●●

'கந்தர்வ கானம்' எனும் - தனது
காவியத்தை...
அந்த
அவையில் தான் -



அமர்ந்து
அரங்கேற்றினார் . . .

திருலோகம்; அதற்குத்
தரலாம் பரிசாய் - மூன்றில்
ஒரு லோகம்!

அற்றை நாளில் -
அந்த அவையின்கண். . .

தமியேனும் இருந்து -
தமிழ் கேட்டேன்; அன்றேஎன் -
செவி வங்கியில் -
சேமித்துப் போட்டேன்!

சீதாராம் -
சமைத்த -

'கந்தர்வ -
கானம்' போல் - ஒரு
காவியத்தை - இந்நாளில்
கேட்பது அரிது;
அது
அவ்வளவு பெரிது!

●●●

அஞ்சு -
ஆறுகள் பாயும் -

ஊரில் - அவர்
உதித்தார்;
அஞ்சுக்கும்
ஆறுக்கும் பாடாமல் - தன்
நெஞ்சுக்கும்
நினைவுக்கும் பொருத்தமான ...

வாய்மை
வழுவாது -
பாடுவதையே - அவர்
பெருந்தனமாய் மதித்தார்!

கதர்தான்
கட்டுவார்;
தேசியத்திற்கும்
தமிழுக்கும் - ஒரு
பலமான உறவிருப்பதைத் - தன்
பாட்டில் சுட்டுவார்!
திருவையாறு லோகநாத சாஸ்திரி -

தரணிக்குத் -

தந்த
தனிச் சீதனம் அவர்;
சீதாராமனுக்கு -
செந்தமிழைத் தவிர -
காணும் மொழியெலாம் -
கரிக்கும் உவர்!

●●●

தீந்தமிழ்க் கவிஞர் -
திருலோக சீதாராமன்...

கு.ப.ரா.;
ந. பிச்சமூர்த்தி;
சிட்டி;

எனப்படும் -
எழுத்து ஜாம்பவான்கள் போல்...

ஏட்டு மொழியாக
ஏரார்ந்த தமிழையும்; தனது -
வீட்டு மொழியாக
வண்ணத் தெலுங்கையும்;

எஞ்ஞான்றும்
ஏற்றவர்; எனினும்
நற்றமிழில்தான் - கவிதைகள்
நோற்றவர்!

●●●

அவர் -
அனேக காவியங்களை -
அருந்தமிழில் யாத்தார்; ஒருநாள் -
ஆவி நீத்தார்;
தான் மரித்தாலும் -
தமிழ் மரிக்காமல் -
கண்ணே போல் - அதைக்
கடைசிவரை காத்தார்!

(இன்னமும் இருக்கின்றார்கள்)



"ஏய்... நிறுத்து பாட்டை... உள்ளே போ.. கண்ணகி வேஷக்காரியை வரச் சொல்லு.."

"அதுக்கு அரைமணி நேரமாகுங்க..."

"எதுக்காம் அரைமணி?"

"அந்த வேஷத்தையும் நான்தானே போடணுங்க..."

# டூரிங் டாக்கீஸ்



அந்த நாள் சினிமா இதழ்களில் வெளிவந்த சில ஜோக்குகள்...

நிருபர் : "நீங்கள் நடித்த முதல் படம் எது?"

நடிகை : "நான்தான் முதல் படத்தில் நடிக்கவேயில்லையே..."

-ராமு



# இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்

## 99. பம்மல் சம்பந்த முதலியார்

விஜயரங்க முதலியார் -
வேட்ட வேள்விப் பயனாய்;
அன்னையார் மாணிக்கம்மாள் -
ஆற்றிய நோன்பின் பரிசாய்;

அவர்களது
அன்பு மகனாகச் -
சனித்தார்
சம்பந்தர்; அவர் -
சனிக்கையிலேயே - ஓரளவு
செல்வந்தர்!

பூர்வீகமான ஊர் -
பம்மல் என்பதால்...

அது -
அவர் பெயரோடு -
ஒட்டிக் கொண்டது; அவரால் -
ஒல்காப் புகழைக் கண்டது!

●●●

சம்பந்த முதலியார் -
சரஸ்வதி கடாட்சம் மிக்கவர்;
சகல கலா
சம்பன்னர் - என்று
தமிழ் மாந்தர்
தொழத் தக்கவர்!

சட்டம் படித்தார்;
சபையேறி நடித்தார்;
மேலை நாட்டு
மகோன்னதமான -
நாடக ஆசிரியர்களுக்கு
நிகராக...

அவரும்
அற்புதமான -
நாடகங்களை
நற்றமிழில் வடித்தார்;
'நாடகத் தந்தை' என
நாடே துதிக்கும்படி -
தனக்கென - ஒரு
தனியிடத்தைப் பிடித்தார்!

பகற்
பொழுதில்...
வக்கீலாக -

## கவிஞர் வாலி

**சென்ற நூற்றாண்டில்,
தமிழ் மண் தரணிக்கு வழங்கிய
மகத்தானவர்களின் மகோன்னத வரலாறு!**

தினமலர் 28.10.2003



வழக்கு ஆடுவார்;
விளக்கு -
வைத்தால்...

மக்கள்
மூக்கின் மேல் -
விரல் வைக்கும்படி
வேஷம் போடுவார்!

●●●

நாடக
நடிகர்களை - சமூகம்
கூத்தாடிகள் - என்று
கூறிய காலத்தில்...

உயர்குடியில்
உதித்த ஒருவர்;
வழக்கறிஞர் தொழிலில் - தன்
வித்தகத்தைப் பதித்த ஒருவர்;

அறிவு;
அந்தஸ்து;
ஆகியவற்றை
அறவே புறந்தள்ளி...

மேடையேறி -
மணித்தமிழ் வசனங்களை -
முழங்க
முடியுமா -
முகத்தில்
முத்துவெள்ளை பூசிய
கோலத்தில்?

●●●

சம்பந்த முதலியார் - அந்தச்
சாதனையைச் செய்தார்;
இயல் இசை நாடகம் - என
இசைக்கப் பெறும் -
மூன்று தமிழில்
மூன்றாம் தமிழுக்கு -

வாய்த்திருந்த
வசையை -
முதலியார்தான் - பெரிதும்
முயன்று கொய்தார்!

●●●

கனவான்களையும் -
தனவான்களையும் -
உற்ற துணையாய்
உடன் வைத்துக் கொண்டு -

சென்னையம் பதியில் -
'சுகுணவிலாச சபா' எனும் -
நேர்த்தியான
நாடகக் குழுவை...

பம்மல் முதலியார்தான் -
பிள்ளையார் சுழி போட்டு -
அற்றை நாளில்
ஆரம்பித்து வைத்தவர்;
நாடக நங்கைக்கு
நவீன ஆடை தைத்தவர்!

●●●

நின்றால் பாட்டு;
நடந்தால் பாட்டு;
என்று
ஏராளமான -
பாட்டுக்களையே
பிரதானமாகக் கொண்டு -

நடந்து கொண்டிருந்த
நாடகக் கலையின் நிறத்தை -
முதலியார் தான்
மாற்றினார்;
உயரிய
உரையாடல்களையும் -
சமூக அவலங்களைச்
சுட்டும் காட்சிகளையும் -
ஏந்திநின்ற கதைகளை - மேடை
ஏற்றினார்!

●●●

அவர்
ஆக்கி அளித்த -

நாடகங்கள் எல்லாமே
நெஞ்சைத் தொடும்;
எத்துணை
எழுதினார் - என
நாம் கணக்கிட்டால் - அவை
நூறைத் தொடும்!

மறக்க முடியுமா -
'மனோகரா' நாடகத்தை?
முதலியாரே -
முழங்கினார்...

மனோகரன் வேடத்தை ஏற்று -
மன்னவன் சபையில் -
வீர வசனங்கள் மூலம்
விழுமிய நற்கருத்தை!

'சபாபதி'
சம்பந்த முதலியாரின்...

நகைச்சுவை
நாடகம் -
இருபதாம் நூற்றாண்டின்
இருபதுகளில் -

சக்கைப் போடு போட்டது;
சிரிப்பொலி எட்டூருக்குக் கேட்டது!

'சபாபதி'யும் 'மனோகரா'வும் -
சினிமாக்களாக வந்தன;
ஏவி.எம். -
ஜூபிடர் -
இவ் விரண்டு ஸ்தாபனங்களுக்கும் -
இணையற்ற புகழைத் தந்தன!

●●●

சமூக
சீர்திருத்தங்களிலும்...
முதலியார்
முன் நின்று -
ஆற்றிய பணிகள்
அனேகம்;

மக்களிடையே -
மதுவிலக்கு பற்றிய -



அவசியத்தைக் கூற
அவர் பட்ட பாடுகளும்;

கபாலீஸ்வரர்
கோயிலின்
அறங்காவலராக
அமர்ந்து -

ஆலயத்திற்கு
அவர் சேர்த்த பீடுகளும்;
அடடா! ஒன்றா? இரண்டா?
அமோகம்!

●●●

அன்று
அருந்தமிழ் நாட்டில் -
குன்றனைய புகழ்
கொண்டிருந்த...

வக்கீல்கள்;
வைத்தியர்கள்;
வணிகர்கள்;
விடுதலைப் போராளிகள்;
என இருந்த -
ஏகப்பட்ட பேர்கள்...

முதலியார் நாடகத்தில்
முத்துவெள்ளை பூசியவர்கள்;
அவரது
அற்புதமான - தமிழ்
உரையாடல்களை
உணர்ச்சியோடு பேசியவர்கள்!

●●●

மத்திய அரசு -
முதலியாருக்கு...
'பத்மபூஷண்'
பட்டத்தைத் தந்து



பெருமைப் படுத்தியது; அவருக்குப்
புகழாடை உடுத்தியது!
ஒழுக்கமாக
வாழ்ந்தவர்தான் முதலியார்;
ஆயினும்
அவரையும் விடவில்லை மறலியார்!

அகவை எண்பத்து மூன்று -
ஆனவுடன்...
முதலியாரின் ஜீவித நாடகம் -
முடிவுக்கு வந்து -
திரை விழுந்தது; அவர் புகழ் -
தென்பொதிகை அளவு எழுந்தது!

## 100. வி.கோபாலகிருஷ்ணன்

இருபதாம் நூற்றாண்டின் -
இடைப்பட்ட காலத்தில்...

படித்துப்
பட்டம் பெற்ற - ஒருசில
ஆடவர் பெண்டிர்
அனைவரும் சேர்ந்து -

'மெட்றாஸ் ப்ளேயர்ஸ்' என்று -
மன்றம் ஒன்று தொடங்கி...

ஷா;
ஷேக்ஸ்பியர்;
ஆகியோரது
ஆங்கில நாடகங்களை -

அரங்கம் ஏற்றி
அற்புதம் நிகழ்த்தினர்;
பார்வையாளராக வந்த
பல நாட்டினரையும் - தமது
நேர்த்தியான நடிப்பால்
நெகிழ்த்தினர்!

•••

ஒருநாள் -
ஒரு நன்மாலைப் போதில்...

மெட்றாஸ்
மியூசியம் தியேட்டரில் -

அந்த
ஆங்கில நாடகம் நடந்தது;
வில்லியம் ஷேக்ஸ்பியரின் -
விரல்கள் புனைந்த -
'ஒதெல்லோ'வில் -
ஒதெல்லோவாகத் தோன்றிய -
ஒருவனின்
ஒப்புமையில்லா நடிப்பில்...

சபை மொத்தமும் -
சொக்கிக் கிடந்தது!

அந்த வேடத்தில்
அகில உலகப் புகழ்பெற்ற -
லண்டன் மாநகரத்து
'லாரன்ஸ் ஒலிவிய'ரையே -
தன் நடிப்பால் - அந்தத்
தமிழ் மகன் எச்சரிக்கிறான்;

ஆங்கிலத்தை
அவ்வளவு
அநாயாசமாக
அவன் உச்சரிக்கிறான்!

அந்த
அரிய நடிகன்தான்...

'கோபி' என்று
கோடம்பாக்கத்தார் -
வாஞ்சையொடு
விளிக்கும்...

வி.கோபாலகிருஷ்ணன் எனும் -
வித்தகன்;
அன்னை
ஆனந்தம்மாள் - காத்த
விரதத்தின் பயனாய்
விளைந்த மகன்!

•••



காலை நேரங்களில் -
காணலாம் -
வைகலும் - கோபியின்
வீட்டு முற்றத்தில்...

பொதுவுடைமைச் சிந்தனைகள் -
பொலிய நின்ற...

எம்.பி. சீனிவாசனை;
நிமாய் கோஷை;
ஜய காந்தனை;
எம்.எஸ். கண்ணனை;
கோ.வி. மணிசேகரனை;
கோமல் சாமிநாதனை;

இன்னும்
இதுபோன்ற -
அறிவு
ஆர்ந்த ஒரு கூட்டத்தை;

கோலாகலமான
கோபியின் வீட்டிற்கு -
உவமையாகக் கூறலாம்
உயரிய -

புள்ளினங்கள்
புலரியில் கூடும் தோட்டத்தை!

அன்னணம்
ஆரையும் -
ஈர்க்கவல்ல
ஈரநெஞ்சம் உடைய -

கல்விமான்;
கண்ணியவான்;
எவர்க்கும்
எஞ்ஞான்றும் -
ஏணியாய்த் தோணியாய்
ஏற்றமொடு வாழ்ந்த -

கோபி; அந்த

கோபி அறியாத சொல் 'லோபி'!

வானைப் போல்
விரிந்த மனம்;
உறுகண்
உறுவார்க் கெலாம் -
உடுக்கையிழந்தவன் கைபோல்
உடனே உதவும் குணம்!

●●●

மனிதர்கள்
மத்தியில் -
நடிகர்களா யிருப்போர்
நிறைய உண்டு;
நடிகர்கள்
நடுவில் -
மனிதரா யிருப்போர்
மிகக் குறைவு; ஒன்றிரண்டு!

நடிகர்களில் -
நான் பார்த்த முதல் மனிதன்...
கோபி எனும்
குணக் குன்று; இதைக் -
கூறுவேன் நான் - எந்த
கோபுரத்தின் மீதும் ஏறி நின்று!

●●●

பத்து வயது -
பாலகனா யிருக்கையிலேயே...

பி.யூ. சின்னப்பா -
பி. கண்ணாம்பா -
இருவரும்
இணைந்து நடித்த...

அற்புதமான படம் - ஜெமினி
'அரிச்சந்திரா'வில் -
கோபியின் நடிப்புக்குக்
கால்கோள் விழா நடந்தது; பின் -
'மிஸ் மாலினி'யில் - அவனது
மெருகேறிய நடிப்பு -
மக்கள்
மனங்களில்...

பலநாள்
பதிந்து கிடந்தது!

●●●

கோபிதான் - முதல்



கதாநாயகன் -
பின்னாளில்
படவுலகில்
பிரகாசித்த - நடிகை
பத்மினிக்கு;

சாட்சி
சொல்ல -
'ஏழை படும் பாடு'
எனும் படமிருக்கு!

●●●

'காத்திருந்த கண்கள்'
'நெஞ்சிருக்கும் வரை'
'பாசவலை'
'ஹலோ! மிஸ்டர் ஜமீன்தார்'
என
ஏராளமான படங்களில்...

அய்ம்பது
ஆண்டுகளுக்கும் மேலாக - தன்
இயல்பான நடிப்பால்
இசை பெற்றவன்;
எம்.ஜி.ஆருக்கும் -
சிவாஜிக்கும் -
அந்தரங்க நண்பன் - எனும்
அந்தஸ்து உற்றவன்!

●●●

சகஸ்ரநாமத்தின் -
சேவாஸ்டேஜ் நாடகங்களான -

'போலீஸ்காரன் மகள்'
'வடிவேலு வாத்தியார்'
'பிரசிடெண்ட் பஞ்சாட்சரம்'
'மல்லியம் மங்களம்'
என்று -
ஏராளமான கதைகளில் -

கோபியைக்
காணலாம்; அவனது
இயற்கை நடிப்பைக் கண்டு
செயற்கை நடிகர்கள் நாணலாம்!

●●●

அமெரிக்க அரசு - கோபியை
அன்பு விருந்தாளியாக -
தனது
தேசத்திற்கு அழைத்தது;

அதனால்
அயல்நாட்டில் - ஒரு
தமிழனின்
தகவு தழைத்தது!

படங்களை விடவும் -
பெரிதும் -
நாடகத்தைத்தான் - அவன்
நேசித்தான்;
நாரதகான சபாவில்-தொடர்ந்து
நூறு நாள்கள் -
நாடகம்
நடித்து நடத்தி -

மேடைக் கலையை
மனமாரப் பூசித்தான்!

அரங்கில்
ஆறுபேர் இருந்தாலும் சரி;
ஆறு
நூறுபேர் இருந்தாலும் சரி;

ஒரேமாதிரியாக நடிப்பான்; ஓர்
ஒச்சமின்றி முடிப்பான்!

●●●

அவனது முயற்சியால் -
அற்றை நாளில்...

படத்தில் - முதல்
பாட்டெழுதும் வாய்ப்பைப்
பெற்ற -
பாடலாசிரியர் இருவர்;

ஆம்!
அந்த இருவரில் -
கண்ணதாசன் ஒருவர்;
வாலி மற்றொருவர்!

- நிறைவு பெறுகிறது

# வாலி நீர் வாழி!

கவிஞர் வாலியின் செஞ்சொல் கவியின் பத்துடன் வெளிவந்த 'இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்' தொடர் மிகமிகச் சிறப்பானது. இலக்கியச் செழுமையும், வரலாற்று மேன்மையும் ஒருசேரப் பரிமளிக்கும் பண்புமிகு படைப்பு. குறிப்பாக, 93. புத்தங்கோட்டகம் ஸ்ரீனிவாசார்ய ஸ்வாமி, 94. முக்கூர் லட்சுமி நரசிம்மாச்சாரியார் அறிமுகம் ஆத்திக உலகிற்கும் அளித்துள்ள சநாதன ஞானசம்பத்து. வாலி நீர் வாழி!



**-ர.சௌரிராஜன், சென்னை-78.**

தொடருக்கு வாலி உடல் கொடுத்தார் என்றால் உயிர் கொடுத்தது 'மணியம் செல்வன்' அவர்களாயிற்றே. 100 படங்களையும் தத்ரூபமாக வரைந்து, அவர்களைக் கண்முன் நிறுத்தியதைப் பாராட்ட எனக்கு கடித வரிகள் போதாது.

**-வர்த்தனி ராமசந்திரன், சென்னை-61.**

'இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள்' என்று நூறு பேர்களை தன் புதுக் கவிதைகளில் அடையாளம் காட்டிய கவிஞர் வாலிக்கும் பிரசுரித்த குமுதம் ஜங்ஷனுக்கும் தமிழ்கூறும் நல்லுலகம் கடமைப்பட்டிருக்கிறது. அடுத்த நூறு பேர்களையும் அவர் அடையாளம் காட்டலாமே! சந்திப்புக்கு ஜங்ஷன்தான் இருக்கிறதே!

**-கவிஞர் அய்யாறு வாசுதேவன், சென்னை-14.**

ஆயிரக்கணக்கில் தமிழுக்கும், தமிழர்க்கும் தங்களது உழைப்பை வழங்கி இருப்போரில் ஒரு நூறு பிரபலங்களைத் தேர்வு செய்து கவிதை வரிகளாய் வழங்கிய வாலி அவர்களைப் பாராட்டி மகிழ்கிறேன்.

**-ப. மூர்த்தி, பெங்களூர்-72.**

செஞ்சுரியோடு நிறுத்திக் கொண்டாலும் வாலி எங்கள் இதயத்தில் இன்னமும் இருக்கின்றார், இருப்பார்!

**-திருமதி. சுகந்தி நாராயணன், சென்னை-39.**

கவிஞர் வாலியும், ஓவியர் மணியம் செல்வனும் தீட்டிய கவி(தை)ச் சித்திரம் என்றும் நிரந்தரமாய் நெஞ்சில் ஒரு அசையா இலக்கியச் சுடராக ஒளிவீசிக் கொண்டிருக்கும்.

**-லெமூரியன், திருவண்ணாமலை.**

ஸ்ரீ ராமனுக்கு நன்றி  
ஸ்ரீ ரங்கன் கிடைத்ததற்கு  
ஸ்ரீ ரங்கத்துக்கு நன்றி  
ஸ்ரீ வாலி கிடைத்ததற்கு!

**-ஆர். ஸ்ரீனிவாசன், பெங்களூர்.**